

# செலவழிப்பதைவிட சேமிப்பதே மிக அத்தியாவசியம்!

இக்காலத்தில் சேமிப்பது கடினமென்றாலும், சேமிப்பு ஒரு அத்தியாவசியத் தேவை. ஒவ்வொரு சம்பள தினத்தன்றும், சிறு தொகையையாகிலும் பாங்கில் போடுவதென்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள். இந்தப் பணம் உங்கள் அவசரத் தேவைக்கு உதவும். அது மட்டுமல்ல, அதனால் உங்கள் எதிர்காலம் பத்திரமானதாக இருக்கும். பாங்க் ஆஃப் பரோடாவில் உங்கள் தேவைக் கேற்றபடி பலவித சேமிப்புத் திட்டங்கள் உள்ளன. உங்கள் அருகிலுள்ள பாங்க் ஆஃப் பரோடாவின் காரியாலயத்திற்கு இன்றே செல்லுங்கள்.

★ சேவிங்ஸ் பாங்க் அக்கௌண்டு: 3% வட்டி கிடைக்கும்.

★ சிறுவர்கள் சேவிங்ஸ் அக்கௌண்டு: இதை 14 வயதுக்கு மேற்பட்ட சிறுவர்கள் தாமாகவே நடத்தலாம்.

★ ரெக்கரிங் டெபாஸிட் அக்கௌண்டு: ரூ. 10ன் பெருக்குத் தொகையான ஒரு குறிப்பிட்ட தொகையை 46, 86 அல்லது 120 மாதங்களுக்குப் பிரதி மாதமும் கட்டிவர வேண்டும். வருஷத்திற்கு 4½% கூட்டுவட்டி.

★ ஃபிக்ஸட் டெபாஸிட் அக்கௌண்டு: ஒரு வருஷத்திலிருந்து ஐந்து வருஷ காலத்துக்கு ஏற்றுக்கொள்ளப் படுகின்றது. வருஷத்திற்கு 5% வரை வட்டி; வட்டித்தொகை ஆறுமாதத்திற்கொரு முறை அளிக்கப்படும்.

★ காஷ் சர்டிபிகேட்டுகள்: 3 வருஷ ரூ. 100 சர்டிபிகேட்டுக்கு ரூ. 88.29 மட்டுமே. 5 வருஷ ரூ. 100 சர்டிபிகேட்டுக்கு ரூ. 79.25 மட்டுமே.

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற எங்கள் இலவச புத்தகத்தில் எல்லா விவரங்களும் உள்ளன. இதைப் பெற இன்றே கேட்டு எழுதுங்கள்.

**தி பாங்க் ஆஃப் பரோடா லிட்.**

(ஸ்தாபிதம்: 1908) தலைமைக் காரியாலயம்: பரோடா

JWT-BB-[illegible]



ஏன் பெண்டெக்ஸ் ஸ்ட்ராப்புகள்



...ஏனென்றால், பல்லாண்டுகளாக
நடத்திய ஆராய்ச்சியின் பலனாகத்
தயாரிக்கப்பட்டது பெண்டெக்ஸ்.
நேர்த்தியான அதன் தோற்றம்,
தேர்ந்த வேலைப்பாட்டுடன்
தரத்திலும் சிறந்து விளங்குகிறது.
முற்போக்கான கலை நுணுக்கத்
திறனுடன் பலமாதிரி டிஸைன்களில்,
தங்கமுலாம் பூசிய, ஸ்டெயின்லெஸ்
ஸ்டீல், நைலான், பிளாஸ்டிக் மற்றும்
தோல் ஸ்ட்ராப்கள் கிடைக்கின்றன

வாங்குவதற்கு முன்பு 'Bentex' மார்க்கை பார்த்து வாங்குங்கள்

CREATIVE UNIT-14

ஆகஸ்ட் 2 முதல்

சென்னை.. காஸினோ
உமா

மற்றும் தென்னகமெங்கும்

மனோஹர் பிக்சர்ஸ் - மதராஸ்

# நெஞ்சம் மறப்பதில்லை

திரைக்கதை - வசனம்
டைரக்ஷன்
ஸ்ரீதர்



| ஒளிப்பதிவு | இசை | பாடல்கள் | தயாரிப்பு |
| --- | --- | --- | --- |
| வின்சென்ட் | விஸ்வநாதன் - ராமமூர்த்தி | கண்ணதாசன் | M.S.காசி |

ELEGANT

Rights Controlled by: PICTURE FINANCIERS, MADRAS-10

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, ஆடி 26உ • ஆகஸ்டு, 11உ 1963.



படவிளக்கம்
29-ம் பக்கம் பார்க்க.



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

புகைபிடிக்கும் இங்கிதம்

# புகை விடு தூது!

காரியத்துடன் ஒருவரை அவரது அலுவலகத்தில் காண நேரும் போது, உங்கள் வரவை அறிவிக்கப் பெரியதொரு புகைப்படலம் எழுப்பிக் காட்டவோ, வந்ததற்கு அறிகுறியாக கணக்கற்ற சிகரெட்டுத் துணுக்குகளையும் தீக்குச்சிகளையும் சிதறவிட்டுச் செல்லவோ தேவையே இல்லை.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் — இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 613 TAM.

[illegible]' Advtg.



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 2

# என் முரண்பாடு

ராஜாஜி

ஐம்பது வருஷங்களாக இருந்து வருகிற பிரச்னைகளில் கொஞ்சமும் மாறுத லின்றி ஒரே கொள்கையை நான் கடைப்பிடித்து வருவதாகச் சொன்னேனானால் அது பேதைமையாகும். மதியுள்ளவன் எவனும் அந்தப் பெருமையைக் கோர முடியாது. இந்தியாவின் ஆட்சிமொழி பற்றி இன்று நான் கொண்டுள்ள கருத்தானது நீண்ட கால அநுபவத்தின் மேலும், பரிசீலனையின் மேலும் பரிணமித்து உருவானதாகும். என்னை ஆதரிப்பவர்களும் எதிர்ப்பவர்களும் இரு சாராருமே ஒருவர் தனது கருத்துக்களை ஒரு போதும் மாற்றிக் கொள்ளக் கூடாது என்றும், அப்படி மாற்றிக் கொள்கிறவரின் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்க வேண்டியதில்லை என்றும் வாதித் தால் அந்த வாதம் சரியல்ல.

என்றாலும் ஆட்சி மொழி விஷயத்தில் என் கருத்துக்களில் ஒரு மாறுத சத்தியவாதமும் தத்துவமும் உண்டு என்பது என் அபிப்பிராயம். மேலெழுந்தவாரி யாக மாறுபாடுகள் காணப்பட்டாலும், என் கருத்துக்கள் எல்லாம் அடிப்படையில் இணைந்தே உருவாயுள்ளன. ஆயினும் இந்த அம்சத்தை நான் வலியுறுத்த விரும்பவில்லை. ஏனென்றால், ஆட்சி மொழி விஷயத்தில் நான் முரண்பாடு இல்லாமல் ஒரே உறுதியுடன் இருந்து வருகிறேன் அல்லது இல்லை என்பதல்ல இன்று நம் பிரச்னை. என் முரண்பாடான முன்னைய அபிப்பிராயத்தைத் தள்ளுங்கள். இப்போது நான் கொண்டிருக்கிற கருத்தே சரியானது என்பது என் வாதம். முன்பு நான் சொன்னவை இப்போது நான் சொல்வதற்கு முரண்பட்டிருந்தால் அவற்றைத் தள்ளிவிட வேண்டும்; இப்போது நான் சொல்வதையே ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கருத்தை மாற்றிக் கொள்ளவே கூடாது என்று சொல்வது காங்கிரஸ் தலைவர் விஷயத்திலும் பொருந்துமா என்பதை ஆராய்ந்து பார்த்தால், 1950-ம் ஆண்டில் அவர்கள் அங்கீகரித்த அதே அரசியல் சாஸனத்தை இந்தப் பதின்மூன்று ஆண்டுகளில் அவர்கள் பதினேழு முறை மாற்றியிருப்பதும் முரண்பாடுதானே? அதிலும் அடிப்படை ஷரத்துக்கள் பலவற்றையும் மாற்றியிருக்கிறார்கள். அடிப்படை விஷயங்களிலுங்கூட கருத்தை மாற்றிக் கொள்வதற்குக் காங்கிரஸ் தலைவர்கள் உரிமை பெற்றிருந்தால், நானும் அந்த உரிமையை ஓரளவு கோரலாம் அல்லவா?

1928-ம் ஆண்டில் ஹிந்தி ஸ்வபோதினி ஒன்றுக்கு நான் எழுதிய முன்னுரையை இப்போது எனக்கு எடுத்துக் காட்டுகிறார்கள். அன்று நிலைமை வேறு. இன்று விண்வெளி பாண விமான யாத்திரிகர்களுக்குச் சந்திரன் எவ்வளவு எட்டாக் கையில் இன்னும் இருந்து வருகிறதோ அவ்வளவு எட்டாக் கையில் பாரத ஸ்வராஜ்யம் இருந்த காலம் அது. என்றாலும் அப்போதே நான், சுதந்திரம் பெற்றால் ஹிந்தி மக்கள் தங்கள் மொழியைப் பிரதானமாக்க எவ்வளவு ஆவேசமாக இருப்பார்கள் என்பதை எதிர்பார்த்தேன். அப்போது தென்னிந்தியர்கள் நஷ்டமும் கஷ்டமும் படக்கூடாது என்பதற்காகவே ஹிந்திப் பிரசாரத்தில் ஈடுபட்டேன். 'தேசப் பற்று என்ற பெயரில் ஹிந்தி அமுலாகும்; இப்போது அம் மொழியைப் படிக்காவிட்டால் பிற்பாடு கஷ்டத்துக்கு

ஆளாவீர்கள்' என்று இளைஞர்களுக்கு நான் சுட்டிக் காட்டினேன். ஸ்வ போதினி முன்னுரை எழுதிப் பத்து ஆண்டுகளுக்கு அப்புறம் நான் சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக இருந்த காலத்தில் இந்தக் காரணத்துக்காக ஸெகண்டரி பள்ளி வகுப்புக்களில் ஹிந்தி கற்பிக்கச் செய்தேன். பரீட்சையில் ஹிந்தியில் பாஸ் செய்யா விட்டாலும், மற்றப் பரீட்சைகளின் முடிவைப் பொறுத்து மாணவர்கள் மேல் வகுப்பு செல்லலாம் என்று ஏற்பாடு செய்தேன். இதை அரசியல்வாதிகளில் ஒரு சாரார் தீவிரமாக எதிர்த்தார்கள். உக்கிரமான ஓர் இயக்கமும் தொடங்கினார்கள்.

ஹிந்தி படிப்பதைப் பற்றிப் பிரசாரம் செய்யப் புகுந்த நான் இன்று ஹிந்தியை எதிர்க்கிறேன் என்றால் அதற்குக் காரணம் என்ன? ஹிந்தியைத் தென்னிந்தியாவில் தகுந்த அளவில் பரப்ப முடியவில்லை; முடியாது என்பதுதான். கட்டாயமாக ஹிந்தியைத் தென்னாட்டில் திணிக்கிற காரியம் நியாயமில்லை. அது பலிக்கவும் பலிக்காது என்று நான் இன்று கண்டேன். ஹிந்திப் . பிரசாரத்தில் என்னுடைய முயற்சிகள் பலிக்கவில்லை. எனவே நான் நேர்மையின் பேரிலும், நியாயத்தின் பேரிலும் இன்று ஆட்சி மொழிச் சட்டத்தை எதிர்க்கிறேன். நான் முரண்பாடில்லாமல் இருப்பதாகக் காட்டிக் கொள்வது பெரிதல்ல. நேர்மைக்காகவும் நியாயத்துக்காகவும் போராடுவதே தருமம் என்பதை உணர்ந்து ஹிந்தியை ஆட்சிமொழியாக்குவதை எதிர்க்கிறேன்.

நான் ஹிந்தியைப் படிக்கச் சொன்ன காலத்தில் அரசாங்கத்தின் அதிகாரம் இன்று போல் விரிந்து விசுவரூபம் எடுக்கவில்லை. மத்திய சர்க்காரின் அலுவல்கள் அப்போது மிகவும் குறைவு. இப்போது மத்திய சர்க்காரின் அலுவல்கள் மக்களுடைய வாழ்க்கையின் மூலை முடுக்குகளிலெல்லாம் துழாவிச் செல்லுகின்றன. ஆனபடியால் பழைய சூழ்நிலையில் ஒப்புக் கொள்ளக் கூடிய ஆட்சி மொழித் திட்டத்தை இப்போது ஏற்பதற்கில்லை. அந்த நாளில் கிரீக், லத்தீன் அல்லது சம்ஸ்கிருத மொழியிலோ கூட மத்திய சர்க்காரின் நிர்வாகம் ஏற்பட்டாலும் யாருக்கும் கஷ்டம் ஏற்படாது. இன்றைய நிலை முற்றிலும் வேறு.

முரண்பாடில்லாமல் மக்கள் இருக்க வேண்டியதே பிரதானமானாலும் பொது வாழ்வில் வறட்டுப் பிடிவாதம் என்பதே சட்டமாகிவிடும். இது ஓர் உன்மத்த முடிவாகும். என் கொள்கை ஒன்றாயினும் மற்றக் கொள்கைகளுக்கும்



நேருஜி நாட்டு வைத்தியரைக் கலந்தாலோசிக்கிறார் !




என்னால் தகுந்த அளவில் இடமளிக்க முடிகிறது; சத்தியத்துக்கும் தேச நலனுக்கும் விரோதமில்லாமல் என்னுடைய கொள்கைகளை மாற்றிக்கொள்ள என்னால் முடிகிறது என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

ஹிந்திப் பிரச்னையில் ஒரு பெரும் பகுதி மக்கள் தீவிரமாக அதை ஆதரித்து நிற்கிறார்கள்; ஹிந்தியை ஆதரிப்பதே தேசபக்தி என்று அவர்கள் இடமாக நினைக்கிறார்கள். அவர்களுக்கு எதிராக நாட்டில் இன்னொரு பெரும் பகுதி மக்கள் மறுக்க முடியாத ஆட்சேபணை தெரிவித்துத் திரண்டிருக்கிறார்கள். இப்படி நாட்டு மக்கள் இரண்டு பிரிவாக நிற்கும் ஒரு பிரச்னை சாமானியமானதல்ல. ஆனபடியால் இந்தப் பிரச்னையில் ஒரே கொள்கையை உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது முறையல்ல. இந்தப் பிரச்னைக்கு ஒரு நியாயமான முடிவு காண வேண்டும் என்ற நம்பிக்கையின் மீதே நான் இந்தக் காலத்துச் சூழ்நிலைக்கு ஏற்ற முறையில் என் கருத்துக்களை உருவாக்கி வந்திருக்கிறேன். இந்தப் பரிணாமத்தை மக்கள் உள்ளபடி புரிந்து கொள்வார்கள் என்றும், சுயநல சந்தர்ப்ப வாதம் என்று நினைக்க மாட்டார்கள் என்றும் நம்புகிறேன்.

பல மொழிகளைப் பேசினாலும் இந்த நாட்டில் வாழுகிற நாம் எல்லோரும் ஒரே இனம்தான். ஒவ்வொரு மொழியினரும் ஒரு தனி இனம் என்று நினைப்பது சரியல்ல. பல மொழி பேசுகிறவர்கள் ஒரே இனத்தவராக இருப்பதுண்டு. பல இனத்தவர்கள் ஒரே மொழியைப் பேசுவதும் உண்டு. ஆனபடியால் மொழிக்கு நாம் அளிக்கிற அர்த்தமில்லாத முக்கியத்தை விட்டு, வேறு விதங்களில் நாட்டின் ஐக்கியத்தை ஏற்படுத்த முயல வேண்டும்.

## என்ன சேதி ?

**பாராட்டுகிறோம் :**

“காங்கிரஸ்காரர்களில் சிலரிடையே நேர்மையில்லை; நாணயமுமில்லை. 1947-ல் ‘பாப்பர்’களாக இருந்தவர்கள் இன்று கோடீஸ்வரர்களாக இருக்கிறார்கள். அரண்மனை போன்ற கட்டடங்களில் வசிக்கிறார்கள். தொழிற்சாலைகள் வைத்திருக்கிறார்கள். இவ்வளவு பெரிய வருமானத்துக்கு வழி என்ன என்று தெரியவில்லை!” *(தினமணி, 2-8-63)*

இப்படி நாம் சொல்லுகிறோம் என்றாவது அல்லது எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் யாரோ பேசியிருக்கிறார்கள் என்

ரூவது என்னுதிர்கள். இன்று காங்கிரஸ் அக்கிராசன பீடத்தை வகிக்கும் ஸ்ரீ டி. சஞ்சீவய்யாதான், காங்கிரஸில் புரையோடியுள்ள ஊழலைப்பற்றி வயிறு எரிந்து பேசியிருக்கிறூர். பெரும் காங்கிரஸ்காரர்களெல்லாம் இந்தத் திடீர் செல்வந்தர்களைக் கண்டுங் காணுதது போல் பாவனை செய்கையில் இளம் வயதினரான ஸ்ரீ சஞ்சீவய்யா சற்றும் தயங்காமல் உண்மையை மொழிந்ததற்குப் பாராட்டுகிறோம். இந்த விஷயத்தைப் பற்றி மறுபடி மழுப்பு அறிக்கைகள் வரக் கூடும். ஆனல் உண்மை உண்மைதான்.

''காங்கிரஸ் என்ன இருந்தாலும்.... காங்கிரஸ் இல்லையா!'' என்று கூறும் அனுதாபிகள் நம்மில் இன்னும் சிலர் இருக்கிறூர்கள். அவர்கள், அக்கிராசனரிஞலேயே தாங்க முடியாத அளவுக்குக் காங்கிரஸ் ஊழல் மலிந்த ஸ்தாபனமாகி விட்டது என்பதை இப்பொழுதாவது உணர்வார்கள் என்று நம்புகிறோம்.

### சமுதாய நலத் திட்டம்

எல்லா விதமான அபிப்பிராயங்களைக் கூறி எல்லாருடைய அனுதாபங்களையும் சம்பாதித்துக்கொள்வதே பிரதமரது வாழ்க்கை வெற்றியின் ரகசியம்.

ஒவ்வொரு சமயம் பிரதமர் பேசும் பேச்சைப் பார்க்கும் போது, இவர் ஆளும் கட்சித் தலைவரா அல்லது எதிர்க் கட்சித் தலைவரா என்ற சந்தேகம் உண்டாகி விடுகிறது.

ஆகஸ்ட் முதல் தேதியன்று சமுதாய நல அபிவிருத்தித் திட்ட மந்திரிகள் மகாநாட்டில் பிரதமர், மிகக் கடுமையான பாஷையையும் பதங்களையும் கையாண்டு பேசியிருக்கிறூர்.

''இன்று கூட்டுறவுச் சங்கங்கள் என்பதன் பெயரில் நடப்பவை யெல்லாம், வெறும் நாடகம், மோசடி'' என்றூர். ''அரசாங்க உத்தியோகஸ்தர்களின் ஆதிக்கத்திலிருந்துகூட்டுறவுச்சங்கங்களை விடுவிக்க வேண்டும்'' என்று கூறினூர்.

''பதினைந்து ஆண்டுகளுக்கு முன், சுதந்திரம்பெற்றுப் பதினைந்தாண்டுகளில் எப் பிரச்னைகள் எல்லாம் தீர்ந்து விடும் என்று கருதினேமோ, அப்பிரச்னைகள் இன்றும் அப்படியே இருப்பதைக் காண வேதனையாக இருக்கிறது; எரிச்சலாக இருக்கிறது; ஆத்திரமாக வருகிறது'' என்றெல்லாம் பேசி யிருக்கிறூர்.

அதற்கும் மேல் பேசியிருக்கிறூர் சமுதாய நல அபிவிருத்தித் திட்ட மந்திரி ஸ்ரீ எஸ். கே. தே. ''தேசத்தில் புது விழிப்பும் உற்சாகமும் ஏற்பட வேண்டும் என்றுல் மக்கட் சக்தியைப் பயன் படுத்துவதற்குப் பிராதான்யம் அளிக்க வேண்டும்'' என்றூர்.

பஞ்சாயத்து ராஜ்யத்தைப் பற்றிப் பேசுகையில், ''இன்றுள்ள நிலை நீடிக்க விட்டால், நாம் ஒழித்த ஐந்நூறு சுதேச சமஸ்தானங்களுக்குப் பதில் ஐயாயிரம் சுதேச சமஸ்தானங்கள்தான் ஏற்படும். சுதேச சமஸ்தானுதிபதிகளுக்காவது ஒழுங்கும் பண்பாடும் இருந்தன. அவை கூட இரா இந்தப் புதிய சமஸ்தானங்களுக்கு!'' என்கிறூர்.

இப்படி இருவரும், சென்ற பதினைந்தாண்டுகளாக நடத்தி வந்த சமுதாய நல அபிவிருத்தித் திட்டங்கள் படு தோல்வி யடைந்து விட்டன என்று ஒப்புக் கொள்கிறூர்கள். அப்படியானுல் அத்திட்டங்களைக் கைவிட வேண்டும்; அல்லது தங்களால் திறமையாக நடத்த முடியவில்லை என்று பதவியைத் துறக்க வேண்டும். இதுதான் ஜனநாயகமுறை. இவை இரண்டையும் விட்டு, தாங்களே ஏதோ எதிர்க் கட்சியினர் போல் பேசுவது மக்களை ஏமாற்றிக் குழப்பத்தில் ஆழ்த்தத்தான் உதவும். உத்தியோகஸ்தர்களை அகற்றி விட்டு நடத்தப்படும் பஞ்சாயத்து ராஜ்யம் காங்கிரஸ் கட்சி ஸ்தாபனங்களே யன்றி வேறல்ல. அதிலும் மட்டரகமான அநியாய ஸ்தாபனங்களாகும்.

### ஜனுதிபதிக்கு ஒரு வேண்டுகோள்

இந்த அவசர கால நிலைமையில் எல்லா சர்ச்சைகளையும் நிறுத்தி வைத்து அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும் என்று ஜனுதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் ஆந்திர சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் பேட்டி கண்ட போது உபதேசம் செய்திருக்கிறூர். அதற்குஆந்திர சுதந்திரக் கட்சித்தலைவர், ஸ்ரீ ஜி. லச்சண்ணு, ''ஐயா! இந்த அவசர காலத்தில் சர்ச்சைக்கும் விவாதத்துக்கும் இடமான விஷயங்களை எடுத்துக் கொண்டு சட்டமியற்றி ஜனங்களின் ஜீவாதார உரிமைகளைச் சர்க்கார்தான் பறிக்கப் பார்க்கிறது. வருகிற மக்கட் சபைக் கூட்டத்தில் கொண்டுவரப்பட இருக்கிற பதினேழாவது திருத்தப் பிரேரணை அப்படிப்பட்டதாகும்!'' என்று பதிலளித்திருக்கிறூர்.

அனுவசியமான சர்ச்சைகளைக் கிளப்புகிறவர்கள் ஆளும் கட்சியினர்தாம் என்பதை ஜனுதிபதிக்கு நினைவுறுத்த விரும்புகிறோம். ஆட்சிமொழி சம்பந்தமாகக் கொண்டுவரப்பட்ட ஹிந்தித் திணிப்புச் சட்டமும், பிரிவினை எதிர்ப்புச் சட்டமும் அனுவசியமாக மக்களின் கசப்பையும் அதிருப்தியையும் வளர்க்கும் சட்டங்களாகும். இவற்றை ஆளும் காங்கிரஸ் கட்சிதான் செய்ததே தவிர எதிர்க்கட்சிகள் அல்ல. ஜனுதிபதிக்குத் தம் அனுதாபத்துக்குத் தகுந்த அதிகாரம் இல்லை. ஆயினும் அவர் நாட்டுக்கு உதவக்கூடும்.



# போகிற போக்கில்..

ஒரு நாள் மகாராஜாவின் கோபத்துக்கு உள்ளானான் தெனாலிராமன். சினந்து கொண்ட மன்னர் "உன் முகத்தை என் முன்னால் காட்டாதே" என்றார். மறு நாள் தெனாலிராமன் தலையிலே ஒரு சட்டியைக் கவிழ்த்துக் கொண்டு வந்து நின்றான் என்பதாகக் கதை.

காங்கிரஸில் ஊழல் புரையோடியிருக்கிறது; மக்களிடம் செல்வாக்கு மங்கி வருகிறது. ஒழுங்காகத் தேர்தல் நடத்தால் காங்கிரஸ் ஒரு சில ஸ்தானங்களைக் கூடப் பிடிக்க முடியாது. இந்த உண்மையை மேலிடத்தாரும் உணர்ந்திருக்கிறார்கள். ஆனால் இதற்கு அவர்கள் பரிகாரம் காண முயல்வதுதான் தெனாலிராமன் கதை போலிருக்கிறது.



மந்திரிகளாக இருப்பவர்கள் பதவியை விட்டு விட்டு ஸ்தாபனத் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டு விட்டால் எல்லாம் சரியாய்ப் போய் விடும் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள்!

காங்கிரஸ் செல்வாக்கை இழந்திருப்பதற்குக் காரணம், தேசத்தில் தலைவிரித்தாடுகிற லஞ்சமும் ஊழலும்தான். இந்த லஞ்சமும், ஊழலும் பெர்மிட், லைசென்ஸ் கோட்டா இவற்றின் அடிப்படையில் உருப் பெறுகின்றன. பெர்மிட்டையும், கோட்டாவையும் உண்டுபண்ணுவது எதுவென்றால் காங்கிரஸ் கையாளுகிற சோஷலிசக் கொள்கைதான். எனவே இந்தக் கொள்கையைக் கைவிடாதிருக்கும் வரையில் லஞ்சமும் ஊழலும் இருந்தாகும். இந்த ஊழல் அரசாங்கத்தில் இருந்தாலும், அரசாங்கத்தில் இருக்கிற கட்சி காங்கிரஸாக இருப்பதினால் அது காங்கிரஸைத்தான் சாருகிறது. எனவே, அரச மரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் சேர்த்துப் பிடித்தது மாதிரியாக ஸ்தாபனத்தையும் சாடியிருக்கிறது. இதுதான் ரகசியம். இந்த ரகசியத்தை உணராது தலைமை ஆட்களை மாற்றினால் அது ஒரு பலனையும் தராது. முகத்தை மறைக்கத் தெனாலிராமன் சட்டியைக் கவிழ்த்துக் கொண்ட கதைதான்!

* * *

அமெரிக்க — பிரிட்டிஷ் கூட்டு விமான ஒத்திகையை இந்தியா ஏற்றுக் கொண்டிருப்பது பற்றி லண்டன் 'டைம்ஸ்' நிருபர் ஒரு ரசமான வியாக்யானம் சொல்லுகிறார். "முன்பு மேலை நாடுகள் பாதுகாப்பு விமானக் குடை என்று கூறிய யோசனைதான் இன்று கூட்டு விமான ஒத்திகை என்ற பெயரில் வந்திருக்கிறது. இந்தியா இதை ஏற்கமுடியாதென்று கூறிக்கொண்டே ஏற்றுக்கொண்டது" என்று நிருபர் எழுதுகிறார்.

இந்த நிருபர் கூறுவது முற்றிலும் உண்மை; மேலை நாடுகளின் உதவியை நாங்கள் நாட மாட்டோம் என்று கூறிக் கொண்டே மேலை நாடுகளின் உதவியை நேரு சர்க்கார் வெகு தீவிரமாகப் பெற்று வருகிறது. இதைப் பகிரங்கமாகச் சொல்லக் கூச்சமாக இருக்கிறது போலும்! அல்லது சொல்லி விட்டால் ராஜாஜியின் வழியில் நேரு வந்து கொண்டிருக்கிறார் என்று யாரும் கூற ஆரம்பித்து விடுவார்களோ என்ற அச்சமும் காரணமாய் இருக்கலாம்! எது எப்படி இருந்தாலும் ராஜாஜியின் யோசனைகள் ரகசியமாகவாவது நிறைவேற்றப்படுவதில் மக்களுக்கு மிக்க மகிழ்ச்சிதான்.

* * *

டாக்டர் சுகர்ணோவுக்கு 'இந்து மகா சமுத்திரம்' என்கிற பெயர் பிடிக்கவில்லையாம்! எனவே கபர்தார் உத்தரவு போட்டுத் தமது கடற்படைத் தளபதி மூலம் 'இந்தோனேஷிய மகா சமுத்திரம்' என்று பெயரை மாற்றியிருக்கிறார். இனி மேல் இந்தோனேஷியாவில் யாரும் 'இந்து மகா சமுத்திரம்' எனக் கூறக் கூடாது. 'இந்தோனேஷியா மகா சமுத்திரம்' என்றுதான் அழைக்க வேண்டும். இப்படிப் பெயரை மாற்றினதினால் உப்பாய் இருக்கும் கடல் சர்க்கரையாய்த் தித்திக்குமா என்று யாரும் கேட்காதீர்கள். ஒரு மாறுதலும் ஏற்படப் போவதில்லை. ஆனால் சுகர்ணோவின் பற்று முதிர்ந்த நிலை வேண்டுமானால் திருப்திப்படலாம். ஆனால் அவரைத் தவிர பாக்கி வேறெந்த நாடும் இந்தப் பெயர் மாற்றத்தை ஏற்றுக் கொள்ளாது என்பது உறுதி.

* * *

காங்கிரஸ்காரர்கள் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டால் அந்தச் சண்டையைப் பத்திரிகை வரை கொண்டு போகக் கூடாது என்று காரியக் கமிட்டி அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறதாம். இதைப் பார்த்த ஒருவர் கேட்கிறார்: "பத்திரிகைக்கு வராது இருட்டடிப்புச் செய்தால் என்ன நடக்கிறதென்று தெரியாது போய்விடுமே, இதனால் ஊழல்தானே பெருகும்?" என்று. இப்போது ஊழல் பெருகுவதைப் பற்றிக் கவலையில்லை. காங்கிரஸின் மானம் காப்பாற்றப்பட வேண்டும் என்பதுதான் காரியக் கமிட்டியின் கவலையாகும். தாராளமாகச் சண்டை நடக்கட்டும்! அந்த ரகசியமும் பத்திரமாக மூடிக் காப்பாற்றப்படட்டும்! என்றாவது ஒரு நாள் ரகசியங்கள் எரிமலைமாதிரி வெடிக்காமலா போகும்!



— சிட்டுக்குருவி




## 18

முற்றிய பக்தியினால் பேய் நிலை அடைந்த முதலாழ்வார் பேயாழ்வார் என்று பெயர் பெற்றார். அவர் பாடிய பாடல்கள் உணர்ச்சிப் பாங்கிலும் கவிப் பண்பிலும் ஒப்பற்ற ஞானக் கவிதைகள்! முதலாவது பாசுரம்.

திருக்கண்டேன் பொன்மேனி
கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும்
கண்டேன் — செருக்கிளரும்
பொன்ஆழி கண்டேன்
புரிசங்கம் கைக்கண்டேன்
என்ஆழி வண்ணன்பால்
இன்று!

இது முன்னமேயே எடுத்துச் சொல்லப்பட்டது. இனி, வழிபாட்டு முறை:

கழல் தொழுதும் வாநெஞ்சே
கார்க்கடல்நீர் வேலைப்
பொழில்அளந்த புள்ளூர்திச்
செல்வன் —

[கழல் - திருவடி. கார்க்கடல்நீர் வேலைப் பொழில்-கரிய கடலுக்கு எல்லையாய் உள்ள பூமியை. வேலை - எல்லை. பொழில் - பூமி. அளந்த புள்ளூர்திச் செல்வன்-பூமியை அளந்தவனும், கருடனை வாகனமாக உடையவனுமாகிய வள் செல்வப் பெருமான்.]

நெஞ்சமே, அவனுடைய திருவடியைத் தொழுவோம், வா என்று அழைக்கிறார் ஆழ்வார். கடல் சூழ்ந்த இந்தப் பரந்த பூமியை அளந்தவனும், கருடனை வாகனமாக உடையவனுமாகிய திருமால் அவன்!

— எழில்அளந்தும்
எண்ணற்கு அரியானை

[எழில் அளந்தும் எண்ணற்கு அரியானை-அழகை அளப்பதற்கு ஒரு கருவி கிடைத்தாலும் அதனுல் அளப்பதற்கு முடியாதவனை.]

எப்பொருட்கும் சேயானை
நண்ணற்கு அரியானை
நாம்!

[எப்பொருட்கும் சேயானை - பொருள்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டவனை. அதாவது, மிகத் தொலைவில் கண்ணுக்குத் தோன்றும் விண்மீனுக்கும், கண்ணுக்குத் தோன்றாத சிறு அணுவுக்கும் அப்பாற்பட்டவனை. நண்ணற்கு அரியானை-கிட்டுவதற்கு அரியவனை.]

எல்லாப் பொருளையும் கடந்தவனும் அறிவின் யத்தனத்திற்கு அப்பாற்பட்டவனுமாகிய இறைவனுடைய வழிபாட்டு மூர்த்தியை, நெஞ்சமே, தொழுவோம் வா என்று அழைக்கிறார்.

கழல்தொழுதும் வாநெஞ்சே
கார்க்கடல்நீர் வேலைப்
பொழில்அளந்த புள்ளூர்திச்
செல்வன்—எழில் அளந்தும்
எண்ணற்கு அரியானை
எப்பொருட்கும் சேயானை
நண்ணற்கு அரியானை
நாம்!

ஆராய்ச்சிக்கு உட்படாத அவனைத் தொழுவதற்காக மூர்த்திகளை அமைத்துக்கொண்டு வழிபாடு செய்கிறோம். அந்த வழிபாட்டிலும் எட்டாத நிலையிலிருக்கும் தெய்வத்தின் அடிகளைத் தான் நாம் எட்ட முடியும். அதற்கு மேல் செல்வது அடக்கத்தினின்று பிறழ்ந்த குற்றமாகும். இதனாலேதான் அடி தொழும் வழிபாட்டு முறை சாஸ்திரங்களில் எல்லாம் பக்தியின் அங்கமாகிறது.





பெறுக

சுவை இன்பம்...

...வாங்குக நியூட்ரீன்

மிட்டாய்கள்

**Nutrine**

**Sweets**

NC-84



நியூட்ரீன் கன்பெக்ஷனரி
கம்பெனி பிரைவேட் லிமிடெட்
சித்தூர் (ஆந்திரப் பிரதேசம்)

---

RPY-45-TAM

## ஓட்டுக்கூரையை அடுத்த ஆண்டு எதிர்பார்க்கலாமா?



பேஷாய்! விவேகமுள்ள விவசாயி வளமுள்ள வருங்காலத்துக்காகப் பாடுபடுகிறான். நிலத்தை நல்ல முறையில் பயன்படுத்துகிறான். விவசாயத்துக்கு நவீன முறைகளையே நம்புகிறான் அவன். சிறந்த விதைகளைப் பயிரிடுவதோடு, ராலீஸ் தயாரிக்கும் உரங்களையும் உபயோகிக்கிறான் என்பதையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். ஆம், ராலீஸ் 'மரம் மார்க்' உரங்கள் நம்பிக்கைக்கு உகந்தவை என்பதோடு எளிதில் கிடைக்கின்றன. மேலும் ராலீஸ் நிபுணர் உங்களுக்கு உதவ எப்பொழுதும் காத்திருக்கிறார்.

RALLIS
TREE BRAND
FERTILIZERS

ராலீஸ் (இந்தியா) லிமிடெட

இந்தியா முழுதும்

# பரதத்தில் ஒன்றிய பாலசரஸ்வதி

வெ. சந்திரசேகரன்

[இங்கிலாந்து அரச குடும்பத்தினரின் ஆதரவுடன் நடைபெறவிருக்கும் இவ்வருடத்திய எடின்பரோ கலை விழாவில் பங்கு கொள்ளப் பாரத நாட்டிலிருந்து செல்லும் கலைஞர்களுள் ஸ்ரீமதி பால சரஸ்வதி அவர்களும் ஒருவர். பரதக் கலையின் உயர்வை மேனாட்டவருக்கு உணர்த்திப் பாரதத்தின் பெருமையையும் நிலைநாட்டப் போகின்ற ஸ்ரீமதி பாலசரஸ்வதியை இவ்விதழ் மேலட்டையில் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். கலையையும் கலைஞரையும் இக்கட்டுரையில் போற்றும் திரு வெ. சந்திரசேகரன் அவர்களுடன் கல்வி நேயர்களின் சார்பில் நாமும் ஸ்ரீமதி பாலசரஸ்வதி அவர்களுக்கு நமது நல்வாழ்த்துக்களைக் கூறி விடைகொடுத்து அனுப்புகிறோம்.-ஆசிரியர்]



பாரத நாட்டு அருங்கலைகளில் இன்று மிகவும் பலரால் கொண்டாடப்படுவது பரதநாட்டியம். நம் நாட்டவர் அதன் பெருமையை உணர்ந்து பரதக் கலையை ஆர்வத்துடன் பயில்வதில் ஆச்சரியமில்லை. வெளி தேசங்களிலிருந்து வந்து, முக்கியமாய், தென்னிந்தியாவில் தங்கித் தவம் கிடந்து கற்றுக் கொள்ளப்படும் பரதநாட்டியக் கலையை அந்நியர்களும் கௌரவிக்கிறார்கள். அதிலிருந்தே அதன் சுவையும் ஆற்றலும் தனிப்பட்ட விதமாக இருக்க வேண்டும் என்பது புலனாகிறது. இருபது ஆண்டுகளுக்கு முன் உதயசங்கர் ராமகோபால் போன்ற ஆண்பிள்ளைகள் இந்திய நாட்டியத்தின் அருமையைத் தாங்கள் எவ்வளவு தூரம் போற்றியுள்ளோம் என்பதை அறிவுறுத்தவேபோல், அயல்நாடுகளுக்குச் சென்று நாட்டியக் கச்சேரியின் நுட்பங்களை விளக்க முயன்றனர். அவர்கள் தங்கள் முயற்சியில் வெற்றியும் கண்டனர். ஆனால், அவர்களும் பரதநாட்டிய சம்பிரதாயத்தை அவ்வளவாகப் போஷிக்காமல்தான், தம் கலை உணர்ச்சிகளையே நம்பிப் புதிய விதங்களில் நாட்டியக் கச்சேரியின் அமைப்பு, அலங்காரம், இவைகளுடன் கண்ணுக்கும் செவிக்கும் விருந்தாய், அதனைச் செய்து வழிபட்டனர். முழுதுமே பரத நாட்டியக் கலையின் உத்திகளுடனும் அவர்களின் நடனங்கள் தோன்றியதில்லை. செயற்கை

யும், இதர இந்திய நடனங்களின் கலப்புமாய் அவை திகழ்ந்தன. மேலும் சில சமயம் பரதநாட்டியம், பழமையின் கட்டுக்கோப்பில் அடைபட்டுக் கிடப்பதால், கலப்புடன் உருவாகும் நடனங்களைப்போல் ஒருகால் பிறர் மனங்களை, அவ்வளவு எளிதில் வசப்படுத்தாதோ என்றுகூடச் சந்தேகங்கள் எழுந்தன. காரணம் பரதநாட்டியம் புத்துயிர் பெற்ற காலங்களில் அதன் முழுச் சிறப்பையும் உணர்த்தக் தகுந்த உயர் கலைஞர்கள் தோன்றாததே எனலாம்.

திருவாரூர் ஞானம் என்ற பெயர் கேள்வியுடன் நின்று விட்டது பலருக்கு. கமலம் என்றோர் அற்புத நாட்டியக்காரி முத்துஸ்வாமி தீட்சிதர் போன்ற கலை மேதைகளின் கவனத்தைத் தமது அரிய கலையினாலேயே இழுத்தவர் என்ற வரலாறு கட்டுக் கதை அல்ல என்று இன்று ருசுவாகியுள்ளது. ஆனால் சமீப காலத்தில் வரலக்ஷ்மி, பானுமதி என்ற இரு சகோதரிகள் இக்கலைக்கே தங்களது உடலையும் ஆவியையும் அர்ப்பணம் செய்து அதிக காலம் உயிருடன் வாழாத குறையாய் ரசிகர்களின் தீராத ஏக்கத்துக்கு வழி செய்தனர்.

இவர்கள் எல்லோரையும் சிறிது மறக்கடிக்கும் வன்மை பெற்ற மற்றொரு பெண்மணியைத் தமிழ்நாடு கண்டுள்ளதை நினைக்கையில், பரத நாட்டியக் கலையின் தூய்மையான தனித்தன்மை ஓரளவு நிலைத்து விடும் என்ற நம்பிக்கை பிறக்கிறது. வீணை தனம்மாள் என்ற



வுடன் சங்கீத உலகம் தனி முறையில் உற்சாகத்துடன் எழுச்சி பெறுவதை நேரில் பார்த்தவர்கள்தாம் இன்றுள்ள பல ரசிகர்கள். நெஞ்சைக் கிளறும் கலை குன்றாத இனிப்புடன் சங்கீதம் உருக்கொண்ட விதத்தில் தனம்மாளின் வீணை சாதகமும் வாய்ப்பாட்டும் இழைந்து அமைந்திருந்தன. தயம் என்ற பாணியில் வீணையை அவர்கள் வாசிப்பதும், துளியும் மனத்தைச் சிதற விடாது பிரு, சொருகைகளுடன் பாடுவதும் அவர்களுக்கு இயற்கை. அவர்களின் குடும்பமே—பெண்கள், பேத்திகள், பேரன்கள் அவ்வளவு பேர்களும்—இசையை வழங்கும் வழியே விசேஷ சுகத்தை அள்ளி விடும் விதமாய் அமைந்திருப்பதைப் பலர் ஒப்புக் கொள்வார்கள்.

வீணை தனம்மாளின் நான்கு பெண்களில் ஒருவர் தான் ஜயம்மாள். அவர்களின் வாய்ப்பாட்டு மறக்க வொண்ணாதபடி குழைவு, பிரு முதலிய அம்சங்களுடன் செவிப்புலனை விட்டு அகலாத மேன்மையுடையது. பாலசரஸ்வதி ஜயம்மாளின் ஒரே புதல்வி. தமையன் தம்பிமார் மூன்று பேர்களுடன் பிறந்தவராயினும், பாலசரஸ்வதி தனிப்பட்ட முறையில் கலையை விளக்கம் பெற வைத்து விட்டாள். சிறிய வயதில் நாட்டியக் கலையை, அதிலும் பரத நாட்டியத்தைப் பயில வேண்டிய ஊக்கமிருந்ததே முதல் ஆச்சரியம். ஆனால் லயம் தவறாத இசை இழைப்பின் வசத்தில் அகப்பட்ட எந்த உள்ளந்தான் நாட்டியத்தை விரும்பாது? சங்கீதம் பெருகும்போது அதன் லயம், உள்ளேயுள்ள சர்வத்தையும் ஒன்றுபடச் சமையும்படி ஏதோ ஓர் அபூர்வ சக்தி வாய்ப்புக் கொள்வதுதான் அதனை உண்மையில் சங்கீதமாக்குகிறது. இது நாட்டியம் கற்பவர்களும் தெரிந்து கொள்ள வேண்டிய ஒன்றாகும். டாகூர் போன்ற மகாகவிகளும் 'உலகினூடே உய்விக்கும் லயமொன்றுள்ளது:





அதன் வெளித் தோற்றமேதான் நாத வெள்ளம்' என்பர்.

**பூதங்களொத்துப் புதுமை தரல்**
**விந்தையெனில்**
**நாதங்கள்சேரும் நயத்தினுக்கு நேராமோ?**

என்று பாரதியும் 'ஓசை தரும் இன்பத்தின் உவமையிலா'ச் சுகத்தை வருணித்துள்ளார். கவனித்தால், இசையும் லயமும் பிரிக்க இயலாது சேருவதினால் மட்டுமே அங்கங்களின் அசைவுகள் அதற்கு இயையக் கிளம்புகையில் தனியொரு மன எழுச்சி உள்ளங்களில் உண்டாவது புலனாகும். சுபாவமாய் எழும் லயத்தின் அநுபவத்தையே பரதநாட்டியம் பற்பல அருமையான அபிநயங்களாலும் முத்திரைகளாலும் சிறப்பித்துள்ளது.

இதனை இயற்கையிலேயே அங்கங்களின் அசைவுகளால் ரூபிப்பித்துக் காட்டும் அரியதொரு திறமையைச் சிறு பிராயத்திலேயே காட்டியவள் பாலசரஸ்வதி. சங்கீதத்தின் அடிப்படை லய சுகத்தை உட்கொண்டபின் தான் நாட்டியம் கற்பதற்கு முயலுவதும் பொருத்தம் என்பாள் பாலசரஸ்வதி.

எட்டு வயதுச் சிறுமியாய் வளருகையில் நட்டுவனார் காலஞ் சென்ற கந்தப்ப பிள்ளையிடம் ஆடக் கற்கத் தொடங்கினாள். சுமார் பதினாறு வயதில் அழுத்தமான கலை ஞானத்தைச் சுலபமாய்ப் பெற்று, அரங்கத்தில் ஏறி, ரசிகர் உள்ளங்களைக் கவரத் தொடங்கியது பலருக்கு ஞாபகம் இருக்கலாம். 1936-ம் வருஷம் தம்பு செட்டித் தெரு கான மந்திரத்தில் ஒரு சமயம் பாலசரஸ்வதியின் சதிர்க் கச்சேரி விளம்பரமாகி இருந்தது. சென்னை சங்கீத அகாடமியார் ஆதரவில் நடைபெற்றது. அன்று உதயசங்கர் பார்க்க வந்துள்ளவர்களில் ஒருவர். அவருடைய உயர் லட்சியங்கள் உண்மையில் உள்ளவை என்பதற்கு அடையாளமாய், பாலசரஸ்வதியின் அபிநயக் கலையின் விசேஷத்தை அவர், சாஹித்திய பாஷையின் பொருளை அறியாமலேயே, ஆனால் அபிநய பாஷையின் தெளிவினாலேயே அநுபவித்து விட்டார். வாய்கொண்ட மட்டும் புகழ்ந்தார்.

நிருத்தங்களில் பாலசரஸ்வதியின் திறமையை விட அவரது அபிநயமே சிறந்ததெனப் பலர் கருதுகிறார்கள். ஆனால் கலையம்சங்களைத் துருவிப்பார்ப்பவர்கள் நினைப்பது வேறு. சாஹித்திய சகாயமற்ற முத்திரையும், அங்க அசைவுகளும், அடவு ஜாதிகளும் பாலசரஸ்வதியினிடம் பரிமளிப்பதைப் போல், வெகு சிலரிடமே தான் இருப்பதாய்க் கருத வேண்டும். கைகளின் வீச்சும், கைசென்ற இடம் கண் பார்வையும், பார்வையுடன் இசை பிரியாது செல்லும் பாவம்





''நல்ல நிலையிலே இருந்தவன் தானுங்க நான்! ஆனால் இன்னியோட சேர்த்து நான் சாப்பிட்டு நாலு நாளாச்சு. ஏதாவது உதவி பண்ணுங்க!''



''ஐயோ, பாவம்! இந்தா ஒருரூபாய். அது சரி, நீ எப்படி இந்தப் பரிதாப நிலைக்கு வந்து சேர்ந்தாய்?''

''உங்களைப்போல் தாராளத்தனமாகச் செலவு பண்ணினதால்தான்!''

களும் அவளுக்கெனவே உண்டானவைபோல் காணப்படுகின்றன. சுத்தமான முறையில் அலாரிப்புடன் தொடங்கி, சப்தம், ஜதிஸ்வரம், வர்ணம் இவைகளை அவர் துளியும் சம்பிர தாயக் கட்டுப்பாட்டை விடாது அநுசரிக்கையில்தான், 'ஆகா! சம்பிரதாயமென்பது இவ்வளவு நேர்மையுடன் உருவாகி இருக்கையில், ஏன் பலர் தங்களது சொந்த முறைகளை ஏதோ தங்கள் சுய கற்பனையின் விசேஷத்துக்கு அறிகுறியாகக் கையாளுகிறார்கள்?'' என்று வியக்க வேண்டி நேர்கிறது.

கைவிரல்கள்தாமா அவை அவ்வளவு கருத்தோவியங்களை அநாயாசமாய் வரையும் சலாகைகளா என்றே பிரமிக்க வைக்குமளவு பால சரஸ்வதியின் கைவிரல்கள் செய்யும் ஜாலங்கள் விவரிக்க வொண்ணாதவைதாம். ஒவ்வொரு சிறு சிறு அங்க சேஷ்டைகளும், கண்ணிமைகளின் மாறுதல்களும் அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவதைக் கவனித்தாலே போதும், அவருக்குள்ள கலை வன்மையின் இணையற்ற தன்மை தெரியும். அரை நொடியில் முகபாவங்களில் ஏக்கம், வருத்தம், திருப்தி, ஆச்சரியம் இன்னும் எவ்வளவு விதங்களில் முகபாவங்கள் காண்பவர்களின் இதயங்களிடை ஓவியங்களை வரைய வைக்குமோ அவ்வளவு வகைகளில் அவை உருவாகும்.

நிருத்தமேகூட நாட்டிய பாஷையின் ஆணிவேர் எனலாம். சரியான பரதக் கலையாய் ஒன்றை நாம் கருதுவதற்கு உரைகல் நிருத்தந்தான். கலைப் பாஷையின் முழுத் திறமையின் பொலிவு நிருத்தத்தில்தான் வெளியாகும். அதனை அநுபவிப்பதில் குன்றாத சுகம் ஏற்பட ஏற்படவே நிஜமான பரத நாட்டிய சாஸ்திரமாகிறது ஒருவருடைய கச்சேரி. அபிநயம் அதனுடன் சேருகையில் பொன் மலருக்கு நாற்றம் ஏற்படுவது போலும், சொல்லில் சக்தி பிறப்பது போலும், விழிக்கு விழிப்பு ஏற்படுவதற்கொப்பவும் கலையின் நிறைவு பூரிப்பெய்துகிறது. பாலசரஸ்வதியின் எல்லையற்ற பாவங்களின் சிருஷ்டி ஒன்றே போதும் எனலாம், அவருடைய மேதையின் பரவுதலுக்கு. ஆயினும், உண்மைக் கலைஞன் என்பதற்கு எடுத்துக் காட்டு புதிய புதிய சிருஷ்டிகளை ஓய்வு தெரியாது ஒருவர் செய்வதுதான். பால சரஸ்வதியின் வரம்பு தெரியாத விளைவும் பாவங்களும், அவைகளின் உற்பத்திக்குள்ள கலைச் செழுமையும் அவரிடம் பரிபூரணமா யிருப்பதொன்றே, இவ்வளவு காலமாகியும் அவர் கலையின் மேன்மை வளர்ந்துகொண்டே வருவதற்கும் ரசிகர்களின் ஆர்வம் குறையாதிருப்பதற்கும் காரணம்.

சுத்தமான முத்திரைகளையும் அவரிடம் பார்ப்பதற்கு அவகாசம் கிடைப்பது போல் வேறு இடங்களில் இருப்பதில்லை. கிளி, குயில், தாமரை, புள்ளினங்களின் இறக்கை அடிப்பு, மரங்களின் அடர்த்தி, சங்கு, மான், விருஷபம், மல்லிகைக்கொடி, மன்மத பாணங்களாகிற பூக்கள் — இன்னும் தனி அகராதியாகவே பரிணமித்துள்ள பரத நாட்டிய முத்திரைகளின் கோவையை அவருடைய தெளிவும் தூய்மையும் பெற்ற வடிவங்கள் விவரிப்பதை மனதார நினைக்கவே தோன்றுகிறது.

பால சரஸ்வதியின் கலை ஞானம் எவ்வளவு சிறந்ததென அறிவதற்கு, அவருடைய சொந்தக் கற்பனை சக்தியினால் உருவாகும் அற்புதச் சித்திரங்களை மனப் பேழையில் பத்திரப்படுத்தியுள்ள ரசிகர்கள்தாம் கூற வேண்டும். வால்மீகியும், இதர கவிகளும் தீட்டிய சித்திரங்கள் ராமாயணம் முதலிய காவியங்களில் வெளியாவதே போல், பால சரஸ்வதியின் சிற்சில பாவ வெளியீடுகள் பழைய கதைகளில் வரும் பாத்திரங்களுக்குப் புதிய சோபையைத் தருவதைப் பார்க்கிறோம். சீதா தேவி ராமனுடன் கானகத்தில் முள் தைத்த உள்ளங்காலுடன், ராமனுக்கு மனத்தில் துளியும் வேதனையை ஊட்டாது கூடவே செல்வதை அவருடைய அபிநயத்தில் பார்ப்போம். ராவணனைக் கொன்ற பின்னும் தமது தலைவியை விட மனமில்லாமல் ராமன் மன ஆயாசத்தைக் காட்டும் விதம் நம்மைப் பிரமிக்க வைக்கும். கண்ணனை நேரில் பார்க்கையில் அவனது பால வடிவத்தில் ஈடுபட்ட யசோதை, அவன் வாயினுள் கண்ட அதிசயங்களைக் கண்கொட்டாது பார்த்த பின்னும் மறந்துபோய் மறுபடியும் அவனைத் தனது செல்வமாய்க் கருதுவதைக் கண்டு நாமும் இதயத்தைப் பறிகொடுப்போம். இவ்வளவு பெரிய விசுவத்தை அளாவிய பெருமாளு யினும், சிறிய பொம்மைபோல் உருவெடுத்து உடுப்பியில் நிற்கும் கோலத்தைக் கண் கொள்ளாச் சேவையாய்க் கண்முன் நிறுத்தி வைக்கும் திறமையில் ஈடுபடுவோம்.

கலையும், கலைஞரும் ஒன்றுபட்ட நிலையில் கலைஞரைத்தான் கொண்டாட வேண்டுமா அல்லது கலையைத்தான் கொண்டாடுவதா என்றே சந்தேகம் எழுகிறது. பாலசரஸ்வதியின் கலையை நன்கு உணர்ந்தவர்களுக்குப் பரதக் கலையின் மேன்மையை நினைக்கவே மனம் உந்தும். 'அடடா, என்ன உயர்ந்த கலை? காளிதாசாதிகள் கொண்டாடிய கலை அல்லவா!' என்றே மனம் நின்று விடும் ஒரு கணம் பிரமிப்பில். கலைக்காகக் கலைஞரா, இல்லை கலைஞருக்காகக் கலையா என்ற கேள்வியும் மறையும். சரியானபடி உருவாகும் கலை எதுவாயினும் அதனை வளர்ப்பவர்களின் நேர்மையை நினையாதிருக்க வகை இல்லை. சரியான கலைஞராயின் அவருடைய கலை நுட்பத்தை வாழ்த்தாது செல்வதும் பொறுப்புள்ள செய்கையாகாதுதான்.













ஸ்ரீ செங்காலிபுரம் அனந்தராம தீட்சிதர் அவர்களின் ஷஷ்டியப்த பூர்த்தி வைபவம் வைதீக முறைப்படியும் லௌகீக முறைப்படியும் சென்ற 31–7–63 அன்று வெகு சிறப்பாக நடைபெற்றது.

இந்தப் பக்கத்தில் லௌகீக முறைப்படி மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் நடைபெற்ற விழாவின் சில கோலாகலக் காட்சிகளைக் காணலாம்.

ஊர்வலமாக அழைத்து வரப்பட்ட தீட்சிதர் தம்பதிகள் பூர்ண கும்பம் அளித்து வரவேற்கப்பட்டனர். தீட்சிதர் ஷஷ்டியப்த பூர்த்தி நினைவு மலரில் வெளியாகியுள்ள விளம்பரங்கள் மூலம் வருவாயான தொகையைத் தீட்சிதர் நடத்தும் வேத பாடசாலைக்கு நன்கொடையாகக் கமிட்டியார் சார்பில் ராஜாஜி வழங்கினார். தர்மபுரம் ஆதீனகர்த்தர் சார்பில் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். விழா, ஸ்ரீமதி எம். எஸ்.ஸின் பிரார்த்தனை கீதத்துடன் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ டி. எல். வேங்கட்ராமய்யர் தலைமை வகித்தார். ஸ்ரீமான்கள் கி. வா. ஜ., மீ. ப. சோமசுந்தரம், ராமமூர்த்தி தீட்சிதர், ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம், ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யர், திருமுருக கிருபானந்த வாரியார், ராஜாஜி முதலிய பலர் பாராட்டுரை வழங்கினார்கள்.















## சங்கீத மேதைக்குச் சிறப்பு விழா

சங்கீத ரத்னாகர, சங்கீத கலாநிதி ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களது இசை வாழ்வின் பொன் விழா அரியதொரு திருவிழாவாக ஜூலை 28ந் தேதியன்று நிறைவேறியது. சென்னை ராஜாஜி மண்டபத்தில் மைசூர் மகாராஜா அவர்களின் தலைமையில் அரியக்குடி அவர்களுக்கு அமோகமான வாழ்த்துக்கள் வழங்கப்பட்டன. ராஜாஜி, டாக்டர் ஸி.பி., மஹாராஜபுரம் விசுவநாத அய்யர், முசிரி சுப்பிரமணிய அய்யர், நாராயண மேனன், முத்தையா செட்டியார், ஜி. என். பி., டாக்டர் ராகவன், கொத்தமங்கலம் சுப்பு, வீருசாமிப் பிள்ளை, வழுவூர் ராமையா பிள்ளை முதலியவர்கள் அரியக்குடியின் இசைப் புலமையைப் பாராட்டினர். அன்பர்களின் பரிசுகளும், சிஷ்யர்களின் காணிக்கைகளும் வித்துவானுக்கு அளிக்கப்பட்டன. 1. ஸ்ரீமதி எம். எஸ். பிரார்த்தனை கீதம் பாடுகிறார். 2. ராஜாஜி, டாக்டர் ஸி. பி.யுடன் ஸ்ரீ அய்யங்கார். 3. விழாவுக்குக் காரணகர்த்தர்களான பெரம்பூர் சங்கீத சபை சேதுராமனும் பி. ராஜம் அய்யர், மதுரை கிருஷ்ணன், கே. வி. நாராயணசுவாமி, கே. எஸ். தனம்மாள் ஆகிய அரியக்குடி சிஷ்யர்களும். 4. விழாக் குழுத் தலைவர் ராஜமன்னருடன் அரியக்குடியும், மகாராஜபுரமும். 5. பாராட்டு மலரை வித்துவானுக்கு வழங்குகிறார் மைசூர் மகாராஜா. 6. ஜூலை 21ந் தேதி புதுக்கோட்டை சங்கீத சபையில் ஸ்ரீ அரியக்குடிக்கு நடைபெற்ற பாராட்டு விழாவில் ஸ்ரீ டி. எம். நாராயணசுவாமிப் பிள்ளையும், ராஜகுமாரி ஸ்ரீமதி ரமாதேவியும் பங்கு கொண்டனர்.




ராமநாதனுக்கு உறக்கம் பிடிக்கவில்லை. திடீரென்று ஒரு திகிலின் அழுத்தம் அவன் நெஞ்சில் படிந்து நினைவில் படபடப்பையும் பயத்தையும் ஏற்படுத்தியது. ஒவ்வொரு விநாடியும் அவன், வீட்டினுள் ஒன்றை எதிர் பார்த்து நடுங்கிக் கொண்டிருந்தான்.

இரவு மணி இரண்டை நெருங்கும் சமயம். இன்னும் சில மணி நேரங்களுக்குள் அந்த நிகழ்ச்சி நடந்து விடும். ஆம், சாவுடன் போராடிக் கொண்டிருக்கும் அபிராமியின் வாழ்வுக்குக் கெடு அதிகாலை நாலு மணி வரை தான். வைத்தியர் அவனைத் தனியாக அழைத்து அந்த விஷயத்தைக் கூறியதும் சில நேரம் அவனுக்கு எதுவுமே புரிய வில்லை. திடீரென்று இருள் செறிந்த அறைக்குள் தள்ளப்பட்டவன் போல் உடலையும் உள்ளத்தையும் பீதி உலுப்பியது.

இத்தனை வருடங்கள் கழித்து இதற்காகவே இங்கு வந்திருக்கிறானோ? நிச்சயம் அவன் இந்தச் சாவைச் சந்தித்துத்தான் ஆக வேண்டும். வேறு வழி? ஐயிரு திங்கள் சுமந்து அங்கமெல்லாம் நொந்து அவனைப் பெற்றெடுத்த அன்னையின் அந்திம சமயத்தில் அவன் அருகில் இல்லாமல் எங்கே போய்விட முடியும்?

வைத்தியரை வழியனுப்பி விட்டு வந்தவுடன் அப்பா சட்டென்று அவனை ஒரு பார்வை பார்த்தார். ஊசியால் துளைத்தெடுப்பது போன்ற அந்தப் பார்வை அவனுக்கு எதை உணர்த்திற்று?

''அப்பா!....''

மடையைப் பிடுங்கி விட்ட வெள்ளமாகத் துயரம் பெருக்கெடுத்தது.

''டாக்டர் சொல்லுவானேன்? எனக்கே தெரியுமடா. அவள் ஆவி ஒடுங்கிக் கொண்டிருக்கிறது. உன்னைப் பார்க்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தாள். நினைவு திரும்பும் வரை முடியுமானால் இருந்து பார்த்து....''

அப்பாவை அவன் மேலே பேச விடவில்லை.

''என்னைக் கொல்லாதீர்கள் அப்பா....! அம்மாவைப் பார்க்கத்தான் இப்போது ஓடோடியும் வந்தேன். நேற்றுப் போட்ட கடிதத்தை நாலு நாள் முந்தியே எனக்கு...''

வாய் அலற, அவன் வாயில் சார் பிசுபிசுத்தது. வறண்ட உதடுகளில் துக்கம் அழுங்கித் துடித்தது.

தந்தை மகனுடைய வருத்தத்தைச் சட்டை செய்ததாகத் தெரிய வில்லை. முழந்தாள்களுக்கிடையே முகத்தைப் புதைத்துக் கொண்டு, காய்ந்த ஓலையாகச் சுருங்கிக்கிடந்த இதழ்கள் துக்கத்தின் நடுக்கத்தில், ''அபிராமி!... நீ... போய் விடப் போகிறாயா?'' என்று பெருமோசையிட்டுப் புலம்பினார் கிழவர்.

ராமநாதன் அவர் அருகே ஏக்கத்துடன் வந்து நின்றான். இரண்டு நிமிட நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு, உள்ளிருந்து அபிராமியின் முனகல் சத்தம் எழுந்தது. ராமநாதன் சட்டென உள்ளே நுழைய யத்தனிக்கக் கையில் அவனை விலக்கிக் கொண்டு கிழவர் உட்புகுந்தார். முதுமையின் பலவீனத்தைத் துயரம் தூக்கியெறிந்திருந்ததோ?... என்ன அசுர வேகம்?

''அபிராமி!''

பதற்றத்தின் அடையாளம் குரலில் தழு தழுப்பாகப் பதிய, கலவரத்துடன் கட்டிலின் அருகே சென்றார் கிழவர்.

அபிராமியின் சுருங்கிய இமைகள் மெல்லப் பிரிந்தன. குகையிலிட்ட தீபங்கள் போல் ஒளிர்ந்த விழிகள் அறையின் நாற்புறமும் சுழன்றன, எதையோ தேடி யலையும் பாவனையில்.

''அவன் வரவில்லையா?....''

தண்ணீருக்குள் பேசிய பேச்சுப் போல் அவள் வார்த்தைகள் சத்தம் இழந்து, சக்தி குறைந்து மெல்ல அடங்கின.

''இதோ வந்து விட்டேன் அம்மா....''

ராமநாதன் சடாரென்று பாய்ந்து சென்று கட்டிலின் மேல் உட்கார்ந்துகொண்டான்.

''அம்மா....!''

ராமநாதன் வாஞ்சையுடன் தாயின் சதை வற்றிய நரம்புக் கைகளைப் பற்றி மெல்ல வருடினான். அபிராமியின் வெறித்த பார்வை ஒரு கணம், அவன் மேல் அசையாது படிந்தது.

''ராமநாதனா!.... என் ராஜாவா நீ?.... இல்லை... இல்லை.... ராஜாவுக்கு இப்படித் தலை மயிரெல்லாம் வெள்ளிக் கம்பியாய்ச் சுருண்டு கிடக்குமோ?... காய்ந்த நுச்சி போல, கையெல்லாம் இப்படி வற்றிக் கிடக்குமோ?... செக்கச் சிவக்க ராஜா வடிவா, கரு

கருன்னு கருளச் சுருளக் கிராப்புத் தலையை அழகாய் வாரிண்டு, தழையத் தழையச் சரிகை வேஷ்டியும், சில்க் சட்டையுமா சட்டத்துக்குள்ளே எழுதின படம் போல, 'அம்மா'ன்னு தான் அவன் நிலைப் படியை அடைச்சுண்டு நிற்பான்.... நான் அடுப்பிலே வேலையா யிருக்கிறச்சே......''

மீண்டும் காண முடியாத அந்த ஏக்க நாட்களின் எண்ணற்ற எண்ணங்கள் பிரி பிரியாகக் கழலுவது போல் அபிராமியின் நெஞ்சிலிருந்து நெடுமூச்சுக்கள் நழுவின.

''.....அவன் வர மாட்டான்! என் ராமு வரமாட்டான். அவனுக்குத்தான் அம்மாவே மறந்து போச்சே....''

ராமநாதனுக்கு வாய் விட்டு அழ வேண்டும் போல் இருந்தது. துக்கத்தின் கக்கல்களாய்த் தொண்டையிலிருந்து விக்கல்கள் வெடித்தன. மரணத்தின் பிடிப்பில், சிறிது சிறிதாய்ப் பிரக்ஞை இழந்துகொண்டிருக்கும் அம்மாவால் அவனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லையா?

இருபத்தைந்து வயது இளைஞனாய் அவளைப் பிரிந்தவன், இன்று ஐம்பது பிராயத்து அரைக் கிழமாக அவளைக் காண வந்திருக்கிறான்!

''அம்மா! நான்தான். உன் ராமுதான் வந்திருக்கேன் அம்மா. நன்னா கண்ணை முழிச்சுப் பாரேன். என்னைத் தெரியலையா?''

அபிராமி, மீண்டும் ஒரு முறை, தன் கைகளைப் பிடித்துக் கொண்டிருந்த வடிவத்தை ஆராய்வது போல் பார்த்தாள். பிறகு மெல்லக் கண்களை மூடிக் கொண்டாள்.

அந்தனை துயரத்திலும் ராமநாதனுக்குச் சட்டென்று சிரிப்பு வந்தது. அவனுக்குத் தலை நரைத்து விட்டதை அம்மாவால் நம்ப முடியவில்லையா? தாயின் அன்பு உள்ளம் அவனை இன்னும் துடிப்பு மிக்க இளைஞனாக வாஞ்சை மிக்க குழந்தையாகத்தான் பாவிக்கிறதா? அப்படியானால் அவனுக்கு நிச்சயம் மன்னிப்புக் கிடைக்குமா?

எங்கோ தொலைவில் ஆந்தை அலறியது. கிழக்கு மேற்காகக் கத்திக் கொண்டு சாக்குருவி ஒன்று பறந்தது. பீதியால் உந்தித் தள்ளப்பட்டவனாய் ராமநாதன் அபிராமி படுத்திருந்த அறைக்குள் நுழைந்தான்.

குத்து விளக்கின் தெள்ளிய ஒளியில் அறையின் அமைதி விசுவரூபம் எடுத்து, அந்நிலையில் அங்கே ஒரு மருட்சியை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. அபிராமி ஏதோ முனகியபடியே மெல்லப் புரண்டாள். நழுவிச் சரிந்த விரிப்பைச் சரி செய்ய ராமநாதன் தாயின் பக்கலில் விரைந்தான். போர்வையை இழுத்துக் கால் மாட்டுப் பக்கம் மூடுகையில் அவன் நெஞ்சில் ஏதோ நெருஞ்சியாய் உருத்திற்று.

ஒரு சமயம், அம்மா தனக்கும் அப்பாவுக்கும் கம்பளிச் சால்வைகள் வேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தாள். கல்யாணமான சுருக்குடன் குழந்தை குட்டிக்காரனாகி விட்ட ராமநாதனுக்கு அன்றாட வாழ்வே அரை முழக் கயிற்றில் ஆடும் பம்பரமாக இருக்கவில்லை. மாலாவுக்குச் சீதனமாக மஞ்சள் காணியும் பொன் பொருள்களும், வீடு வாசல், சொத்துக்களும் மன நிறைவு தரும் மண வாழ்வைத்தான் அவனுக்குத் தந்து கொண்டிருந்தன. மாமனார் வீட்டு மாப்பிள்ளையாக ராமநாதன் சொகுசு ததும்பும் உல்லாச வாழ்வில் தன்னை மறந்திருந்த காலம் அது.

தங்கள் குடும்பத்தின் 'இல்லாமை'யை வேட்டகத்து மனிதர்களிடையே பறைசாற்றிக் கொள்ள விரும்பாத சுய கௌரவம் தாயின் தேவைகளுக்குத் தடையாய் நின்றது. அப்புறம் அம்மா அவனுக்கு எதுவும் கேட்டு எழுதுவது கிடையாது.

பக்கத்து மைதானத்தில் உள்ள புளிய மரத்தில் கிச்சான் குருவி ஒன்று குரல் கொடுத்தது. ஆயிற்று, பொழுது புலரும் வேளை நெருங்கியது. அது அம்மாவின் வாழ்வின் அஸ்தமனத்தின் உதயம்.

அந்த நாளில் அம்மா அவனுக்காக எப்படி உழைத்தாள்? பள்ளிப் பருவத்தில் அவனுக்குப் பரீட்சைக்குப் பணம் கட்ட, அம்மா தன் கை வளையலைக் கழற்றி அடகு வைத்துக் கொடுத்தது, கல்லூரிப் படிப்புக்காகக் காதுத் தோட்டை விற்றது, காலை ஐந்து மணிக்கு முன்பே எழுந்து அவனுக்காகச் சிற்றுண்டியும் உணவும் தயாரித்து உத்தியோகத்துக்கு அனுப்பியது.

''எப்படியெல்லாம் அன்பைக் கொட்டி உன்னை வளர்த்து ஆளாக்கினேன். இப்படி ஒரேயடியாய்ப் புறக்கணித்து விட்டாயே?'' என்று அம்மா அவனை ஒரு நாள்கூட நொந்து கொண்டதில்லை. வைரத் தோடுகளை மனமுவந்து விற்று மகனுக்கு வாழும் வகையைத் தேடித் தந்தவள், நாளடைவில் அவன் நெஞ்சத்து வைரத்தை — தாயைப் புறக்கணித்து வாழும் அவன் வைராக்கியத்தை எண்ணி எண்ணியே மனம் மருகியிருப்பாளோ? பெற்ற வயிற்றின் அந்தத் துடிப்பு....

வேதனையின் சன்னக் குத்துகளில் அவன் நெஞ்சம் தாறுமாறாகப் பிய்ந்து புலம்பியது.

அறிந்தோ, அறியாமலோ, அவனுக்கும், அவன் அருமை அன்னைக்கும் இடையே அகண்ட சுவரெழுப்பிய பேதைமைக்கு மாலா தான் ஆளாகி விட்டாள். ஆம்; ஊரும் உலகமும் மாலாவைத்தான் பழித்தன. பணக்காரப் பெண்ணைக் கைப்பிடித்த பிறகு, பத்து மாதம் சுமந்து பெற்ற தாயை அவன் மறந்து விட்டான்! இப்படித்தான் ஊர் பழித்தது.

அன்று ஏதோ சுதினம். அம்மாவுக்கு விரத நாள். அதிகாலையில் சீக்கிரமே எழுந்து அம்மா ஸ்நானம் செய்து விட்டு வருவதற்குள் மாலா ஒரு நாளும் இல்லாத திருநாளாய் அடுப்பைப் பற்ற வைத்து, காப்பிக்காக நீர் வைத்து விட்டு, பற்பசையும் பிரஷுமாய்ப் புறக்கடைப் பக்கம் சென்றிருக்கிறாள்.

பல் விளக்காமல், குளிக்காமல் அடுப்பைத் தொட்டது தவறு என்று அம்மா ஏதேதோ கோபச் சொற்களை மாலாவின் மீது வாரி இறைத்திருக்கிறாள். மாலாவுக்கு அன்று பிறந்த வீடு செல்லும் அவசரம். முதல் நாளே வந்து அழைத்து விட்டுப் போன தந்தை, காலையில் காருடன் வருவதாயிருந்தார். எப்போதுமே அவளுக்கு நெஞ்சிரல் அதிகம். படபட வென்று மாலாவும் ஏதோ பதில் பேசியிருக்கிறாள்.

துயில் கலைந்து அவன் கீழே வருகையில் அம்மா முகத்துக் கடுகடுப்பையும், மாலாவின் மதிமுகத்துக் கலவரத்தையும் மாறி மாறிப் பார்த்ததும் அவனுக்கு விஷயம் புரிந்தது.

அவ்வளவுதான்! தேக்கி வைத்திருந்த நீர், கரை உடைந்ததும் 'குபு குபு'வென வெளிப்படுவதைப் போல் அம்மாவிடம் படபடவென்று, அனல் சட்டியில் இட்ட சோளப் பொரி வெடிப்பது போல் வார்த்தைகளைக் கொட்டி விட்டு மாலாவுடன் தன் மாமனார் வீட்டுக்குப் போய் விட்டான் அவன்.

அன்று இரவே மாலாவின் பிறந்த வீட்டில் அவர்கள் புது வாழ்வு மிக்க ஆனந்தமாய் ஆரம்பமாயிற்று. அம்மாவும் அப்பாவும் கிராமத்து ஓட்டு வீட்டுக்குக் குடி மாறினார்கள்.

அப்புறம்....

அம்மா எத்தனையோ கடிதங்கள் எழுதியும் அவனோ, மாலாவோ அவளை ஒரு நடைகூடப் போய்ப் பார்க்க வில்லை. அவன் முதல் முதலில் 'அப்பா'வாகிய சமயம் அம்மா மட்டும் மன ஆதங்கம் தாளாமல் ஒரு தடவை பேரக் குழந்தையைப் பார்த்துப் போனாள். அப்புறம் 'இரண்டு'க்கு மாலா தாயானதும் இப்போது அவளே 'பாட்டி'யாகப் போவதும் அம்மாவுக்குத் தெரியாது. அவனது அருமை மகளின் திருமணத்துக்கு அம்மாவோ அப்பாவோ வரவில்லை. அப்பாவின் வைராக்கியமும் அவருக்கு அடங்கிய அம்மாவின் ...ப் பாங்கும் அவனுக்குத் தெரியும். ஏன்? அவன் மட்டும் அவருக்குச் சளைத்தவன் அல்லவே? இந்த இருபத்தி ஐந்து வருடத்தில் 'அம்மா எப்படி யிருக்கிறாளோ' என்று ஒரு நொடி கூட எண்ணிப் பார்த்ததில்லை.

இவ்வளவு காலம் கழித்து அப்பாவிடமிருந்து வந்த கடிதம் அவனை இங்கே வரவழைத்திருக்கிறது. அம்மா இவ்வளவு மோசமாக, நினைவு தப்பிய நிலையில், மரணத்தின் வாயிலிருப்பாள் என்று எதிர்பார்க்க வில்லை. ...று ரயிலிலேயே திரும்பும் உத்தேசத்துடன் ...ான் வந்தான். அவன் வருவான் என்று ...வரும் எதிர்பார்க்க வில்லையே?

"இவ்வளவு காலம் என் நிழலிலேயே ...லம் கழித்தவளுக்கு, என் கையாலேயே ...ல்லாம் செய்து விட்டுப் போகிறேன்...." ...ன்று சொல்லிக் கொண்டிருந்தாராம். உள் ...த்தைப் போல் உடலும் தளரவில்லையே ...வருக்கு!

"ராமு!"

சிரமத்துடன் அசைந்த அபிராமியின் இதழ்களிலிருந்து பிள்ளைப் பாசம் சொற்களாய்த் தெறித்தது. அபிராமியின் நினைவு மீண்டது.

"...வந்துவிட்டாயாடா, ராமு! நிஜமாக நானு?...." மெலிந்த கரங்கள் மெதுவாக ஆர்த்துப்பரிவுடன் மகனின் முகத்தை வருடின.

"அம்மா!.... அம்மா...."

"குழந்தை!.... உன் வாயால் இப்படிக் ...ப்பிட்டு எவ்வளவு வருஷமாச்சு...."

"என்னை மன்னிச்சுடு, அம்மா. இவ்வளவு ...ஷமா உன்னை என்னுகூடக் கேட்க வில்லை. ...ன்னைப் பெற்றதில் எந்த விதமான சுகமும் அனுபவிக்க வில்லை. வாழ்க்கையிலே உனக்கு ...ன் கொடுத்ததெல்லாம் தீராத மனக் குறை ...ான். என்னைப் பற்றியஏக்கத்துடன் நீ..."

"அடு......"

அவர் (பிச்சை போட்டவண்ணம்): நீ நொண்டி நொண்டி நடப்பதைப் பார்த்தால் ரொம்பப் பரிதாபமாக இருக்கிறது. இருந்தாலும் குருட்டுப் பிச்சைக் காரர்களைக் காட்டிலும் உன் பாடு எவ்வளவோ தேவலை இல்லையா?



பிச்சைக்காரன்: நல்லாச் சொன்னீங்க! நான்குருடனாகஇருந்து பிச்சை வாங்கியபொழுது, எல்லாரும் செல்லாக் காசைப் போட்டுவிட்டுப் போய்க் கொண்டிருந்தாங்க.

தெள்ளிய நீரைப் போன்ற அமைதி சொற்களில் படிய அபிராமி பேசினாள்.

"....எனக்கு எந்தக் குறையும் இல்லே. இப்போ, சாகப் போகிற இந்த நேரத்திலே நான் மன நிம்மதியோட, சந்தோஷமாய்த் தான் இருக்கேன். உலகை விட்டுப் பிரியற போது ஓர் உயிர் எந்த உணர்ச்சியோடு போகிறதோ, சாவின் சந்நிதானத்துக்குள் ஓர் உயிர் எத்தகைய உணர்ச்சியோடு நுழைகிறதோ, அந்த உணர்ச்சிதான் அந்த உயிரின் வாழ்வின் பிரதானம். இத்தனை வருஷமும் நீ என் அருகிலேயே இருக்கிறதைவிட, இப்போது இந்த நேரத்திலே, நான் சாகப் போகிற சமயத்துலே பக்கத்திலே இருக்கியே. இதுவே போதும். இதுதான் எனக்குப் பிறவிப் பயன். கடைசிக் காலத்திலே... பிள்ளையுடைய மடியிலே, புருஷனும் கிட்ட இருக்கும் போது என் உயிர் பிரியற இந்தப் பாக்கியம் கிடைச்சது எல்லாத்துக்கும் மேலே பெரிய நிறைவடா ராமு!"

ராமநாதனின் உடல் சிலிர்த்தது. தேற்று வந்த மனைவியைக் கடிந்து ஒரு சொல் ஒரு நாளில் சொல்லி விட்டாள் என்பதற்காக, இருபத்தைந்து வருடங்களுக்கும் மேலாகத் தாயிடம் பராமுகமாய் இருந்தான் மகன். காலமெல்லாம் கடமையைச் செய்யத் தவறிய மகனிடம் கருணைக் கடலாய் அன்பைப் பொழிகிறாள் அன்னை.

"மாலாவை அழைத்து வரக்கூடாதா?"

"உன் பேத்திக்குப்பிரசவ சமயம் அம்மா."

"மாலாவிடம் எனக்கு எந்தவிதமானமனத் தாங்கலும் இல்லேன்னு.... சொல்லு ராமு!"

ஆசீர்வதிக்கும் பாவனையில் கைகள் உயர, மெல்ல மெல்லச் சொற்கள் வேகம் குறைந்து நாக் குழறுகையில் சட்டென்று தாயின் தலையைத் தூக்கி மடி மீது வைத்துக் கொண்டான் ராமநாதன். கண்ணீர் மாலைகள் கரகரவென்று சுழன்று தாயின் கழுத்துப் பிரதேசத்தில் சரம் கோர்த்தன. வைகறையில் அபிராமி அமைதியுடன் கண்களை மூடினாள்.

"அழாதே, ராமநாதா!.... இத்தனைநாள் உன்னுடன் இல்லாத குறையை அம்மா உனக்குப் பேத்தியாகப் பிறந்து நிவர்த்தி செய்து கொண்டு விடுவாள்...." என்று கிழவர் பிள்ளையைத் தேற்றிக் கொண்டிருந்தார்!

# குண்டு மல்லிகை

### அத்தியாயம் மூன்று

## போர்க்களத்தில் புது மழை

பெருமாள்கோயிலின் திருவிழாக் கூட்டத்தைப் பிளந்து கொண்டு பிச்சுமணி சூறாவளி போல் நடந்து போய்க் கொண்டிருந்தான்.

''தடியன் - பொடியன்!-போக்கிரி! ராஸ்கல்! — இடியட்!'' என்று கூட்டத்தில் ஆங்காங்கே எழும்பிய சில முணுமுணுப்புகள்கூட அவன் காதுகளில் விழவில்லை. வளையல் கடைச் சம்பவமே அவன் மனத்தில் மேலோங்கி நின்றது. வசந்தி அவனுக்கு அசட்டுப் பட்டம் கட்டி விட்டாளே, அதற்கு ஏதாவது செய்தாக வேண்டும் என்ற ஆத்திரம் தான் அவனுடைய கைகளில் துடி துடித்துக் கொண்டிருந்தது. பெண்ணாக இருந்தால் வீட்டுக்குப் போய்ப் படுக்கையில் விழுந்து, ஓவென்று விம்மி விம்மி அழுது தீர்க்கலாம்! ஆனால் அவன் ஆண்மகனாயிற்றே...?

முஷ்டி பிடித்த தன் வலது கையை இடது கையால் பிசைந்துகொண்டே பிச்சுமணி பல தெருக்களையும் கடந்து கிராமணித் தெருவுக்குள் புகுந்தான்.

அந்தத் தெருவில்தான் இரண்டு வீடுகளுக்கு இடையேயுள்ள ஒரு வெற்றிடத்தில் தன்னுடைய பேபி ஆஸ்டின் காரை நிறுத்தி வைத்துவிட்டு வந்திருந்தான். கூட்டத்தைக் கண்டால் தன் சின்னஞ் சிறு கார் மிரண்டு ஏதாவது முரண்டு பண்ணும் அல்லது கூட்டத்தில் யாராவது 'பேபி'யின் மீது இடித்துவிட்டால் அது நொறுங்கி விடுமென்று பயந்துதான் அந்த இடத்தில் அதைப் பத்திரமாக நிறுத்தி வைத்திருந்தான்.

ஆனால் அவன் திரும்பி வந்து தன் காரைப் பார்த்ததும் அப்படியே திடுக்கிட்டு நின்று விட்டான்.

டாப் இல்லாத பேபி ஆஸ்டின் டூர் காரின் முன் சீட்டில் உயரமான ஒரு நாய் சிம்மம் போல் உட்கார்ந்திருந்தது!

காரைச் சுற்றிலும் தெருச் சிறுவர்கள் கூடிச் சற்றுத் தள்ளி நின்றபடியே நாயை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு குறும்பன் செவி கிழியும்படி சீட்டியடித்து, ''டேய்! நாய்க்காரின் சொந்தக்காரன் வருகிறான்டா!'' என்று உரக்கக் கத்தினான்.

காரில் உட்கார்ந்திருந்த நாய் ஏற்கனவே பிச்சுமணிக்கு அறிமுகமான பிராணிதான்!

அவன் தன் காரைக்
கொண்டு வந்து அதே
இடத்தில் நிறுத்திய
போது திருவிழாவில்
வேடிக்கை விநோ
தங்கள் பார்க்கலாட
என்ற 'குஷி' அதி
மிருந்ததால் அவன்
தன் காரிலிருந்த ஒ
'பிஸ்கட்' பொட்ட
லத்தை எடுத்து
பிரித்து ஒரு 'பிஸ்
கட்டை' 'மொறுக்
மொறுக்' என்
கடித்துத் தின்ன ஆரம்பித்தான். அ
மோப்பம் பிடித்துக் கொண்டு தெ
வின் ஒருபுறம் உட்கார்ந்திருந்த அ
நாய் குபீரெனப் பாய்ந்து வந்து அ
னுக்கு முன்னால் நின்று வாலை ஆ
டியபடி அவனுடைய பிஸ்கட்டை
ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிரு
தது. தெருவில் யாராவது வடை வா
கிப் பிட்டுப் பிட்டுச் சாப்பிட்டால்
சுற்றிலுமுள்ள ஏழைக் குழந்தைக
அந்த வடையையே பார்க்குமே, அ
போன்ற பார்வைதான் நாயின் க
களிலும் குடிகொண்டு பிச்சுமணியி
மனத்தை என்னவோ செய்த
மேலும் அந்த நாய் பிஸ்கட் சாப்பி
டுப் பழக்கப்பட்ட ஜீவன் என்பதை
புரிந்து கொண்ட பிச்சுமணி ஒரு பி
கட்டை எடுத்து விளையாட்டாக அ
நாயின் முன் போட்டான். நா
அதை விழுங்கி விட்டுத் தன் நன்றிய
தலைச் சம்பிரதாயமாக வாலை ஆட்டி
தெரிவித்தது. ஆனால் அந்தச் சிறு அ
முகத்தை வைத்துக் கொண்டு அ
விடாப்பிடியான நண்பனாக மா
வதையோ, அந்த நட்புரிமையுட
சர்வ சுதந்திரமாகத் தன் காரில்
ஏறி உட்கார்ந்து கொண்டு தன் வ
கையை எதிர்பார்த்துக் காத்திரு
தையோ பிச்சுமணி சிறிதும் எதி
பார்க்கவில்லை.

அதனால் பிச்சுமணி தன் உள்ளூ
புகைந்து கொண்டிருந்த ஆத்திரத்
மெல்லாம் அந்த நாயின் மீது திருப்
வனாக, ''ஏய்' ராஸ்கல்! கீழே இறங்கு
என்று அதட்டிக் கொண்டே அ
நாயின் காதைப் பிடித்துப் பர
வென்று கீழே தள்ள முயன்றான்.

நட்புரிமையை முறித்துக் கொள்
விரும்பாத நாயோ காரை விட்டு இற
மறுத்துச் சத்தியாக்கிரகம் செய்தது.

அந்தச் சமயம் அதைப் பார்த்த
தெருவில் இன்னொரு நாய் 'லொ
என்று குரைத்தது.

'இதேதடா, இன்னொரு சனியனு?' என்று நினைத்தபடி பிச்சுமணி திரும்பிப் பார்த்தான்.

அந்த இன்னொரு நாய் பயங்கர முகமுள்ள 'புல்டாக்'; அசல் இங்கிலீஷ் ஜாதி நாய்!

அதன் கழுத்துச் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு 'வாக்கிங்' புறப்பட்டிருந்த ஒரு நவநாகரிக மனிதர் அந்தப் பக்கமாக நடந்து வந்து கொண்டிருந்தார். ஈவினிங் ஸூட், அமெரிக்கன் கிராப்; மழுமழுவென்று க்ஷவரம் செய்யப்பட்ட முகம்; கனத்த உதடுகளில் ஒட்டிக் கொண்டு நர்த்தனமாடும் சிகரெட்; விழிகளிலே விஷமச் சிரிப்பு; கையிலே தங்கச் செயினுடன் கூடிய சிங்கப்பூர் கடிகாரம்; ஒரு விரலிலே ஒற்றைக் கல் மோதிரம் — இவை சகிதம் பணக்காரத் தோரணையோடு கம்பீரமாக வந்த அவருக்கு இருபத்தெட்டு வயதுக்கு மேல் இராது என்றாலும், படிப்பாராய்ச்சிகளாலும், பழுத்த அநுபவத்தாலும் நெற்றியில் சுருக்கங்கள்



அரு.ராமநாதன்

விழுந்து அவருக்கு அதிக வயதான தோற்றத்தை அளித்தது. அவர் சிரித்த முகத்துடன் விளங்கினாலும், எந்தக் கண மும் அவருடைய 'புல் டாக்' நாய் மாதிரியே கொடூரமாக மாறக் கூடிய வர் என்பதையும் அவருடைய முக பாவம் எடுத்துக் காட்டியது.

அவருடைய 'புல் டாக்' வீண் வம்பிழுப்பது போல் 'ளொள்' என்று குரைத்ததும் பிச்சுமணியின் காரில் சத் தியாக்கிரகம் செய்து கொண்டிருந்த முரட்டு நாய்க்கு ரோஷம் கிளம்பி விடவே, அதுவும் 'ளொள்' என்று உறுமியது.

பிறகு இரண்டு நாய்களும் இரண்டு எதிரிகளாகவே மாறி 'ளொள், ளொள்' என்று ஏராளமாகக் குதித்துத் தங்கள் தாய்பாஷையில் தாராளமாகத் திட்டிக் கொண்டன. வசவு முற்றினால் கைச் சண்டையில் வந்து முடிவது இயற்கை தானே....?

'புல்டாக்' தன் எஜமானரின் கைப் பிடியிலிருந்து திமிறி, கழுத்துச் சங்கிலி யோடு தன்னை விடுவித்துக் கொண்டு எதிரியை நோக்கிப் பாய்ந்தது.

பிச்சுமணியின் காரில் இருந்த நாயும் தவ்விப் பாய்ந்து 'புல்டாக்'கின் மீது குபீரென விழுந்தது. உடனே இரண்டு நாய்களுக்கும் இடையே பயங்கரமான யுத்தம் மூண்டு விட்டது. அது பயில் வான்களின் குஸ்திச் சண்டையை விடப் பார்ப்பதற்கு வெகு தமாஷாக இருக்கு மென்றாலும், தம் 'புல்டாக்'கின் உடலி லிருந்து ஒரு துளி ரத்தம் தெறித்ததை அதன் சொந்தக்காரரால் பொறுக்க முடிய வில்லை.

அதனால் அவர் பிச்சுமணியை நோக்கி, "ஏய், பாய்! என்ன வேடிக்கை பார்க்கிறே? உன் ராஸ்கலை இழுத்து அப்பாலே தள்ளு!" என்று அதட்டினார்.

"அது என் ராஸ்கல் இல்லே. உன் ராஸ்கல்தான் முதலில் சண்டைக்கு வந் தது!" என்று பிச்சுமணி கத்தினான்.

"அது சீமை நாய்! பெரிய இடத்துச் செல்லப் பிள்ளை! சண்டைக்கு வரத் தான் செய்யும். 'கண்ட்ரி' நாய்களைத் தான் 'கண்ட்ரோல்' பண்ணி வைக்கக் கணும்!" என்று புல்டாக்காரர் முழங் கினார். இதற்குள் தெருவில் நாய்ச் சண்டையைப் பார்க்க ஒரு சிறு ஜனக் கும்பல் திரண்டு விட்டது.

"சீ, சனியன்களா! சண்டையை நிறுத்துங்கள்" என்று பிச்சுமணி கர் ஜித்தான்.

நாய்களோ சண்டையின் மும்முரத் தில் பிச்சுமணியின் வார்த்தையைக் கொஞ்சமும் மதிக்கவில்லை.

பிச்சுமணி ஆவேசம் கொண்டவ னாகத் தன் இடுப்பில் உள்ள 'பெல்ட்' டைக் கழற்றி அந்த நாய்களை நோக்கி 'பெல்ட்'டினால் வீசி வீசி அடிக்க ஆரம் பித்தான்.

'பளீர்', 'பளீர்' என்று பெல்ட்டின் அடிகள் இரண்டு நாய்களின் மீதும் மாறி மாறி விழுந்து கொண்டே இருந்தன.

ஆனாலும் நாய்களின் சண்டை ஓயவே யில்லே. பெல்டின் அடிகளுக்குக் கீழே நெளிந்து நழுவிக் கொண்டு மறுபடியும் மறுபடியும் பாய்ந்து சண்டையிட்டுக் கொண்டேயிருந்தன.

பிச்சுமணி தன்னை மறந்து ஆக் ரோஷத்தில் தன் 'பெல்டி'ன் சக்தியைக் கடைசி வரை பார்த்து விடுவது என்று தீர்மானித்து விட்டான். இரண்டு நாய் களில் ஒன்று செத்தாலொழிய விட மாட்டான் போல் இருந்தது.

"கொல்றானே! அடித்துக் கொல் றானே! என் நாயை அடித்துக் கொல் றானே!" என்று பெரிதாகச் சத்தமிட்ட 'புல்டாக்' வாலிபர், "அடே, பையா! உன்னை என்ன செய்கிறேன் பார்!" என்று பிச்சுமணியைத் தாக்குவதற்குத் தயாராகத் தமது இடுப்பு 'பெல்ட்' டைக் கழற்றலானார்.

இந்த ரகளை என்ன பயங்கரத்தில் போய் முடியுமோ என்று சுற்றிலுமுள்ள கும்பல் நினைத்ததே தவிர, சண்டையை விலக்க எவரும் எதுவும் செய்ய முன்வரா மல் எல்லாரும் வெறுமனே வேடிக்கை பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

ஆனால் நல்ல வேளை!

எதிர் வீட்டின் ஜன்னல் வழியாக இவ்வளவையும் கவனித்துக் கொண் டிருந்த ஓர் இளம் பெண், பொறுமை யிழந்து போய், வேகமாகத் தண்ணீர்க் குடத்தைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்தாள்.

அவள் உமாதான்! பூஜையறையின் சுவர் மாடத்தில் உள்ள அவளுடைய சின்னப் பிள்ளையாரைக் கும்பிட்டு விட் டுத் தலை நிறைய குண்டு மல்லிகை சூடிக் கொண்டிருந்த போதுதான், தெருவில் நடக்கும் காட்சியை அவள் கவனித்தாள்.

இரக்க உள்ளமும் அதே சமயம் மனோ திடமும் வாய்ந்த அவள் எப்படியும் நாய்ச் சண்டையை விலக்கி விடுவது என்று தீர்மானித்து விட்டாள்.

"பாவம், நாய்களை அடிக்காதே!" என்று கூவிய உமா, நாய்களின் போர்க் களத்துக்கருகே வீராங்கனை போல் வந்து நின்றாள்.

பெண் குரலைக் கேட்டதும் பிச்சுமணி வியப்புற்று, குனிந்த தலை நிமிராமலே,

பெல்டை ஓங்கிய வண்ணம் ஒரு கணம் செயலற்று நின்றான்.

பிறகு அவன் மெல்லத் தன் விழிகளை உயர்த்தி உமாவைப் பார்த்தான்.

பார்த்ததுமே அவன், "ஆ! நீங்களா — டீச்சரம்மா?" என்றான் பையனைப் போன்ற கீச்சுக் குரலில்.

அவனைவிட உமா மூன்று வயதுதான் மூத்தவள் என்றாலும், இருவரும் அக்கா தம்பி போலவே மற்றவர் கண்களுக்குத் தோன்றுவார்கள் என்றாலும், அவ்விரண்டையும் பொருட்படுத்தாமல், அவள் ஒரு டீச்சரம்மா என்பதாலேயே பிச்சுமணிக்கு உமாவிடம் ஒரு மரியாதை ஏற்பட்டிருந்தது.

உமா பிச்சுமணியை நோக்கிப் பரபரப்புடன், "நீ தள்ளி நில்! நாய்களை நான் விலக்கி விடுகிறேன்! உடனே உன் நாயைப் பிடித்துக் கொள். அவருடைய நாயை அவர் பிடித்துக் கொண்டு போகட்டும்!" என்றாள்.

புல்டாக்கின் சொந்தக்காரருக்கோ இப்போது தன் நாயின் மீதுள்ள அனுதாபம் மாறி உமாவின் மீது சுவாரசியமாகத் திரும்பியது. உமா பச்சை நிற வாயில் புடவையும் வெள்ளை ரவிக்கையும் அணிந்து கொடியில் ஆடும் குண்டு மல்லிகை போல் இருந்தாள்.

"தண்ணீரைக் கொட்டப் போகிறேன்! தள்ளி நில். இல்லாவிட்டால் நீயும் நனைந்து விடுவாய்!" என்று உமா, பிச்சுமணியை எச்சரித்து விட்டு, குடத்தைத் தூக்கி, அதில் உள்ள நீரையெல்லாம் சண்டையிடும் மிருகங்கள் மீது கொட்டினாள். அந்தச் சமயம் பிச்சுமணி சிறிதும் நகராமல் குனிந்தபடியே நின்றதால், ஜிலுஜிலு வென்ற தண்ணீரில் நாய்களோடு சேர்ந்து அவனும் சிறிது நீராடி விட்டான்.

உடனே அவன் குளிர் ஜுரம் கண்டவன் போல், "ஆ!" என்று துள்ளிக் குதித்தான்.

உமா பரபரப்புடன், "சீக்கிரம்! சீக்கிரம்! உன் நாயைப் பிடித்துக் கொள்! இன்னொரு நாயை நான் பிடித்துக் கொள்கிறேன்!" என்று கூவியபடி, புல்டாக்கின் கழுத்துச் சங்கிலியைப் பிடித்திழுத்து அதன் சொந்தக்காரரின் கையில் சங்கிலியைக் கொடுத்தாள்.

"பலே! பலே! இங்கேயுள்ள இத்தனை பேர்களில் ஒரு பயலுக்குக் கூட இந்த யோசனை உதிக்கவில்லை! இந்தக் காலத்தில் பெண்களுக்குத்தான் மூளை அபாரமாக வேலை செய்கிறது!" என்று 'புல்டாக்' வாலிபர் பாராட்டுரையை வழங்கி விட்டு, பிச்சுமணியை நோக்கி, "உன் புத்தியை உன் பெல்டாலே அடித்துக் கொள்!" என்றார்.

**மானேஜர் :** நம்ம காரியாலயத்திலே வேலை பார்க்கிற பெண்களுக்கும் ஆண் பிள்ளைகளைப் போலவே சம்பளம் வேணுமாம். அமர்க்களப் படுத்தறாங்க.



**முதலாளி :** இதற்காகப் போய் அமர்க்களப் படுத்துவானேன்? சுலபமான வழி இருக்கிறதே! பார்க்கிற வேலையை விட்டுவிட்டு ஒரு புருஷனைக் கல்யாணம் செய்து கொண்டால், அவன் சம்பளம் முழுதும் முதல் தேதியன்று அவங்க கையிலே தானாகப் போய்விடுகிறது!

கும்பல் கொல்லென்று சிரித்தது!

பிச்சுமணி திருதிரு வென விழித்தான். இந்த ஏளனத்துக்கு மூல காரணமான நாயைப் பார்த்தான்.

அது சண்டை நிறுத்தத்தால் அசுவாரசியமடைந்து, பெல்ட் அடிகளின் வேதனைகளை அப்போதுதான் உணர்ந்து ஊளையிட்ட வண்ணம் தெரு மண்ணில் புரண்டு கொண்டிருந்தது.

"பாவம்! உன் நாயை அழைத்துக் கொண்டு போ!" என்று கூறினாள் உமா கனிவுடன்.

"அது என் நாயல்ல!" என்று பிச்சுமணி கத்தினான்.

"பின் யார் நாய்?"

"எவனோ ஓர் அயோக்கிய ராஸ்கல் ஆடு மாடுகளை ஊரில் மேய அவிழ்த்து விடுவது போல் அந்த நாயை அவிழ்த்து விட்டிருக்கிறான். தெரியாத்தனமாக அதுக்கு ஒரு பிஸ்கட்டைப் போட்டேன். அது என்னுடைய காரிலே ஏறி உட்கார்ந்து விட்டது!"

உமா யோசித்தாள். பிறகு மெல்லச் சிரித்தாள். "உன் காரைத் தெருச் சிறுவர்கள் தொடாதபடி அந்த நாய் காவல் காத்துக் கொண்டிருந்தது. நான் அதை ஜன்னல் வழியாகக் கவனித்தேன். பார், ஒரு பிஸ்கெட் போட்டதாலே அது உன்னிடம் எவ்வளவு அன்பு கொண்டு விட்டது!" என்றாள். பிறகு அவள் நாயின் அருகில் சென்று அதை வாஞ்சையுடன் தடவிக் கொடுத்தாள். அது வாலை ஆட்டியது!

அன்புக்குத்தான் எவ்வளவு சக்தி....? அதனால்தான் 'அன்பே தெய்வம்'



என்று சொல்கிறார்கள்! ஆமாம்; 'அன்புதான் தெய்வம்; அதற்காகத் தன்னை மற.' — இந்த இரண்டே வாக்கியங்களுக்குள் ஆத்ம தத்துவம் மட்டுமல்ல, நடைமுறை வாழ்க்கைத் தத்துவமும் அடங்கி விட்டது. பக்திமார்க்கமாகட்டும், காதல் துறையாகட்டும், சமுதாய உறவாகட்டும்எவன் அன்பில்தன்னை மறந்து ஈடுபடுவதில்லையோ, அவன் உண்மையானவனாக இருப்பதில்லை...

உமாவின் கரு விழிகளில் கண்ணீர் துளித்தது: அது பிச்சமணியின் இதயத்தை ரம்பம் போல் அறுத்தது.

"நான் இருதயமில்லாத மிருகம், கொலைகாரன் என்று நினைக்கிறீர்களா?" என்று பிச்சமணி அழாத குரலில் விம்மினான்.

உமா அவனை ஏறிட்டுப் பார்த்தாளேதவிர பதில் ஏதும் சொல்லவில்லை.

பிச்சமணி ஏதோ உணர்ச்சி ஆவேசங் கொண்டவனாக, இடது கையில் பெல்ட்டைப் பிடித்து ஓங்கி, தன் வலது கையை நீட்டி, "இந்தக் கைதானே அடித்தது?" என்று பளீர் என்று அதன் மீது அடித்துக் கொள்ளலானான்.

உமா பதறியவளாய் அவன் அருகில் பாய்ந்து, அவனுடைய ஓங்கிய கையைப் பெல்டுடன் சேர்த்துப் பிடித்துக் கொண்டாள்.

"அடேடே! சினிமா மாதிரி இருக்கிறதே! பையன் ஏராளமாகச் சினிமா பார்த்திருப்பான் போலிருக்கிறது!"— என்று ரசித்த 'புல்டாக்' மாஸ்டர், "ஆனால் அன்பு என்பதே அடிமைத்தனத்தையும் அவஸ்தைகளையும் தான் உண்டு பண்ணும்!" என்று புரட்சிகரமான பொன்மொழியைப் பொழிந்தார்.

"நீங்கள் போங்கள்!" என்று உமா அவரை நோக்கிக் கத்தினாள்.

"அந்த ரவுடிப் பையனிடமிருந்து என் 'டைகரை'க் காப்பாற்றிய புண்ணியவதி நீ! இதுக்குஏதாவது பிரதி யுபகாரம் தேவைப்பட்

டால் இந்த விலாசத்தில் வந்து பார்!'' என்று 'புல் டாக்' மாஸ்டர் தம்முடைய விஸிட்டிங் கார்டை அவளிடம் நீட்டினார். அதை உமா மரியாதைக்காக வாங்கி வைத்துக் கொண்டாளே தவிர, அதை ஒரு முறை கூடப் படித்துப் பார்க்க வேண்டும் என்று எண்ணவில்லை!

மிஸ்டர் 'புல்டாக்' அவனைச் சுவாரசியமாக ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு, நிஜக் குற்றவாளியான தமது 'டைகரை' இழுத்துக் கொண்டு நடந்து அந்த இடத்தை விட்டு மறைந்தார்.

பிச்சுமணியின் கையைக் கவனித்த உமா, ''ஹாங்!.... காயம் பட்டிருக்கிறதே....'' என்றாள்.

''பரவாயில்லை! கொஞ்சம் சிராய்ப்புத்தான்!'' என்றான் பிச்சுமணி அலட்சியமாக.

''உள்ளே வா! டிஞ்சர் எடுத்துத் தருகிறேன்....'' என்றாள் உமா.

தெருவின் வீடுகளில் உள்ள குடித்தனக்காரர்களில் சிலர் வாசலுக்கு வந்தும், ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தும், குசுகுசுவென ஏதோ இரகசியம் பேசிக் கொண்டும் தெருச் சம்பவத்தை ஏதோ நாடகக் காட்சியைப் பார்ப்பது போல் வியப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.



உமாவுக்கு அது என்னவோ போல் இருந்தது. அவள் சட்டென்று வேகமாகத் தன் வீட்டினுள் போய் விட்டாள்.

பிச்சுமணியும் ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவன் போல் அவளைப் பின்தொடர்ந்து அந்த வீட்டினுள் புகுந்தான்.

## அத்தியாயம் நான்கு

# மலரும் மொட்டும்

பொழுது இருட்டி விட்டது.

உமாவின் வீட்டினுள் பிரகாசமாக மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பிச்சுமணி தயங்கித் தயங்கி நடந்து வந்து கொலுக்கூடத்தினுள் நின்றான்.

உமா, டிஞ்சர் உள்ள மருந்துப் பெட்டியை எடுத்து வந்தாள். அவசரங்களுக்கு அபூர்வமாகத் தேவைப்படும் பொருட்களைக் கூட அவள் முன் ஜாக்கிரதையாக வாங்கி வைத்திருப்பது வழக்கம்.

''நான் டீச்சரம்மா என்பது உனக்கு எப்படித் தெரியும்? என்னை எங்கேயாவது பார்த்திருக்கிறாயா?'' என்று உமா மெல்லக் கேட்டாள்.

''ஓ, பார்த்திருக்கிறேனே! ஒரு சமயம் இந்தத் தெருவில் பெட்டிக் கடையின் முன் என் காரை நிறுத்தி ஒரு சோடா வாங்கிக் குடித்துக் கொண்டிருந்த போது, எதிரேயுள்ள ஒரு வீட்டில் நீங்கள், சில குழந்தைகளுக்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தீர்கள்....'' என்றான் பிச்சுமணி வெகு உற்சாகமாக.

அது உமாவுக்கு வியப்பூட்டியது. காரில் செல்லும் பையன் எத்தனையோ வீடுகளில் எத்தனையோ விதமான பெண்களைப் பார்த்திருப்பான். அவர்களில் குறிப்பாகத் தன்னை மட்டும் இவன் எப்படி ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறான்....?

''டீச்சரம்மா என்றால் குழந்தைகள் பயப்படும்! ஆனால் உங்கள் முன்னால் குழந்தைகள் சிரித்துக் கொண்டே இருந்தன!'' என்றான் பிச்சுமணி.

''டீச்சரம்மா என்றால் பயப்படக் கூடிய பிராணியா?'' என்று உமா மெல்லிய புன்முறுவலுடன் கேட்டாள்.

''ஆமாம். நான் சிறு பையனாக இருந்த போது எனக்கு இங்கிலீஷ் டியூஷன் சொல்லிக் கொடுக்க ஒரு சட்டைக்கார டீச்சரம்மாவை என் தாத்தா ஏற்பாடு செய்திருந்தார். அந்த டீச்சர் எங்கள் வீட்டுக்குள் வந்தாலே மகா பயங்கரம்! என் தாத்தா கூடக் குறுக்கே வரப் பயப்படுவார்! அந்த டீச்சரம்மா அவ்வளவு கண்டிப்பு!''

''நானும் கண்டிப்பானவள்தான்!''

''ஆனால் உங்களிடம் பயம் தோன்றவில்லையே ?''

உமா மெல்லச் சிரித்துக் கொண்டாள். அவளுக்கு விஷயம் புரிந்து விட்டது. குழந்தைத்தனமான பிச்சுமணியின் உள்ளத்தில் குழந்தைகளிடம் பிரியமுள்ள டீச்சரம்மா எளிதில் பதிந்திருக்கிறாள் என்றே நினைத்தாள். அதற்கு மேல் அவள் எதுவும் அர்த்தப்படுத்திக் கொள்ளவில்லை.

''தெப்பமாக நனைந்திருக்கிறாயே ! அதோ கொடியில் டவல் இருக்கு! எடுத்துத் துவட்டிக் கொள்! நான் பஞ்சில் டிஞ்சர் நனைத்து வருகிறேன்!'' என்றாள் உமா பரிவுடன்.

பிச்சுமணி சுற்றுமுற்றும் பார்த்தான். ''வீட்டில் நீங்கள் மட்டும் தனியாகவா இருக்கிறீர்கள்?'' என்று அவன் கேட்டான்.

''இல்லை; பாட்டி கதாகாலட்சேபம் கேட்கப் போயிருக்கிறாள்!''

''திரும்பிவரப் பத்து மணி ஆகுமே?''

அதைக் கேட்டதும் உமாவுக்குக் கோபம் வரவில்லை. பிச்சுமணி வாலிபன்தான் என்றாலும், அவனது சிறு பிள்ளைத்தனமான பாவனைகளால் அந்தக் கேள்வி குழந்தைகளின் மழலைப் பேச்சைப் போலவே ஒலித்தது!

நடு முற்றத்தில் உள்ள கொடியில் புடவை, ரவிக்கை, பாவாடை முதலியன காய்ந்த நிலையில் தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் நடுவே தேங்காய்ப் பூ டவல் இருந்தது.

துவட்டிக் கொள்வதற்காகப் பிச்சுமணி அந்தத் துண்டை எடுத்தான். அதிலிருந்து 'கம்'மென்று சந்தன சோப்பின் வாசனை வீசியது. அதோடு ஒருவித நறுமணமும் கலந்து கமழ்ந்தது. அது உடம்பின் நறுமணமா, அல்லது குண்டுமல்லிகையின் மணமா என்று ஆராயும் சக்தி பிச்சுமணிக்குக் கிடையாது !

அந்தத் துண்டினால் பிச்சுமணி தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு தலையைத் துவட்டிக் கொண்டான். ஆனால் உடம்பிலுள்ள சட்டையின் ஒரு பாகம் மட்டும் ஈரமாகவே இருந்தது.

காயம் பட்ட அவனுடைய கையை ஆராய்ந்து பார்த்த உமா, ''பெல்டின் கீறல் விழுந்திருக்கிறதே, பிளாஸ்திரி போட்டுவிடட்டுமா?'' என்று கனிவுடன் கேட்டாள்.

''ஐயய்யோ, வேண்டாம்! கையில் பிளாஸ்திரியைப் பார்த்தால் தாத்தா பெரிதாக ஆர்ப்பாட்டம் செய்து, கையை ஆபரேஷன் தியேட்டருக்கு அனுப்பி விடுவார்! வெறும் டிஞ்சரே போதும்! தாத்தா கண்களில் படாதபடி கையை மறைத்துக் கொள்வேன்!''

உமா பஞ்சில் டிஞ்சரைத் தோய்த் துத் தோய்த்துப் பிச்சுமணியின் கையில் உள்ள காயங்களில் தடவினாள். அப் போது கூச்சமோ, இளம் பெண்களுக்கு இயற்கையாக ஏற்படக்கூடிய நாணத் தின் தயக்கமோ, நெஞ்சின் படபடப்போ எதுவும் அவளுக்கு ஏற்பட வில்லை. நோயாளி ஒருவனுக்குப் பணிவிடை செய்யும் நர்ஸின் கனிவு உணர்ச்சி ஒன்று தான் அவளிடம் மிகுந்திருந்தது.

''உன் பெயர் என்ன?'' என்று அவள் கேட்டாள்.

''என் பெயர் பிச்சுமணி! ஆனால் தாத்தா என்னைப் 'பையா, பையா'— என்றுதான் கூப்பிடுவார்! மற்றவர் களும் என்னை மேஜர் வீட்டுப் பையன் என்றே சொல்லுவார்கள். ஆனால், எனக்கு இருபத்தொரு வயது நடக் கிறது. இன்னும் என்னைப் பையன் என்றே எல்லாரும் கூப்பிடுவது எனக் குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை!''

உமா மெல்லச் சிரித்தாள்! 'நீ நல்ல பையன்; வெகுளிப் பையன்' என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது; ஆனால் சொல்ல வில்லை!

''உன் தாத்தா ராணுவத்தில் ஏதா வது மேஜராக இருக்கிறாரா?''

''இல்லை. அவர் பழைய பட்டாளத் தார்! ரிடையராகி வீட்டுக்கு வந்து விட்டார்! ராணுவத்தின் ஒழுங்கு நட வடிக்கைகளை இப்போது என் மீதுதான் நடத்திக் காட்டப் பார்க்கிறார்!''

உமா முதன் முறையாகக் கலகல வென்று வாய் விட்டுச் சிரித்தாள். பிச்சுமணியும் அந்தச் சிரிப்பை எதிர் பார்த்தானோ என்னவோ....?

''தாத்தா ரொம்ப வயதானவரா?''

''இல்லை! எழுபத்தாறு வயதுதான் ஆகிறது. இன்னும் இருபது வருஷ மாவது அவர் அதிகாரம் செய்து கொண்டிருப்பார்! நாங்கள் வீர பரம் பரையைச் சேர்ந்தவர்கள்! சண்டை யில் யாராவது எங்களைச் சுட்டுத் தள்ளி னால் ஒழிய, நாங்களாகவே சாகவே மாட்டோமாம்!''

''உன் தாத்தா பெயர்?''

''மேஜர் ராமதுரை!''

கொலுக்கூடத்தின் ஒருபுறம் புத்த ரின் வெண்கலச் சிலை, காந்தியின் மண் பொம்மை, இவ்விரண்டுக்கும் நடுவே ஏசுநாதரின் ஒரு சிறிய தந்தச் சிலை, இவை அன்பின் ஒளியை வீசிக் கொண் டிருந்தாலும், சுவரெங்கும் வரிசையாகப் பல விதமான குழந்தைகளின் போட் டோப் படங்கள் மாட்டப்பட்டுப் புத் தம் புதிய பூமொட்டுகள் போல் சிரித் துக் கொண்டிருந்தன. ஆங்காங்கே தொங்கும் காலண்டர்களில் கூடக் குழந் தைகளின் சித்திரங்களே தென்பட்டன.

''உங்களுக்குக் குழந்தைகள் என்றால் ரொம்ப ரொம்பப் பிடிக்குமோ?'' என்று கேட்டான் பிச்சுமணி.

''ஆமாம்! நானே ஒரு குழந்தையை எடுத்து வளர்த்திருக்கிறேன்!''

''உங்கள் குழந்......?''

''இல்லை. அது என் சித்தியின் ஆண் குழந்தை. அழகழகாய் இருக்கும். அதன் மேல் எனக்கு உயிர்! எந்நேரமும் நான் அதற்கு வேண்டியதைச் செய்வேன்.''

''அந்தக் குழந்தை....?''

''பிறந்த இரண்டாவது வருஷமே அதைப் பிள்ளையார் கொண்டு போய் விட்டார்!'' என்று சொல்லும்போது உமாவின் விழிகளில் நீர் துளித்தது.

''ஏன்? குழந்தையைக் கொடுத்து விட்டுப் பிள்ளையார் ஏன் உடனே பறித் துக் கொண்டு விட்டார்?''

## மிருகங்களைப் பிடிக்கும் மன்ரோ

பிராணிகளைப் பிடித்து வசப்படுத்தும் ஜார்ஜ் மன்ரோ என்ற இந்தியர் தமது மனைவி யுடன் லோவோன் உயிர்க்காட்சிச் சாலைக்கு விஜ யம் செய்தபோது பத்து வருடங்களுக்கு முன் அவர் இந்தியாவில் பிடித்த யானை அவருக்கு மாலை யிட்டு வரவேற்றது. இவர் உலகிலுள்ள உயிர்க் காட்சிச் சாலைகளுக்குப் பிராணிகளை விநியோகம் செய்திருப்பதால் அவை எப்படி இருக்கின்றன என்பதை நேரில் கண்டறிய உலக சுற்றுப் பிர யாணத்தை மேற்கொண்டார்.

இவர் கல்கத்தாவைச் சேர்ந்தவர். காட்டு மிருகங்களைக் கண்ணி வைத்துப் பிடிக்கும் ஆபத் தான வேலையைச் சென்ற பன்னிரண்டு வருடங் களாகச் செய்து வருகிறார். இதுவரை இவர் 150 யானைகளையும், 200 புலிகளையும் பிடித்து உயிர்க் காட்சிச் சாலைகளுக்கு விநியோகம் செய்திருக்கிறார்.



**நோயாளி** (*கண் டாக்டரிடம்*): எந்தப் பொருளும் இரண்டு இரண்டாகத் தெரியுதுங்க டாக்டர்!

**கண் டாக்டர்:** அவ்வளவுதானே? அது ஒன்றும் பெரிய நோய் இல்லை. சுலபமாகக் குணப்படுத்திவிடலாம். ஆமாம், உங்கள் நாலு பேருக்குமா அந்த நோய்?

நோயாளி சுற்றிச் சுற்றிப் பார்த்தார். அந்த அறையில் அவர் ஒருவரைத் தவிர வேறு யாரையும் காணோம்!

''ஒரு குழந்தையின் மீது பிரியம் வைத்தால் போதாது, எல்லாக் குழந்தைகளின் மீதும் நான் அன்பு வைக்க வேண்டும் என்பதற்காகத்தான்! ஆனால்....''

''ஆனால்....?''

''அந்தக் குழந்தை இறந்த பிறகுதான் என்னைக் கண்டாலே சித்திக்குப் பிடிக்க வில்லை யென்று எல்லாரும் சொல்கிறார்கள். என்னைப் பார்த்தால் நான் வளர்த்த குழந்தையின் நினைப்பு சித்திக்கு வந்து விடுகிறது. அதனால்தான் சித்தி என்னைப் பார்க்க விரும்புவதில்லை'' என்றாள் உமா தழுதழுக்கும் குரலில்.

அவளுடைய நெஞ்சின் உருக்கத்தில் பிச்சுமணியின் உள்ளமும் இழைந்தது.

''உங்கள் மனசு ரொம்ப உடைந்து போயிருக்கிறதா?''

''இல்லை. சின்னப் பிள்ளையார் எனக்கு வேறு வழி காட்டிவிட்டார். இப்போது என் வாழ்க்கை அமைதியாகவே போய்க் கொண்டிருக்கிறது.''

''இன்னும் உங்கள் பெயரைச் சொல்லவில்லையே?'' என்று பிச்சுமணி ஆவலோடு கேட்டான்.

''என் பெயர் உமா!''

''உமா என்றால்...?''

''வெறும் உமா தான்!''

''மிஸ் உமா தானே?''

''ஆமாம்! இன்னும் மிஸஸ் ஆகவில்லை!'' என்று உமா சிரித்தாள். அவனையும் அறியாமல் அந்தக் குறும்பு எப்படித்தான் அவனிடம் உற்சாகமாகக் கிளம்பியதோ, அவனுக்கே புரியவில்லை.

பிச்சுமணி தன் மனத்துக்குள் 'உமா, உமா' என்று இரண்டு முறை சொல்லிப் பார்த்துக் கொண்டான். உமா என்ற அந்தப் பெயரிலேயே நெஞ்சை மென்மையாக வசியப்படுத்தும் ஒருவித வாஞ்சையின் தொனி உறைந்திருப்பதாக உணர்ந்தான்.

''நீ காலேஜில் படிக்கிறாயா?'' என்று உமா மெல்லக் கேட்டாள்.

பிச்சுமணியின் மலர்ந்த முகம் உடனே வாடிவிட்டது. அவன் தொங்கிய முகத்துடனே, ''இல்லை. எஸ்.எஸ்.எல்.ஸி. வரைதான் படித்திருக்கிறேன். அதற்கு மேல் காலேஜில் சேரக்கூடாது என்று என் தாத்தா தடையுத்தரவு போட்டு விட்டார்'' என்றான்.

''ஏன்?''

''காலேஜில் படித்தால் நான் அதிகப் பிரசங்கியாகி விடுவேனாம். நான் புத்திசாலியாகக் கூடாது; எப்போதும் அவருடைய முட்டாள் பையனாகவே இருக்க வேண்டும் என்பது தாத்தாவின் நினைப்பு!''

உமா அவனைக் கூர்ந்து நோக்கினாள்.

பிச்சுமணியின் பார்வை அங்கு ஒரு புறம் மேஜை மீது வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் தடித்தடி புத்தகங்களின் மீது சென்றது.

உடனே பிச்சுமணியின் அழகான முகம் உணர்ச்சி வேகத்தால் பொங்கி விம்மியது.

''நான் காலேஜில் படிக்காதது என் குறையல்ல. என் தாத்தா செய்த பெரிய தப்பு!'' என்று அவன் அழாத குரலில் குமுறினான்.

''அப்படி நினைக்காதே. காலேஜில் படித்தவர்கள்தான் புத்திசாலிகள் என்று அர்த்தமல்ல. பள்ளிப் படிப்பு இல்லாதவர்கள்கூடப் பெரிய பெரிய அரசியல் மேதைகளாகவும், தொழில் நிபுணர்களாகவும், உலகை உய்விக்கும் ஞானிகளாகவும் இருப்பதில்லையா?''

அந்த வார்த்தைகள் அழும் குழந்தைக்குத் தாய் கூறும் ஆறுதல் வார்த்தைகள் போலவே பிச்சுமணிக்குத் தோன்றின.

''நீங்கள் பி.ஏ.யா, எம். ஏ.யா?'' என்று பிச்சுமணி திரிசங்கு சொர்க்க நிலையில் தத்தளிக்க முடியாமல் வாய் திறந்தே கேட்டுவிட்டான்.

''இல்லை. நானும் எஸ். எஸ். எல். ஸி. வரையில்தான் படித்திருக்கிறேன்'' என்றாள் உமா.

பிச்சுமணிக்குப் பரம திருப்தியாகி விட்டது!

உமாவை அவளுடைய தகப்பனார் எஸ். எஸ். எல். ஸி. வரைதான் படிக்க வைத்திருக்கிறார். அதற்குமேல் குடித்தனம் நடத்தப் போகிற பெண்களுக்கு அதிகப் படிப்பு ஆகாது என்று பாட்டி வாதாடி அவளைக் கல்லூரியில் சேர விடாமல் தடுத்துவிட்டாள். ஆனால் உமாவுக்கு இருபத்தி நாலு வயதாகியும் தனிக் குடித்தனம் ஆரம்பிப்பதற்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை! அதற்கு ஒரு காரணமும் இருந்தது. அதை உமா நினைத்துப் பார்க்க விரும்புவதே யில்லை!

(தொடரும்)

கல்கி

# வெள்ளி விழா பரிசுத் திட்டம்



தமிழ் கூறும் நல்லுலகமனைத்திலும், தமிழ் மணம் பரப்பி வரும் 'கல்கி' பத்திரிகைக்கு இன்னும் இரண்டே ஆண்டுகளில் இருபத்தைந்தாவது வயதுபிறக்கப்போகிறது. இம்மகிழ்ச்சிகரமான செய்தியைச் சென்ற இதழிலேயே பரிசுத் திட்டம் ஒன்று வெளியிட்டுக் குறிப்பிட்டிருந்தோம்.

'கல்கி' தொடங்கிய காலத்திலிருந்து எழுத்தாளர்களின் நலனையும் உரிமையையும் பேணிப் பாதுகாத்து வந்திருக்கிறது என்னும் விஷயம் எழுத்தாளர் நண்பர்களுக்குத் தெரியாததல்ல. எழுத்தாளர்களின் சிறந்த சிருஷ்டிகளை வெளியிட்டுத் தானும் மகிழ்ந்து நேயர்களையும் மகிழ்வித்து வரும் 'கல்கி' எப்பொழுதுமே எழுத்தாளர்களின் உரிமைகளை அவர்களுக்கே விட்டு வந்திருக்கிறது. சிறந்த எழுத்தோவியங்களைக் 'கல்கி'யில் முதன் முறையாக வெளியிடும் உரிமையைத் தவிர மற்ற எல்லா உரிமைகளையும் எழுத்தாளர்களுக்கே விட்டுக் கொடுத்து வந்திருக்கிறது. வெள்ளி விழா பரிசுத் திட்டத்துக்காக வரும் நாவல்கள் கதைகள் ஆகியவற்றுக்கும் எழுத்தாளர்களின் உரிமைகளுக்கு மதிப்புக் கொடுக்கும் இதே நல்ல முறையைப் பின்பற்றத் தீர்மானித்திருக்கிறோம். மீண்டும் பரிசுத் திட்டத்தின் முக்கிய அம்சங்களை நினைவுபடுத்துகிறோம்.

'கல்கி'க்கு இருபத்தைந்தாண்டுகள் நிரம்புவதையொட்டி சிறந்த நாவல்களுக்கும், சிறுகதைகளுக்குமாக இருபத்தையாயிரம் ரூபாய் ரொக்கப் பரிசாக வழங்கத் திட்டமிட்டிருக்கிறோம்.

**நாவல்களுக்கு மூன்று பரிசுகள்**

| | | |
|---|---|---|
| முதற் பரிசு ... | ... | ரூ. 10,000 |
| இரண்டாவது பரிசு | ... | ரூ. 7,500 |
| மூன்றாவது பரிசு ... | ... | ரூ. 5,000 |

**சிறுகதைகளுக்கும் மூன்று பரிசுகளே**

| | | |
|---|---|---|
| முதற் பரிசு ... | ... | ரூ. 1,000 |
| இரண்டாவது பரிசு | ... | ரூ. 500 |
| (மூன்றாவது பரிசு கதை ஒன்றுக்கு ரூ. 100 வீதம் 10 கதைகளுக்கு) | ... | ரூ. 1,000 |

ஆற அமர யோசித்துச் சிறந்த கற்பனையை உருவாக்கப் போதுமான அவகாசம் அளித்திருக்கிறோம். சமூகமாயிருக்க வேண்டும், அல்லது சரித்திரமாக இருக்க வேண்டும் என்ற கட்டுதிட்டங்களும் கிடையாது. தமிழ் மண்ணின் மணம் உலகுக்குப் பரவும் வகையில், சிறந்த படைப்புக்களே தேவை.

போட்டி சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

இலக்கியத் துறையிலே சிறந்து விளங்கும் அறிஞர்கள் பஞ்சாயத்தார்களாகப் பொறுப்பேற்று நீதி வழங்குவார்கள்.

பரிசுப் போட்டியின் முடிவு தேதி 30-9-64 தான். இந்த அவகாசத்தை நன்குபயன்படுத்திக் கொண்டு சிறந்த சிருஷ்டிகளை எழுத்தாள அன்பர்கள் அனுப்பி வைப்பார்களென நம்புகிறோம்.





1,2,3. திக்கிக்கும் தீஞ்சுவைக் கவியமுதத்தால் தெய்வப் பணி புரிந்த திருநாவுக்கரசர் பெருமானுக்குத் திருவாரூரில் திருக்கோயில் இருக்கிறது. இக்கோயிலின் மகா கும்பாபிஷேகம் தருமபுர ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ கயிலை மகா சந்நிதானத்தின் முன்னிலையில் ஜூலை 14ம் தேதி விமரிசையாக நடந்தேறியது. சுமார் இருபத்தையாயிரம் பக்தர்கள் இந்த வைபவத்தில் கலந்து கொண்டனர். 4. தஞ்சையில் ஹரிகதா காலட்சேபப் பயிற்சிப்



பள்ளியை மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் ஜூலை 9ம் தேதி ஆரம்பித்து வைத்தார். படத்தில் மந்திரி அவர்களையும், அண்ணாசாமி பாகவதர் அவர்களையும் காணலாம். 5. சென்னை தியாகராய நகரில் வெங்கட நாராயணா சாலையில் உள்ள நகரசபை மைதானத்திலும் சோமசுந்தரம் சாலையிலுள்ள நகரசபை மைதானத்திலும் சத்தியமூர்த்தி கோப்பை, மக்ரேவியா கோப்பைக்காக நடைபெற்ற கூடைப் பந்தாட்டப் பந்தயங்கள் இரண்டிலும் சென்னை நேஷனல் கூடைப் பந்தாட்டக் குழுவினர் வெற்றி பெற்றனர்.



ஹமாம்—என் மனதுக்கிசைந்த ஒரே சோப்.




ர்ப நறுமணமுள்ள சோப்—ஹமாம்—குடும்பத்திற்கான சோப். டாடா தயாரிப்பு.

# துக்கந் தவிர்

**பி**ளூட்டார்க் என்பவன் ஒரு கிரேக்க அறிஞன். கி. பி. 46 முதல் 120-ம் வருஷம் வரை வாழ்ந்தானென்பர். கிரேக்க ரோம இதிகாசங்களில் புகழ் பெற்றிருந்த பலருடைய வாழ்க்கை வரலாறுகளைக் கட்டுரை வடிவத்தில் சுவைபட எழுதியிருக்கிறான். தவிர, அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படக்கூடிய அநேக கட்டுரைகள் எழுதித் தன் பரந்த மனப்பான்மையையும் உலக அநுபவத்தையும் வெளிப்படுத்தியிருக்கிறான். இவனுக்கு நான்கு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. பெண் குழந்தையின் பெயர் டிமோக்ஸேனு; விளையாட்டுப் பருவத்திலேயே இறந்து விட்டது. அப்பொழுது இவன் ஊரில் இல்லை. வெளியூருக்குச் சென்றிருந்தான். குழந்தையின் மரணச் செய்தியைக் கேள்வியுற்றதும், தன் மனைவிக்கு ஆறுதல் அளிக்கின்ற முறையில் ஒரு கடிதம் எழுதினான். அதன் சில பகுதிகள் வருமாறு:—

என் வாழ்க்கைத் துணைவியே!

நமது அருமை மகள் இறந்து விட்ட செய்தியை எனக்குத் தெரிவிக்கும்படி நீ அனுப்பிய ஆள், என்னை வந்து பார்க்கவில்லை; எங்கேயோ வழி தவறிப் போய் விட்டான்போலிருக்கிறது. ஆதலால், நான் டானக்ரா என்ற ஊருக்குவந்த





பிறகுதான், குழந்தையைப் பற்றித் தெரிந்துகொண்டேன். ஏற்கனவே ஈமச் சடங்கு நடைபெற்று முடிந்திருக்கலாம். அது சம்பந்தமான ஏற்பாடுகள், உனக்கு, இப்பொழுதோ, பிறகோ, குறைந்த அளவு துயரத்தைக் கொடுக்கக் கூடியனவாக இருந்திருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இன்னும் சில சடங்குகளைச் செய்தால், உன் துயரம் குறையும் என்று நீ கருதும்பட்சத்தில் அப்படியே செய்து விடு. என் அனுமதிக்காகக் காத்திராதே. ஆனால் ஆடம்பரமான சடங்குகளும் அர்த்தமில்லாத சடங்குகளும் தவிர்க்கப்பட வேண்டும். அவைகளுக்கு நீ இடம் கொடுக்க மாட்டாய் என்பது எனக்குத் தெரியும்.

நமக்கு வரிசையாக நான்கு ஆண் குழந்தைகள் பிறந்த பிறகு ஒரு பெண் குழந்தை வேண்டுமென்று நீ ஆசைப்பட்டாய். அப்படியே ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவள் உனக்கு எவ்வளவு அருமையானவளாயிருந்தாள் என்பது எனக்குத் தெரியும்.

அவள் எல்லோரிடத்திலும் அன்பு செலுத்தி வந்தாள். தனக்குப் பால் கொடுக்கும் தாதியைக் கொண்டு மற்றக்குழந்தைகளுக்கும் பால் கொடுக்கச் செய்வாள். அதுமட்டுமன்று: தன்னுடைய விளையாட்டுப் பொம்மைகளுக்கும் பால் கொடுக்கச் செய்வாள்! தன்னோடு விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகளை, தன்னுடன் விருந்து சாப்பிட வேண்டுமென்று வற்புறுத்துவாள்; தனக்குப் பிரியமானவைகளையெல்லாம் அந்தக் குழந்தைகள் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று விரும்புவாள்; தனக்கு மகிழ்ச்சி தரும் எல்லாவற்றையும் மற்றவர்களும் அநுபவிக்க வேண்டுமென்று ஆசைப்படுவாள். அவளுடைய இந்த மாதிரியான குணங்களெல்லாம் அவள் உயிரே

வெ. சாமிநாதசர்மா

ந்த போது நமக்குப் பெரு
ழ்ச்சி யளித்தன. இப்பொழுது
ற்றை— அந்தச் சுபாவங்களை—
ந்து நாம் ஏன் துக்கப்பட
ண்டும்? நம்முடைய சென்ற
மகிழ்ச்சியை நிகழ்கால
த்திலே இழந்து விடக்
ாது.
துக்கம் விசாரிக்க வந்த
ன் முன்னிலையில் நீ உன்
த்தை மிகைப்படுத்திக்
ட்டிக் கொள்ளாமல்
க்கிக் கொண்டிருந்தா
றும், பிரேத அடக்கச்
ருகள் யாவும் அமைதி



வும் சீராகவும்
பெறச் செய்தாய்
ரும் கேள்விப்பட்
ன். இதைக் கேட்டு
ஆச்சரியப்பட
லை. ஏனென்றால்
க் காலத்திலும்
நிலையிலும் நீ
ம்பரத்தையும்
வீட் பகட்டையும்
ம்பாதவன் என்பது
க்குத் தெரியும்.

மையுள்ள ஒரு ஸ்திரீ,
படிக் களியாட்டங்
ல் நிதானம் தவறு
இருக்க வேண்

டுமோ அப்படியே துக்கம் நேரிடுகிற போதும் நிதானம் தவறாமல் இருக்க வேண்டும்.

எப்பொழுதுமே துக்கத்தை அதிகமாகக் கொண்டாடக் கூடாது. அப்படிக் கொண்டாடினால் பிறகு அது நம்மை விட்டுப் போகவே போகாது. நித்தமும் துக்கப்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதான். துக்கத்தை மிதமிஞ்சிக் கொண்டாடுவதனால், நமது சக்தி குன்றிப் போகிறது; குறுகிய மனப்பான்மை உண்டாகிறது; மகிழ்ச்சியென்பது மறைந்து போகிறது. மற்றும் துக்கத்தை அதிகமாகக் கொண்டாடுவதனால், நமது உடல் நலம் குன்றி விடுகிறது. உண்மையில் துக்கம் வந்து தாக்கினால், அதைத் தாங்கிக் கொள்ள, தேகத்தைத் இடமாக வைத்துக் கொள்ள வேண்டும். தேகமானது எவ்வித அசைவுக்கும் உட்படாமல் ஒரே நிதானத்துடன் இருக்கும் பட்சத்தில், துக்கம் வந்து தாக்கினாலும் அது கூர் மழுங்கினதாகப் போய் விடுகிறது. அதன் கடுமை குறைந்து போகிறது. அதற்கு மாறாகத் தேகத்தை நாம் கண்டபடி உபயோகித்தோமானால் அற்ப சொற்பமாக ஏற்படுகிற துக்கத்தினால்கூட, அது மிகவும் பாதிக்கப்பட்டு விடுகிறது. ஆகையால் தேக நலனை முன்னிட்டு, துக்கத்தை ஒரு வரம்புக்குட்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இதில் பயங்கரமான விஷயம் என்னவென்றால், புத்தி கெட்ட சில ஸ்திரீகள் துக்கம் விசாரிப்பதாகச் சொல்லிக் கொண்டு வந்து, 'ஓ'வென்று அலறி அழுது, ஒருவாறு தணிந்து போயிருக்கிற துக்கத்தைக் கிளறி விடுவதுதான். இவர்கள் இப்படி வந்து கிளறிக் கொடுக்காதிருந்தால், அந்தத் துக்கம், தானாகவோ, வேறு காரணங்களினாலோ தணிந்து போகும். யாராவது ஒருவருடைய வீட்டில் நெருப்புப் பற்றி எரிந்து கொண்டிருந்தால், உடனே அண்டை அயலிலுள்ளவர்கள் சீக்கிரமாகவும் வேகமாகவும் வந்து அந்த நெருப்பை அணைக்க முயல்கிறார்கள். ஆனால் ஆத்மா பற்றி எரிகிறபோது அதை — அந்த எரிச்சலை — மேலும் வளர்த்து இன்னல் கொடுக்கிறார்கள். இதனால், காலக்கிரமத்தில் குறைந்து மறைந்து போக வேண்டிய அந்தத் துக்கம், வலுப்பெற்றுத் தீராத வேதனையைத் தந்து கொண்டிருப்பதாகி விடுகிறது. இந்த மாதிரியெல்லாம் உன் விஷயத்தில் ஏற்படாதபடி நீ ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்.

இப்பொழுது நமது துக்கத்துக்கு
காரணமாயுள்ள குழந்தை, பிறக்க
திருந்ததற்கு முன்பு, நாம் எப்ப
விருந்தோம் என்பதை நினைத்துப் பார்
குழந்தை பிறக்கவில்லையே என்பத
காக நம் அதிருஷ்டத்தை நொந்
கொண்டோமா? வருத்தப்பட்டோமா
இல்லையே. இப்பொழுது அந்த நிலை
யில்தான் நாம் இருக்கிறோம். அப்பொ
ழுது வருத்தப்படாமல் இருந்ததை
போல் இப்பொழுதும் இருப்போமாக!

அந்தக் குழந்தை நம்மோடு இருந்
இரண்டு வருஷ காலத்தில் நாம் எ
வளவு மகிழ்ச்சியுடன் இருந்தோம். அந்
இன்பகரமான காலத்தை நம் நினை
விருந்து எந்தக் காரணத்தை முன்னிட
டும் அப்புறப்படுத்தி விடலாகாது
நமக்குக் கிடைத்த சிறிய நன்மையை
பெரிய தீமையாகக் கருதிக் கொண்
விடக்கூடாது. அப்படியே, நாம் எதி
பார்த்த அளவுக்கு அதிருஷ்டம் ந
மிடம் வராவிட்டால், அதற்காக
சொற்ப அளவில் வந்த அதிருஷ்ட
துக்கு நாம் நன்றி செலுத்தாமலிருக்
லாமா? எப்பொழுதுமே நாம் தெய்வ
தின் திருவருளுக்குத் தலை வணங்
வேண்டும்.

துரதிருஷ்டத்தின் விளைவாக நா
துக்கத்தை அனுபவிக்க நேரிட்டால், அ
தத் துக்கத்திலிருந்து மீள ஒரே ஒ
வழிதானுண்டு. அதுதான், துக்
உணர்ச்சிக்கு நேர்மாறாக இருக்கி
சந்தோஷ உணர்ச்சியை நம் நினைவி
கொண்டு வந்து நிறுத்துவது. ஏற்கனவே
நாம் அனுபவித்த சந்தோஷங்களை
யெல்லாம் ஞாபகப்படுத்திக் கொண்
வாழ்க்கையின் பிரகாசமான பகு
களின் மீது சிந்தனையைச் செலுத் வி
வோமானால், துக்கத்தின் வேக
தானே தணிந்து போகும், வாசனை
பொருள்கள் நல்ல வாசனையை
கொடுப்பதோடு நில்லாமல், துர்நாற்ற
தையும் அருகே வரவொட்டாமல் தடு
பதுபோல.

ஒரு புத்தகம் இருக்கிறது; அதன் எ
லாப் பக்கங்களும் அழுக்குப்படாம
சுத்தமாக இருக்கின்றன. ஆனால் எங்கே
ஒரு மூலையில் சிறிது கறைபட்டிருக்கிறது
அதற்காக அந்தப் புத்தகத்தைக் குறை
கூறுகிறோமா? இல்லை. அதுபோல், நம
வாழ்க்கையில் ஏதோ ஒரு சிறு துக்க
ஏற்பட்டு விட்டால் அதற்காக நம
வாழ்க்கை முழுவதிலும் குறைப்பட்டு
கொண்டிருக்கலாமா?

ஆதலின், வீணாகத் துக்கப்படாமே
வாழ்க்கையின் சந்தோஷமான பகு
களை நினைவில் கொண்டு, மன அமை
பெறுவாயாக.

pūvēlai

# பூவேலை ஆடையை ஒரேயடியாக மாற்றிவிட்டதே!

# பிரின்ட்ஸ்

குறிப்பாக எங்கள் வாயில், பாப்ளின், சின்ட்ஸ் போன்ற துணிகளில் அச்சிடப்பட்டுள்ள உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகிய பூவேலைகளைக் கவனியுங்கள். கணக்கற்ற கண்கவர் வர்ணங்களில், நவீன மோஸ்தரிலோ, பண்டைய பாணியிலோ புடவைகள், ஸல்வார் கமீஸ் ஜோடிகள், ஆட்டநேர ஆடையணிகள் எதையுமே நீங்கள் உயரிய வகையில் அமைத்துக் கொள்ளலாம். அவற்றின் அமைப்பு வகைகளோ எவருடைய சுவைக்கும் ஈடுகொடுப்பவை.



ஸாயாஜி மில்ஸ் லி. 1, பரோடா
ஸாயாஜி மில்ஸ் லிட்., அஹமதாபாத்தின் ஒரு பிரிவு. சுபலக்ஷ்மி மில்ஸ் லிட்., கேம்பே.

PSY-6-TAM

# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

**ப**ஞ்சவடியில் துனி அக்கினி ஜ்வலித்துக் கொண்டிருந்தது. அசைந்து ஆடுகிற அதன் நாக்குகள், கண்ணீர் தேங்கி நின்ற தோதாபுரியின் பார்வையில் பாம்புகளாக தெளிந்தன.

"நீ வேறு; அதன் உஷ்ணம் வேறா? சிவமும் சக்தியும் இப்படித்தான்! பிரம்மமும் மாயையும் இப்படித்தான்!"

"உறங்குகிற பாம்பும் ஓடுகிற பாம்பும் வேறு வேறா? உறங்குகிற பாம்பேதான் ஓடவும் செய்கிறது. பிரம்மமேதான் மகா சக்தியாகவும் உலகைப் பரப்பிக் காட்டுகிறது."

"பாம்பின் விஷம் மற்றவர்களைப் பாதிக்கிறது. ஆனால் அந்த விஷத்தைத் தன்னிலேயே பெற்றுள்ள பாம்பை அது பாதிக்கவில்லையல்லவா? மகா சக்தியும் இப்படித்தான் தன் மாயையில் தானே மயங்காமல், உலகை மட்டும் மயக்குகிறாள்."

இவ்வாறெல்லாம் பிற்காலத்தில் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் எழிலும், எளிமையுமாக உபதேசிக்கப் போகிறார். இந்த உபதேசத்தைத்தான் தோதாபுரி தம் எதிரே மீண்டும் பாம்புகளாகச் சீறி விட்டு ஜொலிக்கும் பிழம்பைக் காணும் போது தமது பிரிய சிஷ்யனின் மதுரக் குரலில் கேட்டார். 'அவனுக்கு எப்படி இந்த உண்மையெல்லாம் தெரிந்திருக்கிறது?'

'பரம்பொருள் தவிர யாவரும் மகா சக்திக்கு அடங்கியவர்கள் தான். அத்வைதானுபவம் பெற்ற நானும் அவளுக்கு அடங்கியவன் தான். ஞானிகளையும் அந்த மகா சக்தி, தேவி பகவதி, தன் மாய வலையில் பிடித்து விடுகிறாள் என்ற தேவி மாகாத்மிய மகாமந்திரத்தின் பொருள் இன்றுதான் புரிகிறது.

'தேவி ஏன் அப்படிச் செய்கிறாள்? பிரம்ம நிலையை விடப் பணிவுதான் ஜீவனுக்கு அவசியம் என்பது அவள் திரு உள்ளமா? ஞானம் பெற்று விட்டோம் என ஞானி இறுமாந்து விடலாகாது என்றே அவனையும் ஆட்டி வைக்கிறாளா?'

"மகா மாயே, என் செருக்கையெல்லாம் ஒழித்தேன். என் வாழ்வும் சாவும் என் கையில் இல்லை, உன்னிடம்தான் இருக்கின்றன என்று நிச்சயமாக உணர்ந்தேன். இவ்வளவு நாள் இந்த உணர்வின்றி உன்னைப் பழித்ததற்காக மன்னித்து அருள்வாய்."

தமது நீண்ட தாடி நனைந்து மார்பில் ஈரத்தை ஏற்படுத்த, ஈரம் கசிந்த இதயத்துடன் அக்கினி முன் அமர்ந்தார் தோதாபுரி. வழக்கமாகத் தாமும் பரம்பொருளும் ஒன்றே என 'ஸோஹம்' பாவனை புரியும் அவர் இன்று அம்பிகையின் பக்தராக அவளது திவ்விய நாமங்களை ஜபிக்கலானார்.

அனந்தமான ஜீவராசிகள் இருக்க எங்கோ கோடியில் ஒருவருக்கு மட்டும் 'ஸோஹம்' பாவனையில் நாட்டம் எப்படி ஏற்படுகிறது? தோதாபுரிக்கு அந்த ஆர்வம் எப்படி ஏற்பட்டது? அதுவும் அம்பிகையின் அருள்தான். ஆத்ம சங்கீதத்தின் அதி தாரஸ்தாயியிலேயே சஞ்சரிக்கும் 'அவதூத கீதை' என்ற ஒப்பற்ற அத்வைத கிரந்தம் ஆரம்பிக்கும் போதே 'ஆண்டவன் அருளால்தான் அத்வைத வாசனை உண்டாகிறது' என்கிறதல்லவா?

**ப**ளபள என்று காலை புலர்ந்தது.

ராமகிருஷ்ணர் பஞ்சவடியை அடைந்தார்.

தோதாபுரியைப் பார்த்தார்.

அது தோதாபுரிதானா?

வறட்சியும், பிகுவுமான தோதாபுரியா இவ்வளவு இளகி அமர்ந்திருக்கிறார்? அவர் உதட்டில் நெளியும் ஈரப் புன்னகை! உதடு மட்டுமின்றி அவர்

௨7

முகம் முழுவதும், உடல் முழுவதுமே அல்லவா சிரிக்கிறது? குடல் வலியில் துடித்துக் கொண்டிருந்தவர் எப்படி இவ்வளவு ஆனந்த மயமானார்?

நீண்ட கனமான இமைகளைத் தூக்கி ராமகிருஷ்ணரைப் பார்த்தார் தோதாபுரி.

அன்போடு 'இங்கே உட்கார்' என்று கையால் தமக்கருகே உள்ள இடத்தைக் காட்டினார்.

ராமகிருஷ்ணர் அமர்ந்தார்.

''என் குடல் வலியைப் பற்றி நினைத்தாயா? அது நோவு அல்ல. என் நோவைத் தீர்த்த மருந்து. எல்லாம் தெரிந்து கொண்டேன், அப்பனே, தெரிந்து கொண்டேன். 'எல்லாம் பிரம்மமே' என்ற முறையில் எத்தனையோ காலமாக எல்லாவற்றையும் தெரிந்தவன்தான் நான். ஆனால் அதற்கும் மேலாக எல்லாவற்றையும் இப்போது தான் புரிந்து கொண்டேன்.''

முன் இரவில் நடந்த அற்புதங்களையெல்லாம் சுவைத்துச் சுவைத்துக் கூறினார் தோதாபுரி. அவற்றை ருசித்து ருசித்துக் கேட்டார் ராமகிருஷ்ணர். அவரது உடல் குலுங்கிற்று. உள்ளம் குலுங்கிற்று.

''என் அம்மாவை ஒப்புக் கொள்ள மாட்டேன் என்றீர்களே! இப்போது தெரிந்து கொண்டீர்களா அவளை?''— என்றார் உவகையுடன்.

''தெரிந்து கொண்டேன். ஆனால் நானாக ஏதும் பிரயாசைப்பட்டுத் தெரிந்து கொள்ளவில்லை. அவளாகத் தெரிவித்துக் கொண்டாள். அவளுக்கு எதற்காக என்னிடம் இத்தனை கருணை?' என்று வியந்தார் ஸ்வாமி தோதாபுரி.

கருணைக்கு யார் தான் காரணம் கண்டு பிடிக்க இயலும்?

கல்பனா—

அன்றே தடுத்தென்னை ஆண்டு
கொண்டாய் கொண்டதல்ல என்கை
நன்றே உனக்கினி நானென் செயினும்
நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்றுகை
நின் திருவுளமே
ஒன்றே பல உருவே அருவே என்
உமையவளே!

எனப் பாடினார் அபிராமி பட்டர். தோதாபுரி நடுக் கடலுள் விழச்செல்லா விடினும் கங்கை நடுவில் விழச் சென்றார். அவரைத் தேவி கரையேற்றினள்.

நாவுக்கரசர் பெருமானுக்குச் சூலை நோயைத் தந்து தன் பாற்படுத்திக் கொண்டான் அத்தன். தோதாபுரிக்குக் குடல்நோயைத் தந்து தன் வசமாக்கிக் கொண்டாள் அன்னை.

"பிரம்ம நிலையை எய்தியவன்கூட அந் நிலையிலிருந்து கீழே வந்தபின், காண்ப தெல்லாம் பிரம்மமே, அதாவது தானே என்று உணர்வது கடினமாகும். பௌதிக மாகத் தன்னிடமிருந்து பிரிந்து காணும் பொருள்களைப் பிறவாகக் காண்பதில் தான் புத்தி செல்லும். தோதாபுரி தமது துனி அக்கினியில் புகைபற்ற வந்தவனை அடிக்கச் செல்ல வில்லையா? எனவே, எல்லாவற்றையும் தானகக் காணும் அத்வைதம் நடைமுறைக்கு வராது. பிற ஜீவர்களைத் தாமாக நினைக்க வொண்ணு விட்டாலும் தமது சோதர ராகக் கருதுவது ஓரளவு பக்குவமான மனத்தினருக்குச் சாத்தியமே. எல்லோ ரும் சோதரர் என்ற இந்த உணர்வு எல்லோரையும் பெற்றெடுத்த அன்னை யின் நினைவினால்தான் கைகூடும். இதுவே தேவி உபாசனையின் சிறப்பு.

உலக க்ஷேமத்துக்கும் இதுவே அத் வைத பாவனையைவிட உகந்ததாகும். அத்வைத பாவனையில் நல்லது - தீயது, பாபம் - புண்ணியம் எதுவுமே கிடை யாது. யாவற்றையும் பிரம்மமாகக் காண்பவன் தீயதை விலக்கவோ, பாபத்தை அழிக்கவோ எப்படி முயல் வான்? உபதேசம் புரிந்து உலகைத் திருத்த வேண்டுமானல், உலகினரைப் பிரம்மமாகப் பாராமல் ஜீவர்களாகப் பார்த்து — ஆனல் அவர்களை நல்வழிப் படுத்த வேண்டும் என்பதற்காக அன் புச் சகோதரர்களாகப் பார்த்து — பழக வேண்டும். இதனால்தான் போலும் அத்வைத ஸ்தாபகரான ஆதி சங்கரகுரு வும் தேவியை அநவரதமும் பூஜித்து வந்தார். பரம்பொருளாக இருக்கும் ஒப்பற்ற நிலையை உலகுக்காகத் தியாகம் செய்ததால்தான் அவர் உபாசித்தார்; உபதேசித்தார்.

இந்த அடிப்படையில் இன்னும் சிந் தித்துப் பார்த்தால் உருப் படைத்த பிரம்மம் எனப்படும் தேவி செய்துள்ள தியாகமும் புரியும். 'மாயை' என்ற அவப் பெயரை ஏற்று, அவள் மக்களை நல்வழிப்படுத்துவதற்காகவே தனது குணம் குறி கடந்த பிரம்ம நிலையை விட்டு உருப் படைத்த திரு மூர்த்தமாக விளங்குகிறாள். வெறும் பிரம்மமானது தியாகப் பிரம்மமாக, கருணைப் பிரம்ம மாக ஆவதே தேவி — அல்லது எல்லாத் தெய்வ வடிவங்களும்.

அந்தத் தியாகத்தையும் கருணையை யும் புரிந்து கொள்ளாமல், தோதாபுரி மட்டுமல்ல, நாமும்கூட 'தெய்வங்கள் எல்லாம் சின்னம்; வெறும் அடையாளம்; பாமரர்களின் நினைவை ஒருமுகப்படுத்து வதற்காக ஏற்படுத்தியுள்ள அமைப்பு' என்றெல்லாம் பேசி வருகிறோம்!

அம்பிகையா நமது கற்பனை? நாம் அல்லவா அவளது கற்பனை? அம்பி கைக்கு — அல்லது எந்தத் தெய்வத் துக்குமே — நாமா உருவம் அளிக்கி றோம்? அவளல்லவா நமக்கு உருவம் அளிக்கிறாள்? அப்படி நாம் உருவம் பெற்றபின், மெய்யாகவே உருப்பட வேண்டும் என்பதற்காக அவள் தானும் ஓர் உருவைத் தாங்கி நிற்கிறாள்.

ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் இந்த உண் மையை நமக்கு உணர்த்தினால் போதும்!

தக்ஷிணேசுவர ஆலயத்துச் சங்கீத மண்டபத்திலிருந்து காலை வேளைக்குரிய கான அலைகள் புறப்பட்டன.

கங்கை அலையின் தண்மையினால் கனத்த காற்றில் அந்தக் கானமும் செறிந்து தோதாபுரியையும், ராமகிருஷ் ணரையும் வந்தடைந்தது.

இருவரும் ஆலயத்தை நோக்கி நடந்தார்கள்.

பஞ்சவடி விருக்ஷத்து இலைகள் காற் றில் நழுவி அவர்களுக்குக் குறுக்காகப் படபடத்து வந்தன. அந்த இலைக ளோடு இலைகளாகப் புள்ளினங்களும், அவர்களுக்கு முன்பாகச் 'சட பட' வென்று சிறகடித்துப் பறந்து வந்தன. ஜகச் சித்திரத்தின் அழகுகளையும், இந்த அழகுகளைக் கற்பனை செய்த தேவியின் உள்ளத்து அழகையும் எண்ணி வியந் தார் தோதாபுரி. அந்த உள்ளத்தோடு தமது உள்ளத்தை ஒன்ற வைத்த தமது உத்தம சிஷ்யரை வியந்தார்.

"அப்பனே, உன்னிடம் எனக்கு எல்லையற்ற அன்பு பெருகுகிறது. இத் தனை நாட்களாக உன்னிடம் இருந்த ஆசை இப்போதுதான் அன்பாகி யிருக் கிறது. அப்போதெல்லாம் என்னால் உன்னை விட்டுப் புறப்பட முடியவில்லை.

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த
# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.




எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.



மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

தேவி இந்த ஆசையால் என்னை இங்கே பிணைத்து வைத்திருந்தாள். இப்போதேனும் அவள் நான் இங்கிருந்து புறப்பட அனுமதிப்பாளா?'' என்று தோதாபுரி கூறிக் கொண்டிருக்கும் போதே தேவியின் திருமந்திரமும் வந்தது.

யாரும் கடத்தற்கரிய ஜாலங்களைப் புரிந்த அகிலாண்ட நாயகி ஏதும் அறியாத சிலை போல அங்கு நின்று கொண்டிருந்தாள்.

அன்பு வழியில் தமது குருநாதரைத் திருப்பிய அம்பிகையை நெஞ்சாரப் போற்றிப் பணிந்தார் ராமகிருஷ்ணர்.

தோதாபுரியும் முதன் முதலாகப் பணிவு மனப்பான்மையுடன் அவள் முன்பு தண்டனிட்டார்.

இருவரும் நீண்ட நேரம் எழுந்திருக்கவே யில்லை.

''தோதாபுரி இங்கிருந்து போகலாம்'' என்று திவ்விய மாதா தனது திங்குரலில் அருளியதைக் கேட்ட பின்தான் தலைதூக்கினர்.

கற்பித்ததைவிட அதிகமாகக் கற்றுக் கொண்ட தோதாபுரி பவதாரிணியையும், அவள் சந்நிதியையும், ஆலயத்தையும், தக்ஷிணேசுவரத்தையும், தக்ஷிணேசுவரத்தைத் திருத்தலமாக்கிய ராமகிருஷ்ணரையும் பிரிந்து புறப்பட்டுச் சென்றார்.

சென்றவர் சென்றவர்தான்!

அத்வைத சந்நியாசிக்குப் பக்தியின் பெருமையைக் கூறிய ராமகிருஷ்ணர் இப்போது அத்வைத சாதனையில் அதிதீவிரமாக இறங்கி விட்டார்.

இச்சமயத்தில் மதுராநாதரின் மனைவி ஜகதம்பாதாஸிக்கு அதிசார நோய் கண்டு அவள் படுத்த படுக்கையானாள்.

மதுராநாதருக்கு மனைவியிடம் உயிர். 'பிதா' ராமகிருஷ்ணரிடம் வந்து கதறித் தீர்த்து விட்டார் அவர்.

''என் மனைவி என்னை விட்டுப் போய் விடப் போகிறாள். அதோடு மட்டுமில்லை. அதில் மனமுடைந்து எனக்குப் புத்தி பேதலித்து விடப் போகிறது. உங்களுக்குப் பணிவிடை செய்யும் பாக்கியத்தையும் இழக்கப் போகிறேன்'' என்று புலம்பினார்.

ஆண்டவனின் ஆக்ஞையாகிய கர்ம வினைப்படி நடக்கும் செயல்களை ஞானியர் மாற்ற மாட்டார்கள். வினைப் பயனை ஏற்கும் மனத் திட்பத்தைத்தான் அவர்கள் பொதுவாக அருளுவார்கள். எனினும் அவர்களுக்குக் கருணை பீறிக் கொண்டு வரும் சமயங்களில் பிறரது கர்மத்தைத் தாங்கள் வாங்கிக்கொண்டு, அவர்களைத் துயரத்திலிருந்து விடுவிப்பதும் உண்டு.

வீட்டுக்காரர்: இன்றைக்குப் பால் கொண்டு வர ஏன் அப்பா இத்தனை நேரம்?

பால்காரன்: வழியிலே சோதனை போடறவங்க பிடிச்சுக்கிட்டாங்க!

வீட்டுக்காரர்: (ஆவலுடன்) அப்புறம் என்ன ஆயிற்று? ஏதாவது கண்டுபிடிச்சாங்களா?



பால்காரன்: அந்த அதிசயத்தை என்னென்னு சொல்லுவேனுங்க? நான் கொடுக்கிற பாலிலே, பாலும் இருக்குன்னு கண்டுபிடிச்சு என்னையே அசர வச்சுட்டாங்க.

மதுராநாதர் புலம்பி அழுத போது ராமகிருஷ்ணரின் கருணை பெருகியது. அவ்வளவுதான். அந்தக் கணமே ஜகதம்பாதாஸியின் வினையைத் தாம் வாங்கிக் கொண்டு விட்டார் ராமகிருஷ்ணர்.

''வருந்தாதீர்கள் மதுர்பாபு; உங்கள் பாரியாள் விரைவிலேயே குணமாவாள்'' என்று மட்டும் மதுராநாதரிடம் ஆறுதலாகச் சொன்னார்.

அப்போதிலிருந்தே விரைவில் ஜகதம்பாதாஸி உடல் நலம் பெறலானாள்.

ராமகிருஷ்ணர் அதிசார நோயில் விழுந்தார்.

இச்சமயத்தில் மிகக் கடுமையான முறையில் அத்வைதத்துக்காக அவர் சாதனை புரிந்து வந்தபடியால் நோயின் கொடுமையும் மிக அதிகமாயிற்று. ஆனால் சாதனை காரணமாகவே அந்தக் கொடுமையையும் உணராதிருந்தார் ராமகிருஷ்ணர். 'ஆனந்தம் பிரம்ம' என்று மறை மொழிகிற நிலையில் இருந்தவர் எப்படி உடலின் துன்பத்தை உணர முடியும்?

'காக்கைக் குருவி எங்கள் ஜாதி... நோக்கும் திசை எல்லாம் நாமன்றி வேறு இல்லை' என்று ராமகிருஷ்ணர் இருந்ததை எல்லா ஜீவராசிகளும் புரிந்து கொண்டு விட்டன. அன்பை யார்தான் புரிந்து கொள்ள முடியாது? காக்கையும் குருவியும் அவர் மீது அலகைச் சாணை பிடித்துக் கொண்டன. பாம்பும் தேளும் அவர் மீது பயமின்றிச் சார்ந்து ஊர்ந்தன. ஆனால் அவரது உள்ளமோ இது ஒன்றையும் அறியாது உள்ளே, அதற்கும் உள்ளே, அப்பாலும் உள்ளே

இதய குகையில் பரமபுருஷனில் லயித்துக் கிடந்தது.

ஆனாலும் அவரது உடல் எப்படி அதிசார' நோவுக்கு ஈடு கொடுக்க முடியும்? அப்படியானால் ராமகிருஷ்ணர் உடலை உகுக்க வேண்டியதுதானா?

அதற்கு அம்பிகை இடமளிக்கவில்லை. ஊர் பேர் தெரியாத ஒரு யோகேசுவரர் தக்ஷிணேசுவரத்தில் வந்து குதித்தார். ராமகிருஷ்ணரின் சரீரத்தால் உலகுக்கு நலன்கள் விளைய வேண்டும் என்பதை அவர் எவ்வாறோ அறிந்து கொண்டார். அவசமாகவும், ஆவேசமாகவும் கிடந்த ராமகிருஷ்ணரது உடலைப் பார்த்துப் பார்த்துப் பேணினார் அந்தப் புண்ணிய புருஷர். உணவு, உறக்கம், உடை, உடலின் உக்கிரமான உபாதி என்ற நினைவேதுமின்றிச் சமாதி நிலையிலேயே ஆழ்ந்திருந்த ராமகிருஷ்ணரின் காதுகளில் இரைந்து சத்தமிட்டுச் சமாதியைக் கலைப்பார்; அவரது உடம்பைச் சில சமயங்களில் தடிகொண்டு கூட அடிப்பார். அவ்வாறு எழுப்பிச் சாப்பாட்டை அவர் வாயில் திணிப்பார்.

ஆறு மாதங்கள் இப்படிச் சென்றன.

ஆறு மாதங்கள்! நம்மால் ஆறு விநாடியேனும் அந்த நிலையில் இருக்க முடியுமா?

ஜீவகோடிகளான நம்மால் என்ன, ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட மக்களுக்கு உபதேசிப்பதற்காக ஈசுவரனின் ஆணையில் பிறக்கும் ஈசுவரகோடிகளால் கூட இருபத்தியொரு நாட்களுக்கு மேல் பிரம்மானுபவத்தில் இருக்க முடியாது. அதன்பின் அவர்களது உயிர் உடலிலிருந்து பிரிந்து விடும். எல்லாக் காலத்துக்கும், எல்லா மக்களுக்கும் உபதேசிப்பதற்காக நிகழும் அவதாரங்களால்தான் எத்தனை காலம் வேண்டுமானாலும் பிரம்ம நிலையில் நிலைத்திருக்க முடியும். ஆனால் இதில் விந்தை, அவர்கள் அப்படித் நிலைத்திருக்க மாட்டார்கள்! ஏனெனில், அவர்கள் சமாதியில் இருந்தால் அவதாரப் பணி என்னாவது?

ராமகிருஷ்ணர் ஆறு மாத காலம் அத்வைதத்தை அநுபவித்தாயிற்று. அம்பிகை அவருன் தோன்றினாள். ''பாவ முகத்தில் இரு. பாவ முகத்தில் இருப்பாய், பாவ முகத்தில் இருப்பாயாக'' என்று ஆக்ஞாபித்தாள்.

பாவ முகம் என்பது அத்வைத அநுபவத்துக்கு அடுத்த நிலை. சாதகன் பரம்பொருளுடன் ஒன்றுமல் அதன் அங்கமாகவோ அல்லது குழந்தையாகவோ தன்னைப் பாவிக்கும் நிலை அது. ஆதார காரணத்தில் உள்ளம் பற்றிக் கொண்டிருக்கும் போதே, அதில் ஒரேயடியாக லயித்து விடாமல், அதோடு தன்னைத் தொடர்புறுத்திக் கொள்கிற நிலை இது. இந்த நிலையில் இதர மக்களும் பரம்பொருளின் அங்கங்களாக அல்லது குழந்தைகளாகத் தெரிவார்கள். அப்போது தான் அவர்களை நல்வழிப் படுத்துவதற்காக முயலும் பாங்கு சாதகனுக்கு ஏற்படும்.

ராமகிருஷ்ணர் தேவியின் ஆக்ஞையைப் பெற்ற உடனேயே அத்வைத பாவனையிலிருந்து விலகி பாவமுகத்தில் ஆழ்ந்தார். அவரது உடற் பிணியும் மறைந்தது. இதன் பின் அவரது வாழ்நாளில் பெரும் பகுதி பாவமுகத்திலே தான் கழிந்தது.

''கண்ணாமூச்சியாடும் குழந்தைகள் எங்கெங்கு சுற்றித் திரிந்து ஓடினாலும் தாய்ச்சியிலேயே அவைகளின் நினைவு இருக்கும். இப்படியே எந்தக் காரியத்தில் ஈடுபட்டிருந்தாலும் பரம்பொருளிலேயே மனத்தை வைத்திருங்கள்'' எனப் பிற்காலத்தில் பரமஹம்ஸர் உபதேசித்தார். விளையாட்டுக்கு ஒரு தாய்ச்சி என்றால் விவகார உலகுக்குப் பிரம்மம் ஒரு தாய்ச்சி. தாயாகிய அம்பிகையே தான் அது. நந்தமிழில் 'தாய்ச்சி' என்று என்ன அழகாகப் பெயர் சூட்டியிருக்கிறார்கள், பார்த்தீர்களா?

எல்லாம் ஆகிற அத்வைத பாவத்தின் ஒரு சாயலில் குறிப்பிட்ட ஒரு பொருளைத் தானாக உணர்கிற ஒரு நிலையையும் ராமகிருஷ்ணர் எய்தியதுண்டு.

காளி கோயில் தோட்டத்தில் ஒரு பகுதியில் அருகம் புற்கள் செழிப்பாக வளர்ந்து கண்களுக்குத் தண்மை கூட்டின. ஒரு நாள் அந்தப் பகுதியைப் பார்த்துக் கொண்டிருந்த ராமகிருஷ்ணர் திடீரென்று தாங்கவொண்ணாத வேதனையுடன் தமது மார்பைப் பிசைந்து கொண்டார். காரணம்.... அந்தப் புல்வெளியை மிதித்துக் கொண்டு யாரோ ஒரு வழிப் போக்கன் சென்றதுதான். புல்வெளியுடன் ராமகிருஷ்ணர் சர்வ சாம்யமாகி விட்டிருக்கிறார்!

இன்னொரு நாள்.

கங்கையையும், அதில் சென்ற படகுகளையும் பார்த்தபடி நின்று கொண்டிருந்த ராமகிருஷ்ணர் திடீரென்று, ''ஹா!'' என அலறினார். அந்தச் சத்தத்தைக் கேட்டு விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தார் ஹிருதயர். ஆகா, ராமகிருஷ்ணரின் மென்மையான முதுகு வீங்கிச் சிவந்திருந்தது.

''என்ன மாமா, எந்தப் பயல் உங்களை இப்படி அறைந்தது, சொல்லுங்கள் அவனை...அவனை...'' என்றார் ஹிருதயர்.

ராமகிருஷ்ணர் கங்கைக் கரையைக் காட்டினார்.

அங்கே இரண்டு படகோட்டிகள் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

அவர்களில் ஒருவன் மற்றவனுக்குக் கொடுத்த அறையைத்தான் இவர் வாங்கியிருக்கிறார்!

ஹிந்து சமயத்தில் இனி ராமகிருஷ்ணர் எய்த வேண்டிய அநுபவம் எதுவும் இல்லை. ஹிந்து சமயம் எப்படித் தனது தந்திர மார்க்கம், பக்தி பாவனை மார்க்கம், வேதாந்தம் இவை யாவற்றாலும் மெய்ப் பொருள் உணர்வாகிய மோக்ஷத்தை அளிக்கிறது என்பதை அவர் நிரூபித்தாகி விட்டது.

இப்போது அவரது உள்ளம் பிறமதங்களையும் பயின்று பார்த்து, அவை கடவுளிடம் சேர்ப்பனவா என்று சோதித்துப் பார்க்க ஆவல் கொண்டது.

ஸ்ரீ ராமகிருஷ்ணரை மற்ற எல்லா அவதாரங்களையும் விட உயரிய அவதாரமாக, 'அவதார வரிஷ்டர்' என்பதாக அவரது சிஷ்யர்கள் கருதுவதற்குக் காரணம் இதுதான். ஹிந்து சமயத்துக்காக மட்டுமின்றி, எல்லா மதங்களுக்காகவும், எல்லா மதங்களுக்கும் பொதுவான மத உணர்வு என்ற ஒன்றுக்காகவும் நிகழ்ந்த அவதாரம் இது என்றே என அவர்கள் போற்றுவதுண்டு.

ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு இஸ்லாமிய மதத்தை அப்பியசித்துப் பார்க்க வேணும் என்ற ஆவல் எழுந்தது. அவர் ஆவலை எழுப்பி, அந்த ஆவலைப் பூர்த்தி செய்ய ஆட்களையும் அனுப்புபவளாயிற்றே அம்பிகை!

தக்ஷிணேசுவரத்துக்கு இஸ்லாமிய ஸூஃபி வகுப்பைச் சேர்ந்த ஒருவர் வந்து சேர்ந்தார். பிறப்பால் ஹிந்துவான் அவர். கோவிந்த ராய் என்பது அவர் பெயர். பிற்பாடு இஸ்லாமிய மதத்தைத் தழுவி ஸூஃபிக்களின் மரபுப்படி சாதனை புரிந்தார் அவர். ஸூஃபிப் பிரிவினர் அத்வைதத்துக்கு நெருங்கிய கொள்கை உடையவர்கள்.

கோவிந்த ஸூஃபியிடம் சிஷ்யரானார் ராமகிருஷ்ணர்.

வெளித் தோற்றத்தில்கூட அந்தந்த சாதனை மார்க்கத்துக்குரிய விதிமுறைகளை ராமகிருஷ்ணர் அனுஷ்டிப்பவரல்லவா? இப்போது அதற்கேற்ப முஸல்மான்களைப் போலவே உடை அணிந்தார். அல்லாவின் திருநாமத்தைப் பக்தியுடன் ஜபித்தார். ஸூஃபி திருக் குர்ஆனை ஓத, அதனைக் கேட்டு மகிழ்ந்தார். பவதாரிணிக்கு நமஸ்காரம் செய்த போது ஏற்பட்ட அதே ஆனந்தத்துடன் இப்போது நமாஸ் செய்தார்.

பளிங்கின் பின்னணியில் எந்த வஸ்துவை வைத்தாலும் அதன் வண்ணத்தைப் பளிங்கு ஏற்க வேண்டியது தானே? பளிங்கிலும் தெள்ளிய ராமகிருஷ்ணரது உள்ளம் மூன்றே நாட்களில் பூரணமாக இஸ்லாமிய வெள்ளத்தில் மூழ்கி விட்டது.

எல்லையற்ற அருள் பூத்த திருமுகமும், நீண்ட வெண் தாடியுமாக ஒளி உருவில் ஒரு மகான் ராமகிருஷ்ணருக்குப் பிரஸன்னமாகி, ஆசி கூறினார். பிறகு உருவமும் பெயருமற்ற உன்னத நிலையில் கலந்து விட்டார். யார் அவர்? நபிகள் நாயகமா?

தமது இஸ்லாமிய சாதனை நிறைவு பெற்று விட்டது. அம்மதமும் மெய்ப் பொருளில் சாதகரைச் சேர்ப்பதே என்பதை உணர்ந்து கொண்டார் ராமகிருஷ்ணர். (தொடரும்)

(தொடரும்)

விஞ்ஞான விநோதங்கள்

## மீன்களின் மொழி

இனி மீன் பிடிப்பதற்கு டேப் ரிக்கார்டரும் ஒலிபெருக்கியும்கூட உபயோகப்படும் என்று தெரிகிறது. ஹாம்பர்க்கிலுள்ள மீன் வள ஆராய்ச்சிக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் பிரேடேக் இது சம்பந்தமான ஆராய்ச்சியில் வெற்றி கண்டுள்ளார்.

இவர் தண்ணீரில் மூழ்கிச் சென்று மீன்கள் வெளியிடும் சப்தங்களை மைக்ரா போன் மூலம் ரிக்கார்டு செய்தார். மீன்களைவிட நண்டுகள் தான் அதிகம் சத்தம் போடுகின்றன. இச்சப்தம் கரடுமுரடாகவும், கர்ண கடூரமாகவும் இருக்கின்றன என்றும், மீன்கள் வெளியிடும் சத்தம் ஒரே சீரியில் மென்மையுடன் இருப்பதாகவும் இவர் கூறினார். மீன்களிலிருந்து வெளிப்படும் சத்தங்கள் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்றும், சில எச்சரிக்கும் சப்தங்களாகவும், சில காதலிக்கும்போது எழும் சத்தங்களாகவும் இருக்கலாம் என்று பிரேடேக் கூறுகிறார்.

மீன்களின் இம்மொழியை டேப் ரிக்கார்டு செய்து அவைகளைக் கொண்டே அம்மீன்களை வசப்படுத்த முடியுமா என்பது பரீட்சை செய்து பார்க்கப்பட்டிருக்கிறது. மீன்கள் தங்கியுள்ள இடங்களிலிருந்து அவைகளை ஒலிகள் மூலம் பயப்படச் செய்து வலைகளில் வந்து விழச் செய்ய முடியும் என்று இவர் கூறுகிறார். காதல் சத்தங்களைக் கையாண்டால் நிச்சய வெற்றி என்றும் அவர் கருதுகிறார்!



ல்லூரி, நாளடைவில் பல மாறுதல்களுக்கு ட்பட்டு, கல்லூரி அந்தஸ்தையும் பெற்று ந்த நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில், சதாப் பேட்டையில் இப்போது இருக்கும் ட்டடங்களுக்கு வந்து சேர்ந்ததாம். இந்தக் ட்டடங்களை அதற்கு முன் விவசாயக் கல் ரிக்காக உபயோகப்படுத்தி வந்தார்கள்.

பயிற்சி பெற்றுப் பரீட்சையில் தேறிய ஆசி யர்களுக்கு அந்தக் காலத்திலெல்லாம்எல்.டி. துாவது 'லைசென்ஷியேட் இன் டீச்சிங்' — ன்ற பட்டம் அளித்து வந்திருக்கிறார்கள். ாணவர்களுக்குப் போதிக்க லைசென்ஸ் பெற் வர்கள் அந்தப் பட்டதாரிகள்.

'கார் ஓட்டுபவர்களுக்கும் லைசென்ஸ், கால மெல்லாம் அழியாது கைகொடுத்து உதவும் ல்விப் பணி புரியவும் ஒரு லைசென்ஸ். இது ன்ன பொருந்தாத வார்த்தை!' என்று னைத்தார்களோ என்னவோ, சர்வகலாசாலை நுப்பினர்கள். 1947ம் வருடத்துக்குப் றகு, கருத்தை உறுத்தும் 'லைசென்ஸ்' ன்ற வார்த்தையை அகற்றி விட்டு, பி. ஏ. , எஸ்ஸி. என்ற பட்ட ரகங்களுடன் இணை ம்படியாக ஆசிரியர் பயிற்சிப் பட்டத்தை .டி. அதாவது பாச்சலர் ஆப் டீச்சிங் என்று ாற்றி யிருக்கிறார்கள்.

இப்போது சைதாப்பேட்டை ஆசிரியப் யிற்சிக் கல்லூரியின் முதல்வராகப் பணி ாற்றும் திரு எம். ஆர். பெருமாள் முதலி ார், கல்வித் துறையில் ஆழ்ந்த அனுபவம் பற்றவர். கடந்த எட்டு ஆண்டுகளாக ந்தக் கல்லூரியின் முதல்வராக இருக்கும் வர், அதற்கு முன் உயர்நிலைப் பள்ளியின் லைமை உபாத்தியாயராகப் பல காலம் சவை செய்து மாணவர்களின் அறிவு வளர்ச்சி யைப் பல கோணங்களிலிருந்தும் ஆராய்ச்சி செய்தவர். ஒரு நல்ல எழுத்தாளர். சிறந்த லக்கிய ரசிகர். இன்முகத்தோடு கூடிய ம்பாஷணையில் ஈடுபடுவதிலும் வல்லவர்.

நூறு ஆண்டுகளைக் கடந்து விட்டிருக்கும் இந்தப் பழம் பெரும் கல்லூரியில் நூற்றைம் து மாணவர்களுக்கு ஒரு வருடப் பயிற்சிப் பட்டப் படிப்பு பெற வசதி இருக்கிறது. இது ன்றி, ஏற்கனவே ஆசிரியர்களாகப் பணி ரிந்து கொண்டே, கல்லூரி வகுப்புகளுக்குப் போகாமல் பரீட்சைகள் எழுதிப் பட்டம் பெறும் ஆசிரியர்களுக்கு அதிகார பூர்வமான பயிற்சி யளிக்கக் குறுகியகால பயிற்சிப் பட்டப் படிப்பு வசதியும் இருக்கிறது. பண்டிதர்களும் இங்கு பாடம் போதிப்பதற்கான பயிற்சியைப் பெறுகிறார்கள்.

இந்தக் கல்லூரியின் ஆதரவிலேயே ஒரு 'மாடல்' உயர்நிலைப் பள்ளியையும் நடத்துகிறார்கள். எல்லா வசதிகளையும் கொண்ட பள்ளி அது. அதற்கென்று பிரத்தியேகமான உபாத்தியாயர்கள் இருந்தாலும், கல்லூரியில் பயிற்சிபெறும் மாணவர்களும் அவ்வப்போது அந்தப் பள்ளி வகுப்புகளுக்குப் போய்ப் பாடம் நடத்தித் தங்கள் பயிற்சிக்கு நடைமுறை மெருகு ஏற்றிக் கொள்ள வேண்டுமாம். இந்தப் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு, அந்த 'மாடல்' பள்ளி மாணவர்களிடம் கிடைக்கும் அனுபவம் விநோதமாக இருக்கும் என்று குறிப்பிட்டார் ஒரு மாணவர்.

அந்த 'மாடல்' பள்ளி மாணவர்கள் தொடர்ந்தாற் போல் அந்தப் பள்ளியில் ஆறு ஏழு வருடங்களாகப் படித்து முன்னேறி வருபவர்கள். ஆனால் கல்லூரியில் பயிற்சி பெற வரும் ஆசிரிய மாணவர்களோ வருடாவருடம் புதிதாக வருபவர்கள். ஆகையால் போதனு முறை விஷயங்களில் இந்தப் பட்டம் வாங்கத் துடிக்கும் மாணவர்களைவிட, பள்ளியில் படிக்கும் பாலகர்கள் பன்மடங்கு அனுபவம் பெற்றவர்கள். யாராவது ஒரு பயிற்சி மாணவர் அந்த 'மாடல்' பள்ளி வகுப்புகளில் மாதிரிப் பாடம் நடத்தும்போது ஏதாவது தப்பிதமாகப் போதித்தாலோ, மறந்து போனாலோ, 'என்ன சார்! உங்கள் சிலபஸை மறந்துவிட்டீர்களா? இந்த முறையிலல்லவா பாடம் நடத்த வேண்டும்?' என்று பையன்கள் சுட்டிக் காட்டுவார்களாம் அந்தத் தாற்காலிக உபாத்தியாயருக்கு! அவர்களுக்கு அத்தனை அனுபவம்!

'பையன்களை அடித்தோ, அவர்கள் மனத்தைப் புண்படுத்தியோ பாடம் சொல்லிக் கொடுக்கக் கூடாது' என்று மனோதத்துவ அடிப்படையில் நடக்கும் 'மாதிரி'ப் பள்ளியானதால், அவர்கள் எப்போதுமே குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்களாக விளங்குகிறார்கள் என்று சற்று மனத்தாங்கலுடனேயே குறிப்பிட்டார் ஒரு பயிற்சியாளர்.

ஒரு வகுப்புக்குத் திடீரென்று இன்ஸ்பெக்டர் விஜயம் செய்து விட்டாராம். வகுப்பு உபாத்தியாயருக்குத் தம் திறமையையும், மாணவர் திறமையையும் வந்திருப்பவர்உணர வேண்டும் என்ற ஆர்வம். வகுப்பு சின்ன வகுப்பு. முன் பெஞ்சில் இருந்த பையனைப் பார்த்து, 'ராமு, இந்த உலகத்தைப் படைத்தது யார்?' என்று கேட்டாராம். டக் என்று வரும் 'கடவுள்' என்ற பதிலைக் கேட்கவும் காதுகளைத் தீட்டிக் கொண்டார்.

ஆனால் பையன் ஆஜானுபாகுவாக, கால் சிராய், தொப்பி சகிதம் நின்று கொண்டிருக்கும் இன்ஸ்பெக்டரைக் கண்டு நடுங்கிப் போய்



விட்டிருந்தான். பதிலே மறந்து தவித்தான். உபாத்தியாயர் பரிதாபகரமாக இன்ஸ்பெக்டர் முகத்தைப் பார்த்தார். பையனுக்குச் சட்டென்று யோசனை உதித்தது. 'இத்தனை பெரிய மனிதராகக் காட்சியளிக்கும் இன்ஸ்பெக்டர்தான் இந்த உலகத்தைப் படைத்திருக்க வேண்டும்' என்று முடிவுகட்டி விட்டான். 'இந்த உலகத்தைப் படைத்தது இன்ஸ்பெக்டர் சார்' என்ற பதிலையும் சொல்லி விட்டான்.

உபாத்தியாயர் முகம் ஜிவுஜிவுத்தது. "டேய்! யோசனை பண்ணிப் பதில் சொல்லு! இந்த உலகத்தை யார் படைத்தார்கள்?" என்று சீறினர்.

பையன் நிஜமாகவே யோசனை பண்ண ஆரம்பித்தான். இன்ஸ்பெக்டர் நிற்கும் போதே உபாத்தியாயர் இப்படித் தைரியமாகச் சீறி விழுந்தால் அவர்தான் இன்ஸ்பெக்டரை விடப் பெரியவராக இருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டான். "சார்! நீங்கள்தான் சார் இந்த உலகத்தைப் படைத்தீர்கள்" என்றான்.

உபாத்தியாயர் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்தன. மானம் கப்பலேறுமுன் எப்படியாவது சரியான பதிலை வரவழைத்து இன்ஸ்பெக்டரைப் பிரீதி பண்ண விரும்பினர்.

"டேய்! விழிக்காதே! உண்மையைச் சொல்லிவிடு!" என்று ஹிரண்யன் போல் கர்ஜித்தார்.

பையன் காலோடு தலை நடுங்கினன். தான்தான் ஏதோ மகத்தான தவறு செய்து விட்டோமோ என்ற எண்ணம் அவனைப் பிடித்துக் கொண்டது. "சார்! சார்! நான்தான் சார், தெரியாமல் உலகத்தைப் படைத்து விட்டேன்! இனிமேல் ஒரு நாளும் அதைத் திருப்பிச் செய்ய மாட்டேன் சார்! இதுதான் சார் உண்மை!" என்று கதறி விட்டானும்.

உபாத்தியாயருக்குக் கோபம் வந்ததுதான் மிச்சமாம்!

கதை கேட்கச் சுவாரசியமாக இருந்தது.

"எங்களைப் பார்த்தவுடன 'எல்' போர்டு வாத்தியார் வந்து விட்டாரப்போய்" என்று கூவுகிறார்கள் அந்த 'மாதிரி' மாணவர்கள்" என்றார் மற்றொரு பயிற்சியாளர். புதிதாக மோட்டார் ஓட்ட ஆரம்பிப்பவர்கள் காரின் முன்னும் பின்னும் மாட்டிக் கொள்ளும் 'எல்' போர்டு அந்த மாணவர்களின் கற்பனையை எவ்வளவு தூரம் தூண்டி விட்டிருக்கிறது பார்த்தீர்களா?

ஒரு பண்டிதப் பயிற்சியாளர் மாத்திரம் இந்த நிலைமையை வெற்றிகரமாகச் சமாளித்தாராம்!

இலக்கண பாடத்தில் 'மியா' என்ற சொல் வருகிறதாம். அதை அந்தப் பண்டிதர் சொன்னவுடன், பையன்கள் நாலைந்து பேர் பூனைகளாக மாறி விட்டார்களாம். பண்டிதர் ஏற்கனவே வேறு பள்ளிகளில் போதிய அளவு அனுபவம் பெற்றவர். கைக்கு எட்டிய தூரத்தில் அமர்ந்து பூனைக் குரல் எழுப்பிய ஒரு பையனின் காதைப் பிடித்துத் தூக்கி விட்டாராம்.

"சார்! பையன்களைத் தொடாமல் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற சட்டம் உங்களுக்குத் தெரியாதா?" எ னும் பையன்.

"அது தெரியும் தம்பி! ஆனால் பூ குட்டியை இப்படித் தூக்கித் தள்ளுவதுதா எங்கள் ஊர் வழக்கம்" என்றாராம் பண்டி,

அப்புறம் அந்தப் பையன்களுக்குப் ப தர் என்றால் நடுக்கம்தானாம்!

சுமார் நூறு பேர்கள் சௌகரியமா தங்கிப் படிக்கத் தனி அறை வசதியு ஹாஸ்டல் இந்த ஆசிரியப் பயிற்சிக் லூரிக்கு இருக்கிறது. தமிழ் நாட்டின் பகுதிகளிலிருந்தும் வரும் மாணவர்கள் இ ஒன்றாகக் கூடிப் பழகும் வாய்ப்பு இருக்கிற

"எங்கள் ஹாஸ்டல் தினம் தினம் கல் ணம் பட்டபாடு படும் சார்" என்றார் ஹாஸ்டல்வாசி.

ஒரு வேளை தினசரி வடை பாயசத்து சாப்பாடு போடுவார்களோ என்று எரு ஐயத்தை அந்த மாணவர் உடனடியா போக்கி விட்டார்.

"சாப்பாட்டு ஹால் ரொம்பச் சிறி எல்லாரும் சாப்பாட்டு வேளையில் ஒன்றாக கார்ந்து சாப்பிட முடியாது. இரண்டு ப களாக அமர்ந்துதான் சாப்பிட வேண் 'முதல் பந்திக்காரர்கள் எப்போது எ திருந்து இடம் விடுவார்களோ' என்ற ஏ துடனும் பசியுடனும், சத்திரத்து வா கலியாணப் பந்தல் முதலியவற்றில் காத்தி ருக்கும் நபர்களின் அனுபவத்தை நாங்களும் சந்தர்ப்பங்களில் பெறுகிறோம்" என்றார்.

இந்தக் கல்லூரியில் படித்து அதற் பெருமை தேடிக் கொடுத்த சில ப மாணவர்கள் பெயர்களைக் கேட்கும்பே நமக்கு உற்சாகமாக இருக்கிறது. இ துணைபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், ராமாராவ், சர் ஸாமுவேல் ரங்கநா காலம் சென்ற ரைட் ஆனரபிள் ஸ்ரீனி சாஸ்திரி ஆகியோர் இந்தக் கல்லூரி ஆசிரியப் பயிற்சி பெற்றவர்கள்.

"முப்பது வருடங்களுக்கு முன்னெல் இந்தப் பயிற்சிக் கல்லூரியில் இடம் கிடை துச் சேருவது என்பது, இப்போது ஐ. ஏ. பரீட்சை எழுதி உத்தியோகம் பெறுவது சமமாகும். அத்தனை சிரமம். ஆசிரியர் சேவை செய்ய வேண்டும் என்ற குறிக்கோளை உடையவர்கள்மாத்திரம் விட பிடியாக முயற்சி செய்து காத்திருந்து இ கல்லூரியில் சேருவார்கள்" என்று பெரு யுடன் குறிப்பிட்டார் ஒரு மாணவர்.

இந்தப் பயிற்சிக் கல்லூரிப் பாடங்களை அச்சடித்த 'நோட்ஸ்'கள் கிடை என்பது ஒரு விசேஷ அம்சம்.

'ஒரு நாட்டின் முன்னேற்றத்தின் பெ பொறுப்பு அந்த நாட்டின் ஆசிரிய கையில்தான் இருக்கிறது. அவர்கள் கரம்தான் வருங்கால சமுதாயத்தை பெறச் செய்கிறது. அவர்கள் தங்கள் ம வர்களிடம் காட்டும் அன்பும் அனுதாப தான் அந்த மாணவர்கள் மூலம் உல லாம் பரவுகிறது' என்ற இலட்சியத்தை கடைப் பிடித்து இந்தக் கல்லூரி மாணவ வேலையில் அகப்படாத நிஜ மணிகளா கல்விப் பணி புரிவார்கள் என்று நம்பலாம்




நாடகத்தில் வருவோர்

---

தகப்பனார் — முன்கோபக்காரர், கண்டிப்புப் பேர்வழி.

விசாலம் — அவர் மனைவி.

சுகந்தி — மகள், ஒரு ஐ. ஏ. எஸ்.ஸின் மனைவி;

நாண்டு — மகன்.

முனுசாமி — வீட்டு வேலையாள்.

ஃ ஃ ஃ

### காட்சி – 1

சுகந்தி: ஏம்மா, இப்பவெல்லாம் அப்பா எப்படி இருக்கார்?

விசாலம்: உங்கப்பா எப்படி இருப்பார்? அவரோட வாழ்க்கை நடத்தறது வழக்கம் போல் இடியும் மின்னலுமாகத்தான் இருக்கு.

சுகந்தி: என்னமோம்மா.... என்னிக்கானும் ஒரு நாள் அப்பாவுக்கு உன் அருமை — நீ எப்படிப்பட்ட பத்தரை மாத்துத் தங்கம்னு தெரிஞ்சா எனக்குப் போதும்.

நாண்டு: இந்தக் காலத்திலே பத்தரை மாத்துத் தங்கங்கிறதைக் காட்டிலும், பதினாறு காரெட் தங்கத்துக்குத்தான் மவுஸ் அதிகம். போன வருஷம் நீ டெல்லியிலிருந்து சிம்லாவுக்குப் போகிறதுக்கு முன்னாலே, அப்பா அம்மாவுக்குச் சங்கீதம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு பண்ணினார். அது உனக்குத் தெரியுமா?

சுகந்தி: நிஜமாகவா அம்மா!

நாண்டு: பின்னே பொய்யாவா? நல்ல நாள் பார்த்து, பானு பாகவதரைக் கூட அதற்காக ஏற்பாடு பண்ணி விட்டார்.

சுகந்தி: அம்மாவுக்குக் குரலே இடையாதே....

நாண்டு: அதுக்கு அப்போ அப்பா என்ன சொன்னார் தெரியுமோ? (அவர் பேசுவது போல்) 'மனுஷன்னா ஒரு ஹாபி இருக்கணும். வயசும் அறுபது அறுபத்தைந்து ஆகி, உடம்பெல்லாம் தளர்ந்து, வேலைக்கு வாய்க்கில்லாமல் போகிற போதுதான் இந்த ஹாபியின் அவசியத்தை அறிவே' (தன் குரலில்) இதெல்லாம் அம்மாவைப் பார்த்து (மீண்டும் அப்பாவைப் போல்) 'அந்த அறுபது வயசிலே ஹாய்யா, ஜம்னு நீ ஆனந்த பைரவியிலே பாட, நான் ஈஸிசேரிலே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்க வாழ்க்கை என்ன குஷியாகப் போகும் தெரியுமா?'

விசாலம்: நாண்டு, நாண்டு. நீ நிறுத்தறியா..... இல்லே....

நாண்டு (லட்சியம் செய்யாமல்: அப்பாவைப் போல்): சங்கீத ஞானம் தெய்வீகமானது. சங்கீதத்துக்குச் சுருதியும், லயமும், உடலுக்கு உயிரும் ஆத்மாவும் போல.

சுகந்தி (சிரித்துக் கொண்டு): நாண்டு, நாண்டு. போதும், போதும். நீ அப்பாவை 'இமிடேட்' பண்ணினது... எனக்குச் சிரிச்சுச் சிரிச்சு உயிரே போயிடும் போலிருக்கு.

நாண்டு: மேலும் கேளு. அம்மாவுக்குச் சங்கீதம் பயில ஒரு தம்புராவே வாங்கிண்டு வந்துட்டார் அப்பா.

சுகந்தி: நிஜமாகவா?

விசாலம்: எல்லாம் அந்தத் தம்புராவாலே வந்த அனர்த்தம்தான். எங்கேயோ ஒரு

நல்ல தம்புரா மலிவாகக் கிடைக்குதாம். அதை வாங்கினவர்..... என்னைச் சங்கீதம் கத்துக்கோன்னு கூத்தடிச்சுட்டார்.

சுகந்தி: நீ எப்படித் தப்பிச்சே?

விசாலம்: ஏதோ நல்ல வேளையாக உங்க அப்பா வாங்கின இடத்திலேயே தம்புராவைக் கொடுக்கும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்டது..... நானும் பிழைச்சேன்.....

நாண்டு: நீயா, சங்கீதமா அம்மா?

சுகந்தி: இந்த அம்மா ஆறுதும் அப்பான்னு இப்படிப் பயந்து சாகக் கூடாது. அதுவும் இத்தனை வயசு ஆனபிறகு நானாக இருந்தால் கண்ணிலே விரலை விட்டு ஆட்டி விருப்பேன்.

நாண்டு: அப்போ ஐ. ஏ. எஸ். அத்திம்பேர் சிம்லாவிலே இருந்து வந்தால் முதல் காரியமாக அவர் கண்களைக் கவனிக்க வேணும்!

சுகந்தி: போடா, போக்கிரி! ஆமாம். நீ ஏன் எனக்கு இதெல்லாம் பத்தி எழுதல்லே?

விசாலம்: லட்சணமாகத்தான் இருக்கு. உங்கப்பா வண்டவாளம் மாப்பிள்ளைக்கு வேறு தெரியணுமாக்கும்.

தகப்பனார் (வந்து கொண்டே): குடும்பத் தலைவி என்ன சொல்றா? யாரு வண்டவாளம் யாருக்குத் தெரியப்படாதாம்?

நாண்டு (தயக்கம்): ஒன்னுமில்லே அப்பா! சும்மா வெறும் அரட்டை!

தகப்பனார் (திடீரென்று கோபித்து): நீ அரட்டை அடிக்க, அடிக்க உருப்படாமல் தான் போகப் போறே. என் தலை மறைஞ்சாப் போதும். ஊர் சுத்தறது. எல்லாம் உங்கம்மா கொடுக்கிற இடம். உன்னைச் சொல்லிப் பயன்?

விசாலம்: (பேச்சை மாற்ற) அங்கெல்லாம் இப்போ ரொம்பக் குளிராமே?

சுகந்தி: (உதவிக்கு நன்றியுடன்) அதை ஏன் கேக்கிறே அம்மா. போன 'விண்டரை'ப் போல் சிம்லாவில் சரித்திரத்திலேயே இருந்ததில்லையாம். எங்கே பார்த்தாலும் பனிக் கட்டி.... பனிக்கட்டி.... பனிக்கட்டி.

தகப்பனார்: (பரிவுடன்) நீ எப்படி அம்மா சகிச்சுண்டே? நம்ம பக்கத்திலே குளிர் மருந்துக்குக் கூடக் கிடையாதே.....

சுகந்தி: அந்த இரண்டு மாசமும் கணப் பண்டைதான் வாசம். பாவம். இவருக்குத்தான் சிரமம். அத்தனை குளிரிலேயும்...பனியிலேயும் ஆபீசுக்குப் போயாகணும்.

தகப்பனார்: (கவலையுடன்) அதுக்கு வேணுங்கற உடுப்பு வச்சிருக்காரு?

சுகந்தி: (பெருமையுடன்) அதை ஏன் கேக்கறே அப்பா. இவருக்குக் குளிருந்தான் குஷி. வேணும்னு காட்டன்லேதான் ஊர் சுற்றுவார். தலைக்குக் கூட ஒரு மப்ளர் கட்டிக்க மாட்டார்.

தகப்பனார்: (கடுமையாக) அசட்டுத்தனம்!

சுகந்தி: (பெருமையாக) அதென்னவோ அதிசயம்! அவரைக் குளிரும் ஒன்னும் பண்றதில்லே.

தகப்பனார்: (கடுமை குறையாமல்) பைத்தியக்காரத்தனம். பட்டாத்தான் தெரியும்.

சுகந்தி: அவருக்கு ஒன்னும் வராதப்பா.

தகப்பனார்: (கோபமாக) அசட்டுப் பிசட்டுன்னு எதிர்த்துப் பேசாதே. நாளைக்கே முதல் காரியமாக அவனுக்கு எழுதிடறேன்.

சுகந்தி: (திடுக்கிட்டு) அய்யய்யோ...வேண்டாம் அப்பா .... பிறகு என்னைப் பரிகாசம் பண்ணி உயிரை வாங்கிடுவார்...

தகப்பனார்: வெறும்னே எழுதினால்தானே கிண்டல் பண்ணுவான்... அந்தக் கம்பளிப் போர்வையையும், குல்லாவையும் பார்சல் பண்ணி அனுப்பிடறேன். அப்போவானும் நான்சிரியஸா இருக்கேன்னு புரிஞ்சுக்கட்டும்.

சுகந்தி, நாண்டு: எந்தப் போர்வையும், குல்லாயும்?

தகப்பனார்: (பெருமையுடன்) எல்லாம் பத்திரமா வச்சிருக்கேன். முன் யோசனையாக... என் தாத்தா நாளில் பன்றந்தே கொஞ்ச நாள் ஏர்காடு பக்கத்திலே இருந்தாராம். அப்போ வாங்கினது... பஸ்ட் கிளாஸ் காஷ்மீர்க் கம்பளி. அந்தக் குல்லாவைப் போட்டுண்டா கண்களைத் தவிர பாக்கி எல்லா இடத்தையும் மூடிடாதா?

நாண்டு: ஐயய்யோ, அந்தக் குரங்குக் குல்லாவையா?

தகப்பனார்: நாண்டு! அசட்டுப் பிசட்டுன்னு பேசினே எனக்குக் கெட்ட கோபம் வரும். அந்தக் குல்லா என்ன விஞ்ஞான முறையிலே தைக்கப்பட்டிருக்கு தெரியுமா? சாதாரணமாகக் குளிர், காது, கழுத்தின் பின்புறம், இவை இரண்டையும்தான் தாக்கும். அந்தக் குல்லாவைப் போட்டுண்டா இந்த இரண்டு இடத்தையுமே அது மூடிக்காதா?

விசாலம்: நமக்கேன் அந்த வம்பெல்லாம்? குழந்தையே வேண்டாங்கறு... வேணும்னு அவருக்குக் குல்லா வாங்கிக்க வக்கில்லையா?

தகப்பனார்: அவாளுக்கு வக்கில்லேன்னு நாம சீரும் செனத்தியும் செய்யறோம்? ஏதோ... நம்ம ஆசைக்கு, கடமைக்கு நாம செய்யறோம்... அப்புறம் அவா பாடு...

சுகந்தி: எத்தனையோ வருஷங்களுக்கு முந்தி அந்தப் போர்வையைப் பார்த்திருக்கேன்... அப்பவே அது செல்லரிச்சு, ஓட்டை ஓட்டை



யாக இருந்தது. இப்போ என்ன கதியிலே இருக்கோ... வேண்டாம் அப்பா... இவர் ரொம்ப ஸ்டைல் பேர்வழி. அப்புறம் என் மண்டைதான் உருளும்.

தகப்பனார்: அதையும்தான் பார்ப்போமே. முதல்லே அந்தப் போர்வையைப் பரண்லே யிருந்து இறக்குவோம். அதுக்குள்ளேயே குல்லாவையும் சுற்றி வைத்திருக்கிறதாக நெனைப்பு... ஆமாம்... இந்த முனுசாமி எங்கே? அவன் இருந்தா இப்போவே எடுக்கச் சொல்லலாமே?... (காட்சி மாற்றம்)

## 2

(மறுநாள்: முனிசாமி, சுகந்தி, நாண்டு, விசாலம் ஆகியோர்)

முனிசாமி: (தனக்குள்) போர்வை என்னவோ கல்லுக் கோட்டைக்காட்டியுந்தான் இருக்கு. அடேயம்மாடி... ஐயா சொல்ற கணக்குப்படி அம்பது வருஷப் பண்டமா இருக்கணுமே... எப்படி இருக்கு! ஆஹா. இந்தக் குல்லாதான்....

சுகந்தி (ஆத்திரத்துடன்) முனிசாமி.... உன் விமர்சனம் எல்லாம் போதும். வேணும்னு நீயே அந்தப் போர்வையையும், குல்லாவையும் எடுத்துக்க... நல்லா இருக்காம்— கல்லுக் கோட்டை மாதிரி இருக்காம்.

முனிசாமி: ஏன் சின்னம்மா... இப்படி எரிஞ்சு விழறீங்க? ஏதோ பெரிய ஐயா எடுத்து வெய்யிலிலே போட்டு வைன்னாங்க. நான் எடுத்தேன்.

நாண்டு: சிம்லாக் குளிர்லே அத்திம்பேர்... ஒரு மப்ளர்கூட இல்லாமே காட்டன்லே வெளியே போவார்னு இவள் ஜம்பம் அடிக்கவும் வேண்டாம்; இப்படித் திண்டாடவும் வேண்டாம்!

சுகந்தி: (ஆத்திரத்துடன்) அதுக்காக அவருக்கு இந்த தைநதர் காலத்துக் கம்பளியையும், குரங்குக் குல்லாவையும் அனுப்பணுமாக்கும்?

நாண்டு: அதான் அப்பாவோட ஏர்ஜிறு விடு... ஆமாம், நீ என்னவோ அத்திம்பேர் கண்களில் விரலே விட்டு ஆட்டிடுவேன்னியே. இப்போ அப்பாவை வேறு ஒரு கை பாரேன்.

சுகந்தி: (ஆத்திரமாக) அது மாதிரி அப்பாவை அம்மா எங்கே வளர்த்திருக்கா?

விசாலம்: ரொம்ப லட்சணமா யிருக்கு! உங்க சண்டையிலே எனக்கு மண்டகப்படி பண்றது.

முனிசாமி: (ஆவலுடன்) பெரியம்மா... என்னதான் நடத்திச்க.... சின்னம்மா ஏன் இப்படி 'கர்...புர்'னு இருக்காங்க?

நாண்டு: பெரிய ஐயா இந்தப் போர்வையையும் குல்லாவையும் மாப்பிள்ளை ஐயாவுக்கு பார்சல் பண்ணி சாயந்திரம் அனுப்பப் போறாங்களாம். அங்கே ரொம்பக் குளிராம்.

விசாலம்: (கடுமையாக) முனிசாமி.. போய் உன் வேலையைப் பார்... அதுகளுக்குச் சரியாக நீயும் பேசாதே.

முனிசாமி: இல்லிங்க பெரியம்மா. போன ஐப்பசியிலே ஜயப்பூர்லே இருக்கிற என் மக கிட்டேருந்து கடுதாசு வந்துச்சு... அங்கெல்லாம் ரொம்பக் குளிராம். என் மனசு கேக்கல்லே... கடையிலேருந்து ஒரு நல்ல கம்பளிப் போர்வை எடுத்து அனுப்பணும்னு நெனச்சுக்கிட்டிருக்கேன். அப்படி இருக்க, நீங்க போய் இந்தப் பழைய கம்பளியை அனுப்பலாமுங்களா...?

விசாலம்: சரி...சரி... நீ அதை வெய்யிலில் காய வைச்சிட்டு உன் வேலையைப் பார்... வேணும்னு சாயந்திரம் பெரிய ஐயா கிட்டே சொல்லு... உன் அபிப்பிராயத்தை....

முனிசாமி: நமக்கேனுங்க வீண் வம்பெல்லாம். பெரிய ஐயா கோபம் பொல்லாதாச்சே. (போகிறான்)

சுகந்தி: (ஆத்திரமாக) என்ன அம்மா, நீயும் அப்பாவோட சேர்ந்துண்டு அதைக் காயப்போடச் சொல்றே. அது மாத்திரம் அவர் கிட்டே போச்சுன்னு, அப்புறம் என்னாலே அவர் முகத்திலே விழிக்க முடியாது...

விசாலம்: சுகந்தி...இப்போ ஆத்திரப்பட்டு என்ன பயன்...? ஒங்கப்பா சொன்னதும் சொன்னபடிதானே? சாயந்திரம் ஆபீஸிலேருந்து அவர் வரட்டும்...சமயமறிஞ்சு மீண்டும் வேண்டாம்னு சொல்லிப் பாக்கறேன். கடவுள் விட்ட வழி. (காட்சி மாற்றம்)

## 3

[தகப்பனார், விசாலம், முனிசாமி, சுகந்தி, நாண்டு ஆகியோர்]

தகப்பனார்: முனிசாமி! அந்தக் கம்பளியையும், குல்லாவையும் சும்மா திருப்பித் திருப்பிப் பார்த்து அநுபவிச்சது போதும். அந்தக் கள்ளிப் பெட்டி, பாக்கிங் சாமான்கள் எல்லாம் இப்படிக் கொண்டா...பார்சல் ரொம்ப தூரம் போகணும். உங்கிட்டே ஒப்புவிச்சா சாமான் போய்ச் சேர்ந்தாப் பிலேதான். என்ன விசாலம் நிக்கறே? அந்தச் சுத்தியலை எடு.

விசாலம்: இதோ பாருங்க... நான் எப்பவுமே உங்க விஷயங்களிலே குறுக்கே வர்றதில்லே. உங்களுக்கே தெரியும். தயவுசெய்து இதுகளை அனுப்ப வேண்டாம். மூத்தநாள் தான் ஊர்லேருந்து வந்திருக்கா குழந்தை...: அவ கண் கலங்கறது நல்லாயில்லே.

தகப்பனார் (கோபமாக) விசாலம்... நீ இப்படித் தத்துப் பித்துன்னு பேசினே, எனக்குக் கெட்ட கோபம் வரும்.... அதுகளுக்கு எது தனக்கு நல்லது எது கெட்டதுன்னு எப்படித் தெரியும். எல்லாம் பெரியவங்க நாம பார்த்துத்தான் செய்யணும்... இதிலே எனக்குக் கெட்ட பெயர் வந்தா வந்துட்டுப் போகட்டும். (பெட்டிக்கு ஆணி அடிக்க ஆரம்பிக்கிறார்.)

விசாலம்: இது நம்ம குழந்தையோட இருந்தால், நான் ஏன் வாயைத் திறக்கறேன்? என்ன இருந்தாலும் மாப்பிள்ளை மூணும் மனுஷர். அவர் ஏதாவது விபரீதமாக எடுத்துக் கொண்டால் நம்ம குழந்தைக்குத்தானே நாளைக்குக் கஷ்டம் ஏற்படும்?

தகப்பனார்: (கோபமாக) முதல்லே மாப்பிள்ளை மூணும் மனுஷரில்லே. நம்மவர்தான்... இரண்டாவதாக அவர் படிச்சவர்... விவேகி.... உங்களை எல்லாம் போல இதிலே ஒரு அகௌரவமும் காணமாட்டார்.

முனிசாமி: ஆமாம்... எசமான். மாப்பிள்ளை தங்கக் கம்பிங்க—

சுகந்தி: (அழுகை,ஆத்திரத்துடன்) தடியா!

# விலகிய காரணம்?



ஹபீஸ் முகம்மது



கே. டி. மாளவியா

லலிதா நடராஜன்

**ம**த்திய அரசாங்கத்திலிருந்து விலகிய ஹபீஸ் முகம்மது இப்ராகிம், மாளவியா, கே. வி. ரெட்டி ஆகியோர் உள்பட மொத்தம் பத்துமந்திரிகள் சுதந்திர இந்தியாவில் இது வரை பதவியிலிருந்து விலக நேரிட்டுள்ளது.

பாரதநாடு ஜனநாயக சம்பிரதாயங்களுக்கு மதிப்புக் கொடுத்தாக வேண்டியிருக்கிறது என்பதற்குக் கிருஷ்ண மேனன், மாளவியா ஆகியோருடைய விஷயங்கள் சிறந்த உதாரணங்களாக உள்ளன. கடைசியாக விலகியவர்களில் ஹபீஸ் முகமது இப்ராகிம் தேர்தலில் தோற்றவர். மாளவியா குற்றச்சாட்டுக்கு இலக்காகியவர். இவர்கள் விலக நேர்ந்ததில் ஆச்சரியமில்லை. காமராஜ் திட்டம் அவர்கள் விலகியதுதான் ஆச்சரியம்.

விலக நேர்ந்த மந்திரிகள்: நிதிமந்திரிகளாக இருந்த ஆர். கே. ஷண்முகம் செட்டியார், மத்தாய், சிந்தாமணி தேஷ்முக், டி.டி. கிருஷ்ணமாச்சாரி, உணவு மந்திரி பதவி வகித்த அஜித் பிரசாத் ஜெயின், ரயில்வே மந்திரியாக இருந்த லால்பகதூர் சாஸ்திரி, பாதுகாப்பு மந்திரியான வி. கே. கிருஷ்ண மேனன், எண்ணெய் மந்திரி மாளவியா பாசன மந்திரி ஹபீஸ் முகம்மது இப்ராகிம், கே. வி. ரெட்டி ஆகியோர்.

நிதி மந்திரியாகப் பதவி வகிப்பவர்கள் எல்லோருக்குமே பதவி ராசி சரியாக இராதோ என்று ஏற்பட்ட நிலைமையை மொரார்ஜி தேசாய் தகர்த்தெறிந்து விட்டார். முதல் நான்கு மந்திரிகள் ஒருவர்பின் ஒருவராக விலக நேர்ந்தது பெரும் துர்ப்பாக்கியமாகும். ஒவ்வொருவரும் பொருளாதாரத் துறையில் சிறந்த நிபுணர்கள்; அறிவாளிகள்.

''சீஸரின் மனைவி சந்தேகத்துக்கே மணிக்கலாகாது'' என்று ஆங்கிலத்தில் பழமொழி உண்டு. அது போல் ஜனநாட்டில் மந்திரிப் பதவி வகிப்பவர் அவர்கள் நோக்கம் நல்லதாக இருந்தபோதும் கூட மக்கள் சந்தேகப்படுவதற்குச் சிறிது இடமளிக்கக் கூடாது.

ஆர். கே. ஷண்முகம் செட்டியார் மந்திரியாக இருந்தபோது வருமான வரி ஏ ஜுக்குச் சில கம்பெனி விவகாரங்கள் ப விவரங்கள் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப் டது. அவற்றில் சிலவற்றை ஸ்ரீ செட்டி வாபஸ் செய்தார். அப்படிச் செய்வது நி யாயமில்லை என்று அவருடைய ஆலோசக கூறியதையும் அவர் கவனிக்கவில்லை. வா செய்யப்பட்டவை பிரதம மந்திரி யோசனையின் பேரில் மீண்டும் கமிஷன் மு சமர்ப்பிக்கப்பட்டன என்றாலும், மக்களிடையே சந்தேகம் ஏற்ப உண்டாகி விட்டது. இந் நிலைமை உண தைரியமாகப் பதவியிலிருந்து விலகச் செ யார் முடிவு செய்ததைப் பிரதம ம மிகவும் பாராட்டினார். இது நடைபெ 1948ம் ஆண்டில்.

அவருக்குப் பின் மத்தாய் நிதிய ரானார். திட்டங்கள் போடுவதால் என்ன பலனும் இல்லை அசைக்க முடிய கருத்தை யுடைய ஆகவே ஐந்தாண்டுத் டம் ஆரம்பிக்கப்ப செயல்பட்டபோது ராகவே விலகிக் கொ விட்டார்... 195 பட்ஜெட் சமர்ப்பி முன்னரே இவர் நாமா செய்தார்.

இவருக்குப் பின் மந்திரி பதவிக்கு வந் தேஷ்முக். இவரு திட்டத்தை நிறைவே வதில் அபார நம்பி

ஏ. பி. ஜெயின்



லால்பகதூர் சாஸ்திரி





ஸி. டி. தேஷ்முக்



டாக்டர் ஜான் மத்தாய்



ஆர். கே. ஷண்முகம் செட்டியார்

ராஜ்யங்கள் புனரமைப்பு ஏற்பட்டபோது பம்பாய் ராஜ்யம் தனி மகாராஷ்டிரமாக அமையவில்லை. மகாராஷ்டிரர்களுக்குத் தனி ராஜ்யம் ஏற்படாததைக் கண்டிக்குமுகமாக இவர் 1956ல் ராஜிநாமா செய்தார்.

இவருக்குப் பின் வந்தவர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி. முந்திராவிடம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் முதலீடு செய்த விவகாரத்தில் இவர் பொறுப்பேற்க நேர்ந்தது. அதிகாரிகளே பொறுப்பாக இருந்தாலும் சட்ட ரீதியாக நிதிமந்திரிதான் பொறுப்பேற்க வேண்டும் என்று சக்ளா கமிஷன் தீர்ப்புக் கூறிவிட்டதினால் டி. டி. கே. விலக நேர்ந்தது.

அரியலூர் ரயில் விபத்து அநேகருக்கு நினைவிருக்கலாம். மருதையாறு பாலத்தில் வெள்ளம் ஏற்பட்டுப் பழுது நேர்ந்ததன் காரணமாக இப்பெரு விபத்து ஏற்பட்டதும் அதில் 112 பேர்கள் மாண்டதும் ரயில்வே நிர்வாகத்துக்கே பெரும் அபகீர்த்தியை ஏற்படுத்தியது. இந்த இலாகாவின் மந்திரியாக இருந்த லால்பகதூர் சாஸ்திரி 1957ல் பதவியிலிருந்து ராஜிநாமா செய்தார்.

அஜித் பிரசாத் ஜெயின் நேருவின் வலது கைமாதிரி இருந்தவர். அவர் காலமானபின் உணவு இலாகா மந்திரியாகப் பொறுப்பேற்றார். உணவு நிலைமை குளறுபடியானதற்கு இவரே பொறுப்பு என்று பாராளு மன்ற அங்கத்தினர்கள் குற்றம் சாட்டினர். கன்ட்ரோல்கள் சரிவர அமுல் செய்யப்படாததே உணவுக் குளறுபடிக்குக் காரணம் என்று கூறப்பட்டது. மந்திரி சபையில் உள்ள பல துறை நிர்வாகங்களிடையே ஒத்துழைப்பு இல்லை என்று இவர் பதிலுக்குக் குற்றம் சாட்டிப் பதவியிலிருந்து விலகிக் கொண்டு விட்டார்.

சென்ற வருஷம் நவம்பர் மாதம் தற்காப்பு மந்திரியாக இருந்த வி. கே. கிருஷ்ண மேனன் கட்சியின் வற்புறுத்தலின் பேரில் ராஜிநாமா செய்ய நேர்ந்தது. 'பாதுகாப்புத் துறையில் ஏற்பட்ட தவறுக்கு மேனன் மட்டும் பொறுப்பில்லை; நாங்கள் எல்லாருமே தான்' என்று நேருஜி சொன்னதும் பாராளுமன்றத்தில் எடுபடவில்லை. மேனன் ராஜிநாமாவை நேருஜி ஏற்கவே நேரிட்டது.

மத்திய அரசாங்கத்தில் நீர்ப்பாசனத் துறை மந்திரியாக இருந்த ஹபீஸ் முகம்மது இப்ராஹிம் அம்ரோஹா உபதேர்தலில் ஆசாரிய கிருபளானியுடன் போட்டியிட்டுத் தோல்வி பெற்றார். தோல்வியடைந்தவர் மந்திரிசபையில் இருக்கக் கூடாது என்பதினாலேயே அவர் ராஜிநாமா செய்ய நேர்ந்திருக்கிறது.

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தேர்தல் செலவுக்காகப் பண உதவியைக் கல்கத்தாவிலுள்ள ஸிராஜுத்தீன் நிறுவனத்திடமிருந்து பெற, தம் செல்வாக்கைப் பயன்படுத்தினார் என்பது மாளவியா மீதுள்ள குற்றச்சாட்டு. இவர் விஷயத்தைப் பற்றி விசாரித்த நீதிபதி தாஸ் தவறு உள்ளது என்றே தம் ரிப்போர்ட்டில் குறிப்பிட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆகவே இவரும் விலக நேர்ந்திருக்கிறது.

ஜூலை மாதத்தில் மத்திய சர்க்கார் வர்த்தக, தொழில் மந்திரி கே. வி. ரெட்டி உடல்நிலை காரணமாக மந்திரி சபையிலிருந்து விலகிக் கொண்டிருக்கிறார்.

இப்படி இந்த மந்திரிகள் அனைவரும் விலக நேர்ந்ததற்குத் தனித்தனிக் காரணம் கூறினாலும், பொதுவாக ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவர்களின் அஜாக்கிரதையையும் குறிப்பிட்டுத்தானே ஆகவேண்டும்?

வி. கே. கிருஷ்ண மேனன்



டி. டி. கிருஷ்ணமாச்சாரியார்



# காஸ் அடுப்பு ஜோசியம்




"இன்று எங்கள் வீட்டில் என்ன சமையல் தெரியுமா? பச்சைப் பட்டாணிக் கறி, காலி பிளவர் சாம்பார், பொரிச்ச ரசம்...."

"எங்கள் வீட்டில் பொம்பளிமாஸ் முந்து கோசமலி, ஊட்டியிலிருந்து என் நாத்தனார் பிஞ்சு காரெட் தன் வீட்டுத் தோட்டத்துச் செடியிலேயிருந்து பறிச்சு அனுப்பியிருந்தாள். அது கறி, பச்சை மிளகுத் துவையல். அப்புறம் வந்து, அப்புறம் வந்து..."

சமையலைப் பற்றி ஒருவரை யொருவர் விசாரித்துக் கொள்வதும், அதற்குப் பதில் சில கற்பனை 'அயிட்டங்'களைப் பற்றிக் கதை விடுவதுமான வழக்கம் இப்போது குறைந்து விட்டது. ஒருவரை யொருவர் பார்த்ததும் பேசுவதற்கு வேறு எத்தனையோ விஷயங்கள்தான் இருக்கின்றனவே!

ஆனாலும் நான் நேற்று என் சிநேகிதை ரமாவின் வீட்டுக்குச் சென்றிருந்த போது, "என்ன சமைத்தாய்?" என்று அவளைக் கேட்க வேண்டும் என்றுதான் தோன்றிற்று.

அவள் பிள்ளை முத்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். சாப்பிடும் தட்டின் நடுவில் இரண்டு மூன்று சப்பாத்தி ரொட்டிகளும் இருந்தன. அது சப்பாத்திக் கள்ளி மாதிரி அவ்வளவு தடியாக இருந்தது. தட்டின் ஓரத்தில் வில்லை வில்லையாக நறுக்கிய பச்சை வெங்காயம். அதன் பக்கத்தில் அரை மூடி எலுமிச்சம் பழமும், உப்புப் பொடியும் இருந்தன. தோலோடு நறுக்கி அரை வதக்கல் வதக்கிய கறி வைத்திருந்தாள். அது பப்பாளிக்காய் மாதிரி இருந்தது. ரமா ஒரு பாத்திரத்திலிருந்து குழம்புமாதிரி ஏதோ ஒன்றை ஊற்றினாள். அது நன்றாக பசித்த பாசிப் பயிற்றுப் பருப்பு. பிறகு ஒரு கிண்ணத்தில் தயிரை ஊற்றி அதில் கொஞ்சம் சர்க்கரையைப் போட்டுக் கலந்து வைத்தாள்.

முத்துவுக்கு வயது ஏழு, அல்லது எட்டு இருக்கும். அவன் சாப்பிடுவதை நான் பார்க்காதது போல் பார்த்துக் கொண்டிருந்தேன்.

என் வயிற்றுக்குள்ளிருந்த மணத்தக்காளி வற்றல் குழம்பும், பருப்புத் துவையலும், நன்றாகப் 'பாலிஷ்' செய்யப்பட்ட அரிசிச் சாதமுமோ அந்தச் சாப்பாட்டு வகைகளைப் பார்த்துக் கோபத்தால் குமுறி எழுந்தன.

"பிள்ளை, பெண் எல்லாம் சௌக்கியமா?" என்று விசாரித்தேன்.

"இன்றைக்குத்தான் கோபியிடமிருந்து கடிதம் வந்தது. அவனை வாஷிங்டனிலிருந்து கொலம்பியாவுக்குப் போகச் சொல்லியிருக்கிறார்களாம். சங்கரன் அடிஸ் அப்பபாவில் இருக்கிறான். ராஜி ஹாங்காங்கில் இருக்கிறான். முத்துவைக் கூடத் தங்கிட்டே அனுப்பி விட்டால் அங்கேயே படிக்க வைக்கிறேன் என்கிறான் கோபி. எனக்கு அவனை அனுப்பிவிட வேண்டும் என்கிறது தான். ஆனால் அவர்தான் 'கூடாது. அவனாவது நம்மோட இருக்கட்டும்' என்கிறார்.

"கடைசியிலே அம்மாவுக்கு இஷ்டமில்லை என்று நம்ப மேலே பழியைப் போடுகிறது" என்றேன் நான்.

"சில பிள்ளைகளுக்குத் தூர தேசங்களுக்குப் போகிறதுக்குத் துணிச்சல் கிடையாது."

"அமெரிக்காவுக்கும், ஆப்பிரிக்காவுக்கும் போகிறது கிடக்கட்டும். புது இதோ கூப்பிடு தூரத்திலே இருக்கிறது. அதற்குப் போக மாட்டேன் என்கிறார்களே. எஞ்சினீயரிங் பரீட்சை பாஸ் பண்ணின பையன்கள் சில பேர் பட்டணத்திலேயே வேலை கொடுத்தால்



அனுசுயா





கொடுங்கள். இல்லாவிட்டால் வேண்டியதில்லை என்கிறார்களாமே!''

''பிள்ளைகள் இப்படி இருப்பதற்கு நாம்தான் ஓரளவு பொறுப்பாளி. குழந்தைகளைப் பொத்தி வளர்க்கிறது. அடுப்பங்கரையையும், நம்மையும் சுற்றிச் சுற்றி வர விடுகிறது. நாக்கையும் நன்றாக வளர்த்து விடுகிறது. மூத்து சாப்பிட்டதைப் பார்த்துக் கொண்டிருந்தாயே. நான் பல ஊர்க்காரர்கள் சாப்பிடுகிற தினுசை யெல்லாம் பண்ணிப் போடுவேன். நம்ப ஊர் சாப்பாட்டை நினைத்துக் கொண்டு தான் இந்த பி.ஏ.க்களும், எம்.ஏ.க்களும், பி.எஸ்ஸி.களும் வெளியூர் போக மாட்டேன் என்கிறதுகள்.''

அவளிடம் ''வரட்டுமா?'' என்று கேட்டுக் கிளம்பினேன்.

''காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம். ஐந்தே நிமிஷம் என்றால் ஐந்தே நிமிஷத்தில் டிகாக்ஷன் போட்டு, புதுப் பால் காய்ச்சிக் கலந்து கொடுக்கிறேன்'' என்றாள் ரமா.

''சரிதான், காஸ் ஸ்டவ் வாங்கியிருக்கிறாய் போல் இருக்கிறது'' என்றேன். அதில்தான் அவ்வளவு சீக்கிரம் காப்பி போட முடியும். காப்பி சாப்பிட்டு விட்டு வீடு திரும்பினேன்.

காஸ் ஸ்டவ்வில் ஸ்டவ் என்பது வெறும் இரும்பு அடுப்பு. இதில் எரிவதற்கான எண்ணெயோ, வேறெதுவோ போடுவதற்கில்லை. தீப்பிடிக்கச் செய்வதற்காகவோ, ஜ்வாலையைக் குறைப்பதற்காகவோ, அதிகரிப்பதற்காகவோ, அடுப்பை அணைத்து விடுவதற்காகவோ உதவும் விசை ஒன்று இருக்கிறது. இது மின்சார விசிறி ஸ்விட்சைப் போன்றது.



எரிவதற்காக உபயோகிக்கப்படும் 'காஸ்' அதுதான் வாயு. தனியே ஒரு பலமான எஃகு ஸிலிண்டரில் இருக்கும். வாயு என்றால் அது வெறும் காற்று உருவத்தில் இராது. திரவமாகத்தான் இருக்கும். பூமியிலிருந்து வரும் அப்பட்டமான எண்ணெய் நாம் குறிப்பிடும் மண் எண்ணெய் அல்ல. அது 'காஸோடு' கலந்திருக்கும். அவற்றைத் தனித்தனியாகப் பிரிப்பார்கள். எண்ணெயை மேலும் சுத்தப் படுத்தி பெட்ரோல், மண்ணெண்ணெய் முதலிய பொருள்களாகப் பிரிப்பார்கள். முதலில் காஸைத் தனியாகப் பிரித்தார்களே, அதை மேலும் பக்குவப்படுத்தித் திரவமாக மாற்றுவார்கள். இதற்கு எல்.பி. 'காஸ்' என்று பெயர்.

இதைத்தான் பலமான எஃகு ஸிலிண்டர்களில் நிரப்புகிறார்கள். அதன் மீது நிறைய அழுத்தம் இருக்கும்படி செய்வார்கள். அந்த அழுத்தத்தின் பயனாய்ச் சிறைப்பட்டிருக்கும் அந்தத் திரவ காஸ் எப்போது வெளியேறுவோம் என்று தவித்துக் கொண்டிருக்கும். ஸிலிண்டரில் ஒரு ரப்பர்க் குழாய் பொருத்தப்பட்டு, அது அடுப்புடன் இணைந்திருக்கும்.

அடுப்பை எரியச் செய்வதற்கு முதலில் ஸிலிண்டரின் மேல் உள்ள ஒரு பலமான விசையைத் திருப்ப வேண்டும். எந்தப் பக்கம் திருப்ப வேண்டும் என்பதைத் தெரிவிக்க அதன்மீது அம்புக் குறி போட்டிருக்கிறது. இதைத் திருப்பிய மாத்திரத்தில் ஸிலிண்டரில் உள்ள திரவ வாயு அசல் வாயுவாக மாறி ரப்பர்க் குழாய் வழியாக அடுப்புக்கு வரும்.

தயாராக வைத்திருக்கும் ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்துக் கொண்டு அடுப்பில் உள்ள விசையைத் திருப்பி விட வேண்டும். உடனே காஸ் அடுப்புக்கு நடுவில் வரும். நெருப்புக் குச்சியின் நெருப்பை அதன் மீது காண்பித்தால் அது பற்றிக் கொள்ளும்.

உடனேயே நெருப்புக் குச்சியை அப்பால், ஸிலிண்டர் வைத்திருப்பதற்கு எதிர்ப் பக்கமாகப் போட்டு அணையச் செய்ய வேண்டியது. உடனேயே நெருப்புக் குச்சியை.... உடனேயே நெருப்புக் குச்சியை... நான் இதை இப்படி ஏன் மந்திரம்போல் திரும்பத் திரும்பச் சொல்கிறேன் என்றால் ஆபத்து நேராதிருப்பதற்குத்தான். நெருப்புக் குச்சி தப்பித் தவறி ரப்பரின்மீது பட்டு அது தீப்பிடிக்க ஆரம்பித்தால் காஸ் வெளியாகிக் குபீரென்று பற்றிக் கொண்டு ஆபத்து ஏற்படும்.

விறகு அடுப்பிலும், சாதாரண மண் எண்ணெய் அடுப்பிலும் சிறிதாவது அதன் வாசனை ஏறி விடும். அவற்றின் புகையினால் சமையல் வாசனை பாதிக்கப்படத்தான் செய்கிறது.

காஸ் ஸ்டவ் அடுப்பு சமையல்களில் பருப்பு கறிகாய்கள் இவற்றின் இயற்கை மணம் உள்ளது உள்ளபடி வீசுகிறது.

ஸிலிண்டரில் காஸ் ஆகி விட்டால் அதை எடுத்துக் கொண்டு போய் காஸ் நிரப்பிய வேறு ஒரு ஸிலிண்டரை மோட்டார் வானில் கொண்டு வந்து கொடுப்பார்கள்.

இந்த அடுப்பை உபயோகிப்பதில் ஒரு சில தொந்தரவுகள் இருக்கின்றன. பாலை அடுப்பில் வைத்து விட்டுத் தோட்டப் பக்கம் போய்ப் பக்கத்து வீட்டுக்காரர்களோடு பேசிக் கொண்டிருக்க முடியாது. கைதி போல் அடுப்பின் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்க வேண்டும்.

தனியே சமைத்துச் சாப்பிடும் பிரம்மச்சாரி உத்தியோகஸ்தர்கள் ''அரை மணியில் நாமே சமைத்துச் சாப்பிட்டால் போச்சு! இதற்காக ஒரு மனைவி வேறு எதற்கு?'' என்று எண்ணலாம் அல்லவா? இப்போது சில வீடுகளில் இது வந்த பிறகு — சமையல்காரர்களை போகச் சொல்லி விட்டார்களாம்.

இதிலே ஒன்று. இந்த ஸிலிண்டர் டக்டக் என்று அடித்துக் கொண்டு ஜோஸ்யம் சொல்கிறது என்று யாரும் சொல்லவே மாட்டார்கள். ஏனென்றால், அது கிட்டத்தட்ட நூறு பவுண்டு கனம் இருக்கும்! ஸ்டவ்வுடன் இருந்த இடத்தை விட்டு அசையாது!

**பஸ்ஸில் உட்கார்ந்திருப்பவர்:** பாவம்! அந்த அம்மா பாவம் நிற்கிறாளே. யாராவது இடம் விடக்கூடாதா?

அவருக்குப் பக்கத்தில் இருப்பவர் எழுந்ததும் அந்த அம்மாள் வந்து உட்கார்ந்தாள்.

''இந்தக் கூடையை உங்கள் மடியில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று அந்த அம்மாள், இடம் சிபாரிசு செய்தவர் மடியில் அதை வைத்தாள். அவள் அவர் மனைவியாக்கும்!



**குடும்ப அகராதி:**

அ... தமிழ்க் குழந்தைகள் முதன் முதலாக விளையாட்டாகக் கூடச் சொல்லிக் கொள்ளாத எழுத்து. அவை இப்போது 'குவா, குவா' 'பா! பா! பிளாக்ஷீப்' என்று கத்திக்கொண்டே பிறக்கின்றன.

அடியே: ஸ்திரீகளை ஆடுமாடுகளாகவும், பண்ட மாற்றுச் சாமான்களாகவும் கருதி வந்த காலத்தில் அவர்களைக் கூப்பிட உபயோகித்து வந்த இந்த வார்த்தை சில குடும்பங்களில் இன்னும் உபயோகப்பட்டு வருவது.

க் க் க்

**அப்பளம்**




தமிழன் கண்டு பிடித்தது. இட்டிலியின் ஒன்று விட்ட சகோதரன். கிராமங்களில், ஸ்திரீகள் அப்பளம் இடும் போது தொந்தரவு இல்லாதிருப்பதற்காக வென்றே குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதுண்டு.

சில தாய்மார்கள் அப்பளம் காய்வதைப் பார்த்துக் கொள்வதற்காகப் பிள்ளை பெண்களைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாதிருப்பதுமுண்டு. சில ஸ்திரீகள் அப்பள உருண்டையை உருட்ட ஆரம்பித்ததுமே மழை பெய்ய ஆரம்பித்து விடுமாம். வடக்கத்தியார்கள் இடது கையால் தின்பதற்காக என்றே ஏற்பட்ட தின்பண்டம் அப்பளம்: இப்போதெல்லாம் குடும்பங்களில் அப்பளம் இட்டுக் கொண்டு தொந்தரவுபடுவதில்லை. சுத்தமாகவும், அவசரமாகவும் மடியாகவும் நாயன்மார்கள், அதுதான் மலையாளத்து நாயர்கள் — தயாரித்து வீட்டில் கொண்டு வந்து கொடுத்து விடுகிறார்கள்.



**கண்டுபிடியுங்கள்:**

- சின்னஞ் சிறு குழந்தைகளுக்குப் பால் புகட்டும் புதிய விதமான 'பீடிங் பாட்டில்கள்' பெரிய அளவில்தான் வந்திருக்கின்றன. சுமார் நான்கு அவுன்ஸ் பிடிக்கக் கூடிய சிறிய அளவு பாட்டில்கள் வேண்டும்.
- இத்தாலிய சிப்பாய்கள் பக்கத்தில் வந்தாலே எதிரிகள் ஓடிப் போய் விடுவார்கள் என்று சொல்வதுண்டு. அவர்களிடமிருந்து வீசும் உள்ளிப் பூண்டு நாற்றத்துக்குப் பயந்து அப்படி ஓடுவார்களாம். பூண்டு மிக நல்ல மருந்துச் சரக்கு. அதில் உள்ள நாற்றத்தை ஓரளவாவது குறைக்கச் செய்யும் ஏதாவது ஒரு மாற்று கண்டுபிடிக்க வேண்டும்.



**அழகுக் குறிப்பு**

சாதாரணமாகப் பெண்களுக்கு நல்ல பருவ காலத்தில் முகத்தில் பருக்கள் தோன்றுவது உண்டு. இதற்கு,

| | | |
|---|---|---|
| கிளிஸரின் | 1 | அவுன்ஸ் |
| படிகாரத் தண்ணீர் | 1 | .. |
| பன்னீர் | 1 | .. |



மூன்றையும் வாங்கி ஒரு சீசாவில் போட்டு வைத்துக் கொள்ளவும். கிளிஸரின் எந்த மருந்துக் கடையிலும் கிடைக்கும்.

படுத்துக் கொள்ளப் போகுமுன் இந்த லோஷனை நன்றாகக் குலுக்கி விட்டு முகத்தில் ததும்பத் தடவவும். இரவு அது அப்படியே முகத்தில் ஊறிக் கொண்டிருக்கும். காலையில் கொஞ்சம் நெய்யைத் தடவிக் கொண்டு சில நிமிஷங்கள் ஊறும்படி இருக்க வேணும். பிறகு பயத்தம் மாவைத் தேய்த்துக் கழுவி விடவும். இது மாதிரி மூன்று நான்கு வாரங்கள் செய்து வந்தால் பருக்கள் மறைந்து விடும். தோலும் பட்டுப் போல் மிருதுவாக இருக்கும்.



# பொன் விலங்கு

## மணிவண்ணன்

### முப்பத்தொன்றாவது அத்தியாயம்

அன்று பகல் மூன்று மணி சுமாருக்குத் தேர்தல் ஏற்பாடுகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்த போது கல்லூரி ஊழியன், சத்தியமூர்த்தியிடம் அவன் தந்தை மதுரையிலிருந்து எழுதியிருந்த கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்திருந்தான். அப்போதிருந்த பரபரப்பில் கடிதம் எங்கிருந்து வந்திருக்கிறது என்று பார்த்து விட்டுச் சட்டைப் பைக்குள் வைத்துக் கொள்ளத்தான் முடிந்ததே தவிர, அதைப் பிரித்துப் படிப்பதற்கு நேரம் இல்லை. மாணவர் யூனியன் தேர்தலில் பதிவான வாக்குச் சீட்டுக்களை எண்ணி முடிவையும் அறிவித்து விட்டுச் சத்தியமூர்த்தி அறைக்குத் திரும்பும்போது சிறிது தொலைவு வரை கல்லூரி லைப்ரேரியன் ஜார்ஜும் பேசிக் கொண்டே கூட நடந்து வந்தார். ஜார்ஜ் விடைபெற்றுக் கொண்டு சென்றபின் அறைக்குப் போய்ச் சட்டையைக் கழற்றிய போது தந்தையின் கடிதம் நினைவு வந்தது சத்தியமூர்த்திக்கு. உறையைக் கிழித்துக் கடிதத்தைப் படிக்கலானான். அப்பாவின் வழக்கப்படி பிள்ளையார் சுழி — 'முருகன் துணை'க்குக் கீழே கடிதம் ஆரம்பமாயிற்று.



சங்கிலி பின்னியது போல் எழுத்துக்களைச் சேர்த்துச் சேர்த்து நீட்டி இழுத்து எழுதப்பட்ட கூட்டெழுத்துக்களால் நான்கு பக்கத்துக்கு ஏதேதோ வளர்த்து எழுதியிருந்தார் அப்பா. 'சிரஞ்சீவி சத்தியத்துக்கு அநேக ஆசிகளுடன்'— கடிதம் தொடங்கியிருந்தது. 'கண்ணாயிரம் பரம உபகாரியாயிருக்கிறார். வீட்டு மாடியை இடித்துக் கட்டுவதற்கு நகர சபை அனுமதி விரைவில் கிடைக்குமோ, கிடைக்காதோ என்று தயங்கிக் கொண்டிருந்தேன். கண்ணாயிரம் யாரோ அவருக்குத் தெரிந்த மனிதர் மூலம் நகர சபையில் உள்ள ஒருவருக்குக் கடிதம் வாங்கிக் கொடுத்தார். அந்தக் காரியத்தினால் காரியம் சுலபமாக முடிந்து விட்டது. கொத்தனார்கள் இரண்டு நாட்களாக மாடியை இடித்துக் கொண்டிருக்கிறார்கள். கட்டட வேலைகளுக்காக நிறைய 'சிமிண்ட்' தேவையாயிருக்கிறது. 'சிமிண்ட்' கண்ட்ரோல் விலைக்குக் கிடைப்பதற்குச் சிரமப்படும் போல் இருக்கிறது. அதற்கும் கண்ணாயிரத்தைத்தான் நம்பியிருக்கிறேன். அவரிடம் சொல்லித்தான் ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். நீ சென்ற மாதம் நூற்று இருபது ரூபாய் மணியார்டர் இங்கே அனுப்பியிருந்தாய். வருகிற மாதத்திலிருந்தாவது கட்டாயம் நூற்றைம்பது ரூபாய்க்குக் குறையாமல் ஊருக்கு அனுப்புவதற்கு முயற்சி செய். கண்ணாயிரத்திடம் ஏற்கனவே வாங்கியிருக்கும் கடன் கட்டட வேலைகளுக்குப் போதாதென்று தோன்றுகிறது. மூத்தவள் ஆண்டாளுக்குக் கலியாணம் முடித்து விடவேண்டும் என்று வேறு உன் அம்மா அவசரப்படுத்துகிறாள். எதைச் செய்வதற்குத்தான் அவசரப்படுவது என்று எனக்குத் தெரியவில்லை. எல்லாவற்றுக்கும் கை நிறையப் பணத்தை வைத்துக் கொண்டு அலைந்தாலொழிய

ஒரு காரியமும் ஆகாது. வீட்டை இப்போது இடித்துக் கட்டுகிற வேலையை நான் தொடங்கியது நல்லதாயிற்று. இல்லாவிட்டால் இன்னும் இரண்டு மூன்று மாதத்தில் மாடி இடிந்து தலையில் விழுந்து விடும். மாடிச் சுவரை இடித்த மேஸ்திரியே இதைச் சொன்னான். 'நல்ல சமயத்தில் மராமத்து செய்கிறீர்கள். இன்னும் கொஞ்சநாளில் விழுந்து விடும்' என்று அவன் சொன்னதை நீ நேரில் பார்த்தாலும் அப்படியே ஒப்புக் கொண்டாக வேண்டியிருக்கும். நாற்பது வருடங்கள் பள்ளிக்கூட வாத்தியாராக வாழ்நாளைக் கழித்தவனின் குடும்பமும் அந்தக் குடும்பத்தின் எதிர்காலமும் எவ்வளவுக்குச் செழிப்பின்றி வறண்டு போயிருக்கும் என்பதற்கு நானே ஓர் உதாரணமாகி விட்டேனடா சத்தியம்! என் கண் காண நீயும் அதே வாத்தியார் உத்தியோகத்துக்குப் போயிருக்கிறாய். காலேஜில் வாத்தியார் உத்தியோகத்துக்குப் போயிருக்கிறாய் என்று வேண்டுமானால் கொஞ்சம் பெருமைப்படலாம். மாதம் முதல் தேதி பிறந்ததும் நூற்றைம்பது ரூபாய் எனக்கு அனுப்பி விட்டால் மீதமிருக்கிற சம்பளப்பணத்தில் நீ வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிக் காலம் தள்ள வேண்டியிருக்கும். அதை நினைத்தாலும் வேதனையாகத்தான் இருக்கிறது. கண்ணாயிரத்திடம் இன்னும் ஐயாயிரம் ரூபாய் கடனுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இந்த வீட்டின் மேலேயே அடமானமாகப் புதிய கடனையும் தர முயல்வதாக அவர் வாக்குக் கொடுத்திருக்கிறார். மஞ்சள்பட்டி ஜமீன்தாரும் அவ்வப்போது இங்கே வந்து மதுரையில் தங்குகிற காலங்களில் சந்திப்பதற்குச் சென்றால் என்னிடம் பிரியமாகவே நடந்து கொள்கிறார். பணமும், செல்வாக்கும் உள்ள நாலு பெரிய மனிதர்களைப் பழக்கிக் கொண்டால்தான் இந்தக் காலத்தில் எந்தக் காரியத்தையும் தடையில்லாமல் சாதிக்க முடிகிறது. 'டியூஷன்'களையும் ஒவ்வொன்றாக விட்டு விட்டேன். நேரமில்லாததுதான் காரணம். விடிந்து எழுந்திருந்தால் கொத்து வேலைகளை மேற்பார்க்கவும், சிமெண்ட்டுக்கும், செங்கல்லுக்கும் அலையவும்தான் சரியாயிருக்கிறது. மாடியிலும், முன் பக்கத்துப் 'போர்ஷனி'லும் மராமத்து வேலை நடப்பதால் ஒண்டுக் குடித்தனம் இருந்த இரண்டு பேரையும் காலி செய்து அனுப்பியாயிற்று. அதனால் வாடகை வருமானமும் இன்னும் நான்கைந்து மாதங்களுக்குக் கிடையாது. கட்டடம் முடிந்து நிறைவேறிய பின் மறுபடி குடித்தனக்காரர்களை வாடகைக்கு வைக்கலாமா அல்லது வாசல் பக்கமாக — வீட்டுக்குள் வராமலே ஏறி இறங்க வசதியாக மாடிப்படி கட்டிக் கொடுத்து ஏதாவது ஆபீசுக்கு விட்டு விடலாமா என்று யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன். 'நீர் மட்டும் நான் கொடுக்கிற 'பிளானை' அநுசரித்துக் கட்டுவதாயிருந்தால் நம் 'மூன் லைட் அட்வர்டைஸிங் ஏஜன்ஸீஸ்' காரியாலயத்தையே உம்முடைய மாடிக்கு மாற்றி விடலாம்' என்று கண்ணாயிரம் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறார். அவரால் நல்ல வாடகை கொடுக்கவும் முடியும். தாராளமாகச் செலவழிக்கிற கைராசிக்காரர். நமக்கும் படிப்படியாகக் கடன் கழிந்து போகும்....'

கடிதத்தில் இந்த இடத்தைப் படித்தபோது 'அப்பா கண்ணாயிரத்தை நம்பி மோசம் போய் விடப் போகிறாரே' என்று வருத்தமாக இருந்தது. அதே சமயத்தில் அப்பாவுக்கும் தனக்குமிடையில் ஒன்றைப் பற்றிச் சிந்திப்பதிலும், தீர்மானம் செய்வதிலும் ஒரு தலைமுறைக் கால அளவு வித்தியாசம் இருப்பதையும் அவனால் உணர





துள்ளி
விளையாடும்
பொழுதோ



ஒய்வு பெறும்
பொழுதோ...
அவர்கள்
எப்பொழுதும்
வளர்ந்து
கொண்டே
இருக்கிறார்
கள்!



# கல்ஸாண்டு-டி

வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்

முடிந்தது. இன்று இந்த நாட்டில் மேலெழுந்து நிற்கும் பல சமூகப் பிரச்னைகளுக்குக் காரணமே ஒரு தலைமுறைக்கு முந்திய மனிதர்களுக்கும் இந்தத் தலைமுறையினருக்கும் நடுவேயுள்ள சிந்தனைப் போராட்டம்தான். ஒரு விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பதிலும், தீர்மானம் செய்வதிலுமே சென்ற தலைமுறைக்கும், இந்தத் தலைமுறைக்கும் உள்ள அடிப்படை வேறுபாடுகள் ஏராளமாயிருக்கின்றன. மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், கண்ணுறு பிராமம் அப்பாவின் கண்களுக்கும், சிந்தனைக்கும் பெரிய மனிதர்களாகத் தோன்றுகிறார்கள். நானும் குமாரப்பனுமோ இதே ஜமீன்தாரையும் கண்ணுறு பிராமத்தையும் எல்லா விதத்திலும் குறைபாடுடைய சமூகத்தின் கள்ளர்களாக நினைக்கிறோம்' என்று எண்ணியபடியே தந்தையின் கடிதத்தின் மீதமுள்ள பகுதியைப் படிக்கலானான் அவன்.

...வரவர உன் அம்மாவுக்கு உடம்பு தள்ளவில்லை. பல நாட்கள் ஒரு வேலையும் செய்ய முடியாமல் சோர்ந்து படுத்து விடுகிறாள். வீட்டுக் காரியங்களை உன் தங்கைகள்தான் ஓடியாடிச் செய்ய வேண்டியிருக்கிறது. எனக்கும் முன்பு மாதிரி உடம்பில் தெம்பாயில்லை. இரண்டு நாள் மாடிக்கு ஏறி இறங்கினாலே மூச்சு வாங்குகிறது. இப்படித் தளர்ச்சி இதற்கு முன்னால் எப்போதும் இருந்ததில்லை. ஏதோ காலம் போய்க்கொண்டிருக்கிறது. வந்து திரும்புவதற்குப் பிரயாணச் செலவு விரயமாகும். இல்லாவிட்டால் இரண்டு மூன்று நாள் சேர்ந்தாற் போல் விடுமுறை வருகிற சமயமாகப் பார்த்து நீ ஒரு தரம் ஊருக்கு வந்து போகலாம். உன் அம்மாவுக்கும் உன்னைப் பார்க்க வேணும் போலிருக்கிறதாம். முடியுமானால் வந்து போக முயற்சி செய். கல்லூரியில் கூடுமானவரை மற்றவர்களை அனுசரித்துக் கொண்டு பழகு. யாரிடமாவது ஏதாவது கடுமையாகப் பேசிப் பகைத்துக் கொள்ளாதே. உன் குணம் தெரிந்து தான் உனக்கு இதை எழுதுகிறேன்.... இந்த உபதேசத்துடன் கடிதத்தை முடித்திருந்தார் அப்பா. யாரோ மாடிப் படி ஏறி மேலே அறைக்கு வருகிற ஓசை கேட்டது. சத்தியமூர்த்தி திரும்பிப் பார்த்தான். தாவர இயல் விரிவுரையாளர் கந்தரேசன் விடுமுறை எடுத்துக்கொண்டு ஊருக்குப் போயிருந்தவர் திரும்பி வந்து கொண்டிருந்தார். பத்து நிமிஷங்கள் அவரை நலம் விசாரிப்பதிலும் அவரோடு பேசுவதிலும் கழிந்தன. சத்தியமூர்த்தி முகம் கை கால் கழுவிக்கொண்டு இரவு உணவுக்காகப் புறப்பட்டபோது, "நானும் கூட வருகிறேன் சார்!" என்று கந்தரேசனும் புறப்பட்டார். சாப்பாடு முடிந்து அறைக்குத் திரும்பிக்கொண்டிருந்தபோது, "ஒரு நல்ல ஆங்கிலப் படம் நடக்கிறது. போய்விட்டு வரலாமே" என்று கந்தரேசன் வற்புறுத்தினார். "ஊரிலிருந்து வந்திருக்கிறீர்கள். பிரயாணக் களைப்பு வேறு இருக்கும். தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு எதற்காகப் படத்துக்குப் போகவேண்டும் என்கிறீர்கள்?" என்று சத்தியமூர்த்தி மறுத்தும் அவர் பிடிவாதமாகப் படத்துக்குப் போக வேண்டும் என்றார். "அந்தப் படம் இன்றைக்குத்தான் கடைசி நாள். நாளைக்கு வேறு படம் வந்து விடுகிறது சார். 'இம்பீரியல் ரோம் பீரியட்' அடிமைகள் கொடுமைப்படுத்தப் பெற்றதையும் அந்த அடிமைகளின் கூட்டத்திலிருந்து கிளர்ந்தெழுந்த வீரன் ஒருவன் அரச வம்சத்துப் பெண்ணைக் காதலிப்பதைப் பற்றியும் வருகிற கதை. பிரமாதமாக எடுத்திருக்கிறார்கள். ஆங்கில வரலாற்றுப் படங்களிலேயே இப்படி ஒரு படம் இதுவரை வந்ததில்லை




யாம். ஒன்றரை நாள் இரயிலிலும் பஸ்ஸிலுமாகப் பயணம் செய்து வந்த அலுப்பு இருந்தாலும் இன்றைக்கு இந்தப் படத்தைப் பார்க்காமல் தவற விட்டு விட்டேனானால் அப்படித் தவற விட்டு விட்டேன் என்ற ஏக்கத்திலேயே நாளைக்கு இதை விட அதிக அலுப்பாக இருக்கும் எனக்கு" என்று பக்குவமடையாத சிறு பிள்ளை மனத்தோடு வற்புறுத்தினார் கந்தரேசன். சத்தியமூர்த்திக்கு முரண்டு பிடித்துப் பழக்கமில்லை. பிறரைத் தனக்காக அளவு கடந்து வற்புறுத்துவதும் சத்தியமூர்த்திக்குப் பிடிக்காது. பிறர் தன்னிடம் வேண்டுகோளோடு நிற்கும் போது அந்த வேண்டுகோளுக்கு எளியவனாகவும் தான் பிறரிடம் வேண்டுகோளுடன் போய் நிற்பதே அருமையாகவும் வாய்க்கும்படி பழக்கப்படுத்திக் கொண்டிருந்தான் அவன். இப்போது கந்தரேசன் வற்புறுத்தித் தொடர்ப்படுத்துக்கு மறுக்க வேளையிலும் அவன் அப்படியே நடந்து கொள்ள நேர்ந்தது.

"உங்கள் விருப்பத்தைத்தான் கெடுப்பானேன்? போகலாம்; வாருங்கள்'' என்று அவரோடு திரைப்படத்துக்குப் புறப்பட்டான் சத்தியமூர்த்தி.

மல்லிகைப் பந்தல் நகரில் இருந்த இரண்டு மூன்று முக்கியமான திரைப்படக் கொட்டகைகளும் அந்த 'லேக் சர்க்கிள்' பகுதியிலேயே இருந்தன. அங்குள்ள தியேட்டர்களில் சிறந்ததும் வழக்கமாக ஆங்கிலப் படங்கள் மட்டுமே நடைபெறக் கூடியதுமாகிய 'புளூஹில் பாரடைஸில்' நுழைந்தனர் இருவரும். சுந்தரேசனுடன் இடையிடையே பேசிக் கொண்டே பல வண்ணப் படமாகவும் பல்சுவைக் காவியமாகவும் எடுக்கப்பட்டிருந்த அந்தத் திரை ஓவியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோதும் கூடத் தந்தையின் கடிதமும் அந்தக் கடிதத்தில் நிரம்பியிருந்த வீட்டுக் கஷ்டங்களைப் பற்றிய செய்திகளும் தாயின் உடல்நலக் குறைவுபோ சத்தியமூர்த்தியின் மனத்தில் அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தன. இரும்பு இதயம் படைத்த பிரபுக்களின் கொடுங்கோன்மையில் சிக்கிக் கண்களும் உடம்பும் இரத்தம் சிந்திடத் தவிக்கும் அடிமைகளின் அவல வாழ்க்கையைத் திரையில் மிக நன்முகச் சித்திரித்திருந்தார்கள். "ஒரு தலைமுறையின் சரித்திரம் பின்னும் வருகிற மற்றொரு தலைமுறைக்குக் காவியமாகி விடுகிறது. பார்த்தீர்களா? எதையும் கலையழகுபடச் சித்திரிக்க முடியுமானால் மனிதர்கள் கொடுமையில் வாடித் துன்பப்படுவதைக்கூடக் கலையழகுபடச் சித்திரிக்க முடியும் என்பதை இந்தப் படத்தில் நிரூபித்து விட்டார்கள்'' என்று திரைக் காட்சி முடிந்து வெளியே வந்தபோது சுந்தரேசன் உற்சாக மிகுதியில் ஆர்வம் பொங்கச் சொல்லிக்கொண்டே வந்தார். பூபதியும் அவர் மகளும்கூட அன்று அந்தத் திரைப்படத்துக்கு வந்திருக்கிறார்கள் என்று தெரிந்தது. காட்சி முடிந்து, சத்தியமூர்த்தியும் சுந்தரேசனும் தியேட்டருக்கு வெளியே கார்களைப் 'பார்க்' செய்திருந்த பகுதியைக் கடந்து நடந்து கொண்டிருந்தபோது பூபதியும் அவர் மகளும் காரில் புறப்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். போகிற போக்கில் பாரதியின் பார்வை ஒரு கணம் சத்தியமூர்த்தியின்மேல் தயங்கிவிட்டு விலகியது. அப்படி விலகும்போது கடுமையோடும், அலட்சியமாகவும் விலகுவது போல் தோன்றியது சத்தியமூர்த்திக்கு. சத்தியமூர்த்தியின் பார்வை சென்ற திசையை ஒட்டிச் சுந்தரேசனின் கண்களும் திரும்பின. "நம்முடைய காலேஜ் கரஸ்பாண்டெண்டும் அவர் பெண்ணும்கூட இந்தப் படத்துக்கு வந்துவிட்டுப் போகிறாங்க போலிருக்கே....'' என்று வியந்தாற்போல் சத்தியமூர்த்தியின் காதருகே கூறினார் சுந்தரேசன். "ஆமாம்! நானும் பார்த்தேன்'' என்று சுவாரஸ்யம் இல்லாமல் அவருக்குப் பதில் கூறினான் சத்தியமூர்த்தி. அறைக்குத் திரும்பும்போது குளிர் கடுமையாக இருந்தது. மூக்கை விடும்போது மூக்குத் துவாரங்களின் வழியே புகை வருவது போல் தெரிய அங்கும் இங்குமாக இருந்துப் போர்த்தியபடி விரைந்து கொண்டிருந்தார்கள் மனிதர்கள்.

"அடுத்த மாதச் சம்பளத்திலாவது நீங்களும் நானும் ஆளுக்கொரு 'ஸ்வெட்டர்' வாங்கிவிட வேண்டும். இல்லாவிட்டால் இந்த ஊர்க் குளிரில் காலம் தள்ளுவது சிரமமாக இருக்கும் போலிருக்கு சார்...'' என்று சுந்தரேசன் பேச்சுப் போக்கில் ஞாபகப்படுத்தினார். 'அடுத்த மாதத்திலிருந்துதான் அப்பா நூற்றைம்பது ரூபாய்க்குக் குறையாமல் அனுப்ப வேண்டும் என்று எழுதியிருக்கிறார். ஸ்வெட்டர் வாங்குவதற்குப் பணத்துக்கு எங்கே போவது?' என்று மனம் நினைத்து வருந்தத் தொடங்கிய அதே வேளையில் "நீங்கள் விரைவில் உங்களுடைய உபயோகத்துக்காக ஒரு ஸ்வெட்டர் வாங்கிக் கொள்ளுங்கள் சுந்தரேசன்! எனக்கு இப்போது அவசரமில்லை'' என்று வாயினால் நாகரிகமாகப் பதில் சொல்லித் தன் வறுமையை மறைத்துக் கொண்டான் சத்தியமூர்த்தி.

அறைக்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்தபோது சத்தியமூர்த்திக்காக அவனே முற்றிலும் எதிர்பாராத ஆச்சரியம் அங்கே காத்திருந்தது. மாடிப்படி ஏறுகிற வழியில் ராயல் பேக்கரி வாசல் வராந்தாவில் பெட்டி — பை ஹோல்டால் சகிதம் குமரப்பன் வந்து காத்துக் கொண்டிருந்தான். பிரயாணத்தினால் கலைந்து முன் நெற்றியில் வந்து சுருண்டு நுனியாகச் சரிந்திருந்த 'கிராப்' அந்த முகத்தின் குறும்புத்தனத்தை அதிகமாக்கிக் காண்பித்துக் கொண்டிருந்தது.

"என்னப்பா இது; சொல்லாமல் கொள்ளாமல் நடு இரவில் திடுதிப்பென்று வந்து சேர்ந்திருக்கிறாய்? குத்துவிளக்கில் வெளியாகும் கார்ட்டூன்களும் நகைச்சுவைப் படங்களும்தான் வியப்பும் அதிர்ச்சியும் தரக் கூடியவைகளாயிருக்குமென்றால் அவைகளை வரைகிறவருடைய காரியங்கள் அவற்றை விட அதிர்ச்சி தரக் கூடியவையாயிருக்கிறதே?'' என்று சத்தியமூர்த்தி வினவவும், "மல்லிகைப் பந்தலையும் உன்னையும் தேடிக் கொண்டு வருகிறவர்க

சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று புறப்பட்டு வரக்கூடாது என்று யாராவது நிபந்தனை விதித்திருக்கிறார்களா சத்தியம்? ஏதோ.. தோன்றியது. மூட்டையைக் கட்டிக் கொண்டு புறப்பட்டு வந்துவிட்டேன். இப்படித் திடீரென்று வரக்கூடாதென்று நீ கருதுவதாயிருந்தால் காலையில் முதல் பஸ்ஸுக்குத் திரும்பிப் போய் விடட்டுமா?''

அந்த அர்த்த ராத்திரி வேளையிலும் தன்னுடைய இயற்கைக் குணமான குறும்பும் கேலியும் சிறிதுகூடக் குறையாமல் 'நான்தான் குமரப்பன் வந்திருக்கிறேன்' என்று தான் வந்திருப்பதைத் . தன் பேச்சினாலும், சிரிப்பினாலுமே நிரூபித்துக் கொண்டு நின்றான் குமரப்பன். சுந்தரேசனுக்கும் குமரப்பனுக்கும் அறிமுகம் செய்து வைத்தான் சத்தியமூர்த்தி. ''பாடனி படித்தவரா? ரொம்பப் பொருத்தமான ஊருக்குத்தான் வந்திருக்கிறீர்கள். ஒன்றும் பொழுது போகவில்லையானால் ஏதாவது இலையைக் கிள்ளியோ, செடியை முறித்தோ ஆராய்ச்சி பண்ணிக்கொண்டிருக்கலாம். இலைகளுக்கும் செடிகளுக்கும் பஞ்சமில்லாத ஊராச்சே இது?'' என்று சந்தித்த முதல் விநாடியிலேயே உரிமையோடு சுந்தரேசனிடம் கேலியில் இறங்கி விட்டான் குமரப்பன். 'மனிதர்களுக்குள்ளே நான் கேலியும் கிண்டலும் செய்ய முடியாத அதிக உயரத்தில் இருப்பவர்கள் யாரும் கிடையாது' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு விட்டாற்போன்ற அசகாய சூரத்தனத்தோடு பழகுவான் குமரப்பன். இந்தச் சூரத்தனத்தைக் கண்டு பல முறை தனக்குள் மலைத்துப் போயிருக்கிறான் சத்தியமூர்த்தி. சில அறுந்த வாலான குழந்தைகளுக்கு வேற்று முகமே தெரியாது. எவரிடமும் கலகலப்பாக நெருங்கிப் பழகும். அப்படிப்பட்ட குழந்தைகளின் சுறுசுறுப்பிலும் குறுகுறுப்பான பழக்க வழக்கங்களிலும் காணலாம். குமரப்பனும் அத்தகைய சுபாவமுள்ளவன்தான். அவனுடைய குறும்புத்தனத்தில் வஞ்சகம் கிடையாது. குமரப்பனுடைய மூட்டை முடிச்சுக்களை அவனும் சத்தியமூர்த்தியுமாக ஆளுக்குப் பாதியாகப் பிரித்துச் சுமந்துகொண்டு மாடிப் படி ஏறிய போது, ''என்னடா பழி! இரண்டு இரண்டரை மணி நேரம் ஓர் உண்மை நண்பனை இப்படி இந்தக் குளிரில் காத்துக் கிடக்கும்படி செய்துவிட்டாயே! இது நியாயமா உனக்கு? பாடனி சார்! நீங்களே சொல்லுங்கள்; நான் வருகிற இன்றைக்கென்று இவன் சினிமாவுக்குப் போவது?'' என்று சத்தியமூர்த்தியைக் கேட்டுவிட்டுச் சுந்தரேசன் பக்கமாகத் திரும்பி அவரையும் வம்புக்கு இழுத்தான் குமரப்பன்.

''என்ன கார்ட்டூனிஸ்ட் அவர்களே! இப்படித் திடீரென்று இங்கே புறப்பட்டு வந்துவிட்டீர்களே; வருகிற வாரம் குத்துவிளக்கில் தங்கள் கார்ட்டூன்களைக் காண முடியுமோ இல்லையோ?'' — சத்தியமூர்த்தியின் இந்தக் கேள்விக்குக் குமரப்பன் கூறிய பதில் விநோதமாக இருந்தது.

''கார்ட்டூன் போட்டுக் கொடுத்து விட்டுத்தான் வந்திருக்கிறேனடா சத்தியம்! அது ரொம்பவும் சுவாரஸ்யமான கார்ட்டூனாகவும் இருக்கும். ஆனால் அந்தக் கார்ட்டூனைக் குத்துவிளக்கில் பிரசுரிப்பார்களா என்பதுதான் சந்தேகமாயிருக்கிறது!''

''ஏன் அப்படி?...''

''இத்தனை சுலபமாக உன் கேள்விக்குப் பதில் சொல்லிவிட முடியாது, அப்பனே! இன்றைக்கு 'ஸ்கெட்ச்' மட்டும்தான் கொடுக்க முடியும். எல்லாம் நாளைக் காலையில் விவரமாகச் சொல்கிறேன்....'' என்று கூறிக்கொண்டே ஹோல்டாலை விரித்துப் படுக்கையைப் போடத் தொடங்கியிருந்தான் குமரப்பன்.

(தொடரும்)



சருமப்
பராமரிப்புக்குத்
தகுந்த
ஏற்பாடு
அவசியம்...
அதற்குகந்தவை

**'ஹேஸலின்'**
**அழகு**
**சாதனங்கள்**

**ஸ்னோ * கோல்ட் க்ரீம் * டால்க்**

உங்கள் சருமத்துக்குத் தனிப்பட்ட அழகும் பராமரிப்பு தரும் மூன்று வகை நறுமண அழகுப் பொருள்கள்.

- "'ஹேஸலின்' ஸ்னோ"—மேனியெழிலுக்கு மெருகூட்டி, சருமத்தைப் பாதுகாக்கிறது.
- 'ஹேஸலின்' கோல்ட் க்ரீம் ஊடுருவிச் சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்போடும், கட்டுத் தளரா இளமையுடனும் இருக்கச் செய்கிறது.
- 'ஹேஸலின்' டால்க் நறுமணமுள்ள மென்மையான பவுடர் – பூசிக்கொண்டால்...ஆகா! என்ன குளுமை! என்ன புதுமை! என்ன புது மணம்!







பர்ரோஸ் வெல்கம் தயாரிப்புக்கள்

SWT-10-TAM.

# பிராஸோவினால் மெருகிடுங்கள்



மங்கலான பித்தளைச் சாமான் உங்கள் அறையின்
சோபையைக் கெடுத்துவிடும். தவறாமல் பிராஸோவைக்
கொண்டு தேய்த்துவந்தால், பித்தளைச் சாமான்
பளபளப்புடனிருக்கும். உபயோகிக்க சுலபமான
பிராஸோ சிக்கனமானதும் கூட.

## உங்கள் பித்தளைச் சாமான்களை பிராஸோவினால்

## வாரத்திற்கு ஒரு முறை ஒவ்வொரு வாரமும் மெருகிடுங்கள்




அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

JWT/BR 5649

BR 3

# ஜலதோஷம், ஜுரம் போன்ற உணர்ச்சி இவைகளிலிருந்து

ஜலதோஷம் ஜுரம் ஆகியவைகளின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே 'ஆஸ்ப்ரோ'வை உட்கொள்ளுங்கள். தலைவலி, பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட 'ஆஸ்ப்ரோ'வின் அபாயமற்ற செயல்திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'விலுள்ள தீவிர சக்திப்பொருள் மற்றெதையும்விட அபாயமில்லாமல் வலியைப் போக்குகிறது என மருத்துவ வாக்கில் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஒரு தரமான மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்கு அரிய நிவாரணமளிக்க வைத்தியர்களால் இலக்ஷோபலக்ஷம் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே, நீண்ட நாள் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது. 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலிநிவாரணி. எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## துரிதமாகவும் பூர்ணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ




'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்க







## 'ஆஸ்ப்ரோ'

## எவ்வகையிலும்

## அபாயமற்றது — சிறந்த

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு

R.G. 152. TAM

தேவைகளையும் மிகவும் திருப்திகரமாக இவ்விரு மொழிகள் அல்லது இவ்விரண்டில் ஒன்று—நிறைவேற்றி வருகின்றன. இந்நிலையில் அவசிய மில்லாததும், தவிர்க்கக் கூடியதுமான மூன்றாவது மொழி ஒன்றைக் கற்க வேண்டும் என்று ஒரு மாணவனை வற்புறுத்தினால் அது அநியாயமேயாகும். இந்த மூன்றாவது மொழி அவனுக்குத் தேவையில்லை. ஹிந்தி பேசும் மக்க ளுடைய பேராசைகளைத் தணிப்பதுதான் இதன் பலன். மொழிச் சட் டத்துக்கு உட்படும் தென்னிந்தியன் தன்னை நிரந்தரமாக நாட்டின் இரண் டாந்தரப் பிரஜை என்ற ஸ்தானத்துக்குத் தாழ்த்திக் கொள்கிறான். இரண் டாயிரம் ஆண்டுகள் சரித்திரப் புகழ் பெற்ற இனிய தமிழ் மொழியின் இணை யற்ற வரலாற்றுப் பெருமையை உணர்ந்த எந்தத் தமிழனும் மற்றொரு இந் திய மொழிக்கு, குறிப்பாக ஹிந்தி மொழிக்குத் தன்னை அடிமைப்படுத்திக் கொள்ளும் அவமானத்துக்கும் அநீதிக்கும் ஆளாக ஒப்பவே மாட்டான்.




# ஹிந்தி நிர்வாகமொழியாக வெற்றி பெறுமா?

என். முருகேச முதலியார்



**இக்கட்டுரையாசிரியர் திரு என். முருகேச முதலியார் அவர்கள் சென்னை ராஜ்யத்தில் உயர் உத்தியோகஸ்தராக முன்னூட்களின் சிறப்புப் பணியாற்றி, முப்பது ஆண்டுகளுக்கு மேல் நிர்வாகத்தின் அநுபவமுடையவர். அரசியல் வாதமின்றி நிர்வாக அடிப்படையிலிருந்தே ஹிந்தியினால் ஏற்படக் கூடிய கஷ்டங்களைத் தெளிவாக எடுத்து விளக்குகிறார். ஆங்கிலம் இருப்பது அசம்பாவிதம் எனில், ஆங்கிலத்தை நீக்குவது ஆயிரம் அசம்பாவிதம் நேருமென எச்சரிக்கிறார்.**

நல்ல நிர்வாகம் நாட்டுக்கு மிகத் தேவையாக இருக்கிறது. அலுவ லகங்களில் காரியங்கள் நல்ல முறையில் நடைபெறுகின்றனவா, அதிகாரிகள் சோம்பல், ஊழல்களின்றி மக்கள் நலனையே கருத்தாகக் கொண்டு செய லாற்றுகிறார்களா, அவ்விதம் செயல்பட அரசியல் கூற்றுகளோ, தலையீடு களோ, வேண்டாத மாறுதல்களோ இடர்ப்பாடுகளாய் உள்ளனவா என் பதை முக்கியமாய்க் கவனிக்க வேண்டும். நல்ல நிர்வாகத்தின் வலிவு கொண்டே அரசியல் திட்டங்கள் நிறைவேறும். புது மாறுதல்களைப் புகுத்தும் போது இந்த அடிப்படையை மறக்கலாகாது.

நிர்வாக சீர்மையில் ஆர்வமும்

நிர்வாகத்தைத் தூய்மைப்படுத்தவும், திறம்படுத்தவும் உடனடி யாகச் செய்ய வேண்டிய வேலைகள் பல உள்ளன. அவைகளை அரசாங்கம் ஓரளவு கவனித்து வருகிறது. அரசாங்கமும் மக்களும் நிர்வாகம் இன்று இருக்கிற நிலையை விடக் குறைவுபடாமல் பாதுகாக்கக் கடமைப்பட்ட வர்களாக இருக்கிறார்கள். இந்தியா விடுதலை அடைந்தபோது ஆங்கிலே யர்கள் விட்டு விட்டுப் போன நிர்வாகம் கூடியமட்டில் நல்ல நிலையில் இருந்தது என்பது யாவரும் அறிவார்கள். ஆனால் சுதந்திரத்துக்கு முன் அரசாங்கம் எடுத்துக் கொண்ட க்ஷேமநல வேலைகள் இப்போது போல் அவ்வளவு அதிகமில்லை. ஆனால் எடுத்த காரியங்கள் திருத்தமாகவும் கூடிய மட்டில் ஊழல்கள் இன்றியும் நடந்து வந்தன. அப்போது நிர்வாக மொழி ஆங்கிலமாக இருந்தது. ஆனால் நிர்வாகிகள் ஆங்கிலேயர்களாக இருந்தா லும் சரி, இந்தியர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் வேலை பார்க்கும் ராஜ்யத்திலுள்ள இரண்டு தேசிய மொழிகளைக் கற்று அரசாங்கம் நடத்தும் பரீக்ஷைகளில் தேர்வு பெற்றிருக்க வேண்டும் என்ற கட்டுப்பாட்டுக்கு கட்டுப்பட்டவர்களாக இருந்தார்கள். பல்வேறு மாகாணங்களில் பல்வேறு மொழிகள் வழங்கி வந்தாலும், ஆங்கிலம் நிர்வாகமொழியாக இருந்ததால் அது ஒருமைப்பாட்டை நிலைநாட்டியது. மக்கள் தொடர்புக்கு அதிகாரிகள் மாகாண மொழிகளை அறிந்திருந்தார்கள். இது நிர்வாகத்தில் ஓர் ஒழுங் கைத் தந்தது.

சுதந்திரம் பெற்ற பின் வேற்று மொழி நிர்வாக மொழியாக இருத் தலாகாது என்ற நோக்கத்தில் ஹிந்தியை ஆட்சி மொழியாக்க வேண்டும் என்று அரசியல் நிர்ணயச் சட்டத்தில் ஆணை ஏற்பட்டிருக்கிறது. 1965ம் ஆண்டில் கட்டாயமாக ஹிந்தியை மத்திய அரசாங்க மொழியாக்க வேண்டு



மென்பதை இப்போது சிறிது தளர்த்தியுள்ளார்கள். தங்கள் ஒப்புதல் இன்றி இந்தி அமுலுக்கு வராது என்று இந்தி பேசாத ராஜ்ய மக்கள் பிரதம மந்திரி முன்பு தந்த வாக்குறுதியை நம்பியிருந்தார்கள். அது எவ்வாறாயினும் இந்தி நிர்வாக மொழியாவதற்குத் தகுதி பெற்றதா? அப்படி அது கட்டாயமாகத் திணிக்கப்பட்டால் நிர்வாகத்துக்கு நல்லதுதானா. எந்த அளவுக்கு இந்திக்குத் தேசிய மொழி என்ற முறையில் மதிப்புத் தரவேண்டும் என்பதை அரசியல் வாதத்தில் அல்லது நிர்வாக அடிப்படையில் தீர்க்கமாக யாரும் சிந்தித்திருப்பதாகத் தெரியவில்லை. லோக சபை அங்கத்தினர்கள் அடங்கிய 'கமிஷன்' 1959ம் ஆண்டில் விடுத்த அறிக்கையிலும் இதைச் செவ்வையாக ஆராயவில்லை. ஓர் அரசியல் தத்துவத்தை நிர்வாகத் துறையில் புகுத்தும்போது அதனால் விளையும் கஷ்டங்களையும் வேண்டாத சிக்கல்களையும் கவனித்தல் விவேகமாகும்.

**சரித்திரத்தின் படிப்பினை**

நிர்வாகத்தில் மொழி மாற்ற சம்பவங்களை நம் நாட்டின் சரித்திரத்திலிருந்தே பின்னோக்கிப் பார்த்தால் சில பயன்தரும் படிப்பினைகள் கிடைக்கும். முகலாயர்கள் பாரசீக மொழியைக் கட்டாயமாக நிர்வாகத்தில் புகுத்தவில்லை. மான்சப்தார்கள் என்ற அதிகாரிகளே பாரசீகம் கற்றிருந்தார்கள். மற்ற அதிகார வர்க்கம் நாட்டு மொழியில்தான் ஆட்சி நடத்தி வந்தது. சில பாரசீக வார்த்தைகள் மட்டும் நிர்வாகத் துறையில் வழக்குக்கு வந்தன. ஆட்சியாளர்களின் மொழி அந்த மட்டில்தான் புகுந்தது. பின் ஆங்கிலேயர்கள் நம் நாட்டில் ஆதிக்கம் பெற்றபோது, ஆங்கிலத்தைக் கட்டாய ஆட்சி மொழியாகப் புகுத்தவில்லை. முதலில் கல்வித் திட்டத்தில் ஆங்கிலத்தைப் புகுத்தினார்கள். அது அந்தக் காலத்தில் இந்தியர்களால் பல காரணங்களுக்காக வரவேற்கவும் பட்டது. இந்தியா முழுதும் கல்வித் திட்டத்தில் ஆங்கிலம் இடம் பெற்றதாலும், போதனை மொழியாக ஆக்கப்பட்டதாலும், ஆங்கிலம் கற்ற இந்தியர்கள் அரசாங்க வேலையில் பெருவாரியாக அமர்ந்ததாலும் ஆங்கிலம் நிர்வாக மொழியாக நிலைபெறுவதற்கு அனுகூலமாக இருந்தது. ஆங்கிலேயர்கள் கட்டாயப்படுத்தி ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக்கவில்லை. ஆங்கிலம் ஆட்சி மொழியாவதற்குப் பல ஆண்டுகள் ஆயின. நிர்வாகத்தில் சில துறைகள் மாகாண மொழியிலும் ஆங்கிலத்தில் சில கணக்குகளும் ரிகார்டுகளும் கடிதப் போக்குவரத்தும் நடந்து வந்தன.

**ஆங்கிலத்தின் தனி வாய்ப்பு**

ஆங்கிலம் இந்தியர் யாவருக்கும் பொது மொழியானதால் மாகாண மொழிகள் ஆட்சி மொழியாவதற்குத் தம்மிடையே போட்டியிடவில்லை. ஆங்கிலத்துக்கு அமைந்த வாய்ப்பு இந்தியாவில் இனி எந்த மொழிக்கும் வராது. அது உலக மொழியானதால் நிர்வாகத்தைப் பொறுத்தமட்டில் அது பயனுள்ளதாகவே இருந்து வந்தது.

நாடு முழுவதும் இந்தியைக் கல்வித் திட்டத்தில் புகுத்தினாலன்றி அந்த மொழி அகில இந்திய நிர்வாக மொழியாக ஆவதற்கு வாய்ப்பில்லை என்பது பற்றின்றிச் சிந்திப்பவர்களுக்குப் புலனாகும். ஆனால் இந்தி எல்லா மாகாணங்களிலும் கல்வித் திட்டத்தில் கட்டாய மொழியாகவோ போதனா மொழியாகவோ, அல்லது மாகாண ஆட்சி மொழியாகவோ, அமைவதற்கு வாய்ப்பில்லை. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் ஒவ்வொரு ராஜ்யமும் தத்தம் ஆட்சிமொழியை ஏற்படுத்திக் கொள்ளலாம் என்ற உரிமை தரப்பட்டுள்ளது. எனவே இந்தி பேசப்படும் ராஜ்யங்களைத் தவிர்த்து வேறு ராஜ்யங்களில் கல்வித் திட்டத்தில் இந்தி ஓர் இரண்டாம் மொழியாகவேதான் இடம் பெறும். இந்தி பேசப்படாத ராஜ்யங்களில் மக்கள் இந்திக்கு முக்கியத்துவம் தர விரும்ப மாட்டார்கள். அது நியாயமே. இதன் விளைவு என்ன? மத்திய அரசாங்கத்தில் இந்தி பேசாத ராஜ்ய மக்கள் நியாயமான அளவு பங்கேற்றுக்கொள்ளும் உரிமையும் வாய்ப்பும் இல்லாமல் போய்விடும். இந்தி ஆட்சி மொழியானால் இந்தி பேசப்படும் ராஜ்யங்கள் மற்ற ராஜ்யங்களைவிட அதிக சௌகரியமான நிலையில் இருக்கும். இந்த வேற்றுமை அரசியல் நிர்ணயச் சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கும் சமஉரிமைக் கொள்கைக்கு மாறுபாடாக இருக்கும். மத்திய அரசாங்க அலுவலகங்களில் இந்தியைப் பேசுவோரோ, கட்டாய வசத்தாலோ அறிந்தவர்களோ அதிக இடமும் செல்வாக்கும் அடைவார்கள்.

**நிர்வாகக் குறிக்கோள் பாதிக்கப்படும்**

நிர்வாகத்தில் இந்தி பேசுவோரின் ஆதிக்கத்தைப் பெருக்கிக் கொள்வர். அனுபவம்பெற்ற வயதான அதிகாரிகளும் இந்த இந்திமொழியினால் இடர்ப்பாடு உறுவார்கள். இந்தி மொழியில் எழுத்து விவகாரங்கள் நடந்தால் அவர்கள் காலமும், புத்தி நுட்பமும் வீணாகிப் போய்விடும். அவர்கள் ஊக்கத்தை இழப்பார்கள். இன்னும் மத்திய அரசாங்கக் கீழ்க்காரியாலயங்களில் டில்லி அதிகாரிகளுக்கு இந்தியில் கடிதப் போக்குவரத்து செய்ய வேண்டியதும் இராஜ்ய பார்லிமெண்டுகளுடன் அவர்கள் நியமித்துள்ள பிரதேச ஆட்சி மொழியில் விவகாரங்கள் நடத்தவும் நேரும். இது வேலையை வளர்க்கும் ஏற்பாடாக முடிந்துவிடும். இப்படி இனி இன்னல்களுற்ற நிர்வாகம் முக்கிய குறிக்கோளை இழந்து மொழி மன்றாடலாக முடிந்து விடும்.



சின்னத்தை படியுங்கள்







**சிக்கனத்தை சிந்தியுங்கள்**

எப்பொழுதும் போலியற்ற அசல்

**மைகோ** பில்டர் இன்ஸர்ட்ஸை

உங்கள் டீஸல் என்ஜினுக்கு

உபயோகியுங்கள்

**மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கோ. லிட்.,**

**பெங்களூர்**

41, குவீன்ஸ்ரோடு, பம்பாய்-2. 91-A, பார்க் தெரு, கல்கத்தா-16.
7/155, மவுண்ட்ரோடு, மதராஸ்-2,
காஸியாபாத் என்ஜினியரிங் கம்பெனி, 44, ஜன்பத், புதுடில்லி-1.

இன்னும் சொல் முறையில் பல விளக்கங்கள் ஏற்படும். அதைப் பற்றிச் சிறிய விவாதம் இதுவரை நடந்ததாகத் தெரியவில்லை. ஹிந்தி நிர்வாக மொழியாக இருந்தால் சட்ட திட்டப் புத்தகங்களை யெல்லாம் ஹிந்தியில் மொழி பெயர்த்தாக வேண்டும். இத்துறையில் இப்போதுள்ள நூல்கள் லட்சம் பக்கங்கள் அளவில் இருக்குமாம். இவைகளை யெல்லாம் மொழி பெயர்ப்பதற்குப் பணச் செலவும் சிப்பந்திகள் பெருக்கமும் அதிகமாகி விடும். அலுவலர்களின் வேலை சட்ட திட்டங்களை எதிர்ப்படும் விவகாரங்களுக்குப் பொருள்படுத்தி முடிவுக்குக் கொண்டு வருவது. இதற்குச் சட்ட திட்டங்கள் தெளிவாக எழுதப்பட்டிருக்க வேண்டியது அவசியமாகும். குறிப்பு எழுதுபவர்களும் உத்தரவு போடுபவர்களும் அந்த மொழியில் தெளிவாக எழுதக் கூடியவர்களாக இருக்க வேண்டும். இவ்வியல் விபரீதங்களின் முடிவுகளாம். ஹிந்தி மொழி தன்னளவில் இயல்பிலேயே தெளிவான மொழியல்ல என்று அறிந்தவர்கள் கருதுகிறார்கள். பீகார் பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள் ஒருவிதமான ஹிந்தியைக் கையாளுகிறார்கள். உத்தரப் பிரதேசத்தார் ஹிந்தி வேறு விதமாக இருக்கும். இம்மாதிரி வேறுபாடுகள் பல இருக்கும். ஓர் அலுவலகத்தில் ஒரே மொழியில் பலவிதமான வேறுபாடுகள் இருந்தால் அலுவலக வேலை எந்தக் கதியாகும் என்று சொல்லாமலே விளங்கும். இன்னும் ஹிந்தி தெரியாதவர்கள் வேறு இருப்பார்கள். அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய குறிப்புக்களை ஹிந்தியில் மொழிபெயர்க்க வேண்டும். இவை எல்லாம் அர்த்தமில்லாத அனாவசியமான வேலைகள். மொழி விளையாட்டில் அரசாங்க வேலைகள் விரைவாகப் பைசலாகா. நிர்வாகம் ஏற்கனவே உள்ளதைவிடத் தாமதமாகி விடும். மேலும் தட்டெழுத்து மிஷின்கள் புதிதாக வாங்க வேண்டிய நிலை ஏற்படும். இதற்கு ஏராளமான பணச் செலவு ஆகும். இது வரி செலுத்துபவர்களின் தலையில் பாரத்தை அதிகமாக்கும்.

**மொழிபெயர்ப்பு சாத்தியமா ?**

**அர்த்தமில்லை : அவசியமுமில்லை**

சுதந்திர இந்தியாவில் தேசிய மொழியை ஓரளவுக்கு ஆட்சி மொழியாக வைப்பது நியாயமே, விரும்பத் தக்கதே. ஆனால் முன் பின் யோசனை இன்றி அவசரமாகத் திணிப்பது பல இன்னல்களை விளைவிக்கும். நாணயம், நோட்டு, செலுட்டு, பட்டங்கள் முதலியவைகளுக்கு ஹிந்தி மொழியை உபயோகப்படுத்தினால் யாரையும் பாதிக்காது. அதை எதிர்ப்பதும் அர்த்தமில்லை. ஆனால் ஆங்கிலமே வேண்டாம் என்பது செயல் முறையில் ஆகக் கூடாத காரியம். ஐம்பது ஆண்டுகளானாலும் ஹிந்தி அலுவலகங்களில் கையாளப்படும் என்று நம்புபவர்கள் பலாத்காரத்தில் நம்பிக்கையுள்ளவர்களாக இருக்க வேண்டும்; அல்லது நிர்வாகத்தைப் பற்றி அறியாதவர்களாக இருக்க வேண்டும். ஆங்கிலத்தையே தொடர்ந்து கையாளுவதில் தேசிய உணர்ச்சிக்கு ஒரு தாழ்வும் இல்லை. பலாத்காரம் உபயோகித்தால் ஹிந்தி பேசாத ராஜ்யங்களில் உள்ள மக்களுக்கு அநீதியை விளைவிக்கும். ஹிந்தி பேசும் ராஜ்யங்களிலுள்ள மக்களுக்குச் சலுகை அதிகம் ஏற்பட்டு விடும். இந்த ஏற்றத் தாழ்வு நல்ல அரசியல் தத்துவத்துக்கு முரணானது. ஹிந்திக்காரர்களே அதிகார வர்க்கத்தினர்களாக ஆகிவிடுவார்கள் என்று பயப்படுவதில் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதை உணர்வது நீதியே. இந்தப் பயத்தை நீக்குவதற்கு ஆங்கிலம் இரண்டாவது நிர்வாக மொழி என்று சட்டத்தை மாற்றுவதில் குற்றமில்லை. வேற்று மொழியை அப்படி ஊர்ஜிதப்படுத்துவது அசம்பாவிதம் என்று சிலர் நினைக்கிறார்கள். அது மேல் நோக்கில் சரி என்று தோன்றலாம். ஆனால் செயல் முறை வாதிகள் வேறு விதமாக எண்ணலாம். ஆயிரம் அசம்பாவிதங்களை உதறித் தள்ள ஓர் அசம்பாவிதத்தை மேற்கொள்ளுதல் அவிவேகமாகாது.

**பலாத்காரமா, அறியாமையா ?**

ஆட்சிமொழிப் பிரச்னையைப் பொது நிர்வாக சாத்திரத் துணிபுகளின் அடிப்படையிலிருந்தே விவாதிப்பது நன்று. அரசியல் வாதத்தை அதிகமாகப் புகுத்துவதால் உண்மை புலனாகாது. இந்தக் கட்டுரை நிர்வாக அடிப்படையிலிருந்தே எழுதப்பட்டது.

# பட்டிக் காட்டான்!



**ப**ஸ் ஸ்டாண்டில் ஏகக் கூட்டம். நொண்டிப் பிச்சைக்காரன் ஒருவன் தட்டுத் தடுமாறி ஒரு பஸ்ஸுக்குள் ஏறினான். ஏறியவன் கையில் இருந்த கத்தை நோட்டீஸ்களை விநியோகிக்க ஆரம்பித்தான்.

''நான்சென்ஸ்!'' என்று வெறுப்பைக் கொட்டி, உடம்பைக் குலுக்கி உதறிக் கொண்டு உட்கார்ந்தார் சூட்டும், டையும், தொப்பியும் அணிந்திருந்த ஓர் இளைஞர். 'ஏதாவது விபத்தில் நொண்டியானோமாக என்று எங்காவது நோட்டீஸ் அடித்துக் கொண்டு விடுகிறார்கள். பிச்சை கேட்க, புது டெக்னிக்...' நோட்டீஸை வாங்கவும் மறுத்து விட்டார்.

பக்கத்தில் ஒரு நாட்டுப்புறத்தான் உட்கார்ந்திருந்தான். ''தலையில் பெரிதாக முகத்தையும் மறைக்கும்படி தலைப்பாகை மட்டும் கட்டிக் கொண்டு வந்து விடுகிறார்கள், சுத்த கண்ட்ரி. இதே துணியில் ஒழுங்காக இடுப்பின் ஆடையும் ஒரு சட்டையும் போட்டுக்கொண்டு வந்தால் என்ன?'' என்று தமக்குள் நொந்து கொண்டார் அந்த நாகரிகச் சீமான், பெரிய சமூகச் சீர்திருத்தவாதியாக மாறி. வாட்டி வதைக்கும் வெயில் நேரத்தில் கோட்டு, 'டை' இவையல்லவா சரியான உடை நாகரிகச் சின்னம்!

பட்டிக்காட்டான் நோட்டீஸை வாங்கினான். ''இல்லிடரேட் இடியட், நோட்டீஸைத் தலைகீழாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. என்னைக்குத்தான் இதுங்களெல்லாம் நாலு எழுத்துத் தெரிந்து கொள்ளுமோ...?''

நாட்டுப்புறத்தான் மடியில் கட்டியிருந்த பையை அவிழ்த்து, ஜாக்கிரதையாக நாணயங்களை எண்ணி, ஒரு ஐந்து நயா பைசாவை எடுத்து அந்த நொண்டியின் கையில் போட்டான். நொண்டி நாகரிகச் சீமானைப் பார்த்தான். அவருக்குக் கோபம் வந்து விட்டது மூக்குக்கு மேலே. ''போ, போ. ஏய், கண்டக்டர் இவன்களையெல்லாம் ஏன் வண்டிக்குள் விடுகிறாய்?'' சீறினார் செந்நாகமாக.

பட்டிக்காட்டான் பைக்குள் துழாவினான். காய்ந்து சருகான இரண்டு வெற்றிலையை எடுத்தான். சிறிது புகையிலையைக் கிள்ளினான். அவன் வாயில் செந்நிறம் குதம்பியது. ''சே, சே. இந்தக் கூலிக்கு என்ன காட்டுமிராண்டிப் பழக்கம்? கொஞ்சம் ஏமாந்தால் மேலே துப்பி விடுவான். இந்தக் கிராமத்தான்களுக்கு நாகரிகமே கிடையாது. கண்ட இடத்தில் போட வேண்டியது; துப்ப வேண்டியது.''

கோட்டுப் பைக்குள் கையை விட்டுச் சிகரெட் 'கேஸை' எடுத்தார். சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்து நாட்டுப்புறத்தான் பக்கமாக ஊதித் தள்ளினார்.

''சார், சார்! பஸ்ஸில் புகை பிடிக்கக்கூடாது; வண்டி புறப்படப் போகிறது—அங்கே எழுதியிருக்கிறதைப் பாருங்கள் சார்'' கண்டக்டரின் குரல். பாதி சிகரெட் துண்டு வெளியே பறந்தது.

**ப**ஸ் மதுரைப்பட்டி வந்தது. அவர் பெட்டி படுக்கையோடு இறங்கினார். அவனும் வண்டியை விட்டு இறங்கினான்.

''சாமானை எடுத்து வரட்டுங்களா?'' என்றான்.

''நாலணா தருகிறேன்'' என்றார் நாகரிக மனிதர். அவன் பேரம்-கீரம் பேசவில்லை. பேசாமல் நாகரிகச் சீமானின் பெட்டி படுக்கையைத் தூக்கிக் கொண்டான்.

வீடு சேர்ந்ததும் சாமானைக் கீழே வைத்தான். தலைப்பாகையை அவிழ்த்தான். அவர் நாலணாவை எடுத்தார். அவன் கைநீட்டவில்லை. வியப்பில் மூழ்கிய நாகரிகச் சீமான் பட்டிக்காட்டானைப் பார்த்தான். ''அப்பா...நீங்களா?'' அவனையும் மீறிக் கேள்வி பிறந்தது.

''ஆமாம், தம்பி! நீ வந்து சேரும் வரை பொறுத்திருக்க முடியாமல், எதிரிலேயே கல்லுப்பட்டி வரை வந்து பார்த்துக் கூட்டி வரலாம் என்று புறப்பட்டு வந்தேன். உன்னைப் பார்த்ததும் 'உன்னை யார் வரச் சொன்னது' என்று சண்டை பிடிப்பாயோ என்று எனக்கும் பயம். அதனால்தான் என்னை யாரென்று காட்டிக் கொள்ளாமல் சும்மா உன்னைப் பார்த்துக்கிட்டே வந்து விட்டேன்'' என்றார் தந்தை.

ஆமாம், அந்த இளைஞரின் கோட்டுக்கும் டைக்கும் பணம் அனுப்பிக் கொண்டிருந்த ஏழைத் தகப்பன்தான் அந்தப் பட்டிக்காட்டான். அவருக்கு எப்படி இருக்கும்?



கரன்

# சிரிக்கத் தெரிந்தவர்

## ஜி.எஸ். பாலகிருஷ்ணன்

சில வருஷங்களுக்கு முன் சிரிக்கத் தெரிந்த ஒரு சந்நியாசியை நான் சந்திக்க நேர்ந்தது. வேடிக்கை வேடிக்கையாக உரையாடி வேதாந்தத்தை எனக்கு விளக்கினார் அவர். யோகிகளுக்கான பரிபாஷையில் அவர் பேசவில்லை; வார்த்தைகளை வைத்துக் கொண்டு வர்ண ஜாலங்களோ, வாண வேடிக்கைகளோ செய்யவில்லை. சின்னக் குழந்தைகளுக்குக் கூடப் புரியும் 'காந்திய நடை'யில் தம் கருத்துக்களைக் கனிவொடு வெளியிட்டார். சிரிக்கச் சிரிக்கப் பேசியே என் சிந்தனையைத் தூண்டினார். அவருடைய வேதாந்த போதனை உண்மையில் என்னைப் பெரு வியப்பிலாழ்த்தியது. உயர்ந்த கருத்துக்களை எளிய முறையில் எடுத்துச் சொல்வது சுலபமான காரியமா? இந்த வித்தையைப் புரிந்தவர் சுவாமி சிவானந்தர்.

சுவாமிஜியிடம் ஒரு நாள் அவருடைய ஆங்கில நடையை மெச்சினேன். ''நீங்கள் பேசும் வேதாந்தம் எனக்கு வேப்பங்காயாக இல்லை. காரணம், உங்களுடைய எளிய நடை. ஆனால் மற்ற வேதாந்திகளோ அகராதியிலில்லாத வார்த்தைகளையெல்லாம் பிரயோகித்து என் மூளையைக் குழப்புகிறார்கள்'' என்றேன். சுவாமிஜி ஒரு கணம் மௌனம் சாதித்தபின் பின்வருமாறு கூறினார்: ''இதோ பார், கங்கையின் பிரவாகத்தை! ஒருவருடைய நடை கங்கையின் பிரவாகத்தைப் போலிருக்க வேண்டும். நீ ஆங்கில இலக்கியத்தில் பட்டம் பெற்றவன். உன்னைப் போல் நான் முறையாக ஆங்கிலம் பயிலாவிட்டாலும், எனக்கும் கொஞ்சம் ஆங்கிலம் தெரியும் என்று வைத்துக் கொள்ளேன். ஸாமர்செட் மாம் (Somerset Maugham) என்ற எழுத்தாளரின் புத்தகங்களை நீ படித்திருப்பாய். மகரிஷி ரமணரை அவர் சந்தித்தது குறித்து ஒரு கட்டுரை எழுதியிருக்காரே, படித்தாயோ? அதைப் படித்து முடித்தவுடன் எனக்கு அவர் எழுதும் ஆங்கில நடையின் மீது ஒரு மோகமே பிறந்து விட்டது.''

இன்னொரு தடவை சுவாமிஜியின் கையெழுத்தைப் புகழ்ந்து பேசினேன்.

''பூர்வாசிரமத்தில் நீங்கள் டாக்டராக இருந்தும்கூட உங்கள் கையெழுத்து நன்றாயிருக்கிறதே'' என்றேன்.

''நான் நல்ல டாக்டராக இருந்திருக்க மாட்டேன்! அதனால்தான் கையெழுத்து நன்றாயிருக்கிறது'' என்றார்.

ஆனால் அவர் நல்ல டாக்டரா, இல்லையா என்று தெரிந்துகொள்ளும் வாய்ப்பு கூடவே ஏற்பட்டு விட்டது. என்னை ஆசிரம ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார். அங்கு நாலைந்து நோயாளிகள் படுத்திருந்தார்கள். அவர்களில் ஒருவர் சுவாமிஜியிடம், ''நேற்று உங்களைத் தரிசித்ததிலேயே பாதி குணமாகி விட்டது'' என்றார்.

''இன்னொரு தடவையும் தரிசனம் தந்து உன்னை முழுவதும் குணப்படுத்தத்தானே வந்திருக்கிறேன்?'' என்றார் சுவாமிஜி.

நடக்க முடியாத பிராயத்தில்கூட, இரண்டு பேர் தோள் பற்றி, நோயாளிகளைப் பார்த்து ஆறுதல் சொல்லி வந்தார் அவர்.

சுவாமிஜியைத் தரிசிப்பதற்காக அனுதினமும் அநேகம் பக்தர்கள் வருவார்கள். இந்தியாவின் பல்வேறு பாகங்களிலிருந்து மட்டுமின்றி, அயல்நாடுகளிலிருந்தும் வருவார்கள். இதில் வியக்கத்தக்க விஷயம் யாதெனில், ஒரு தடவை பார்த்துப் பழகியவர்களை சுவாமிஜி மறக்கவே மாட்டார்.

அன்றொரு நாள் ஆசிரம வாசலில் நின்றபடி கங்கை நதியைப் பார்த்துப் பரவசமாகிக் கொண்டிருந்தேன். ஓர் அமெரிக்கப் பெண் அங்கு வந்து சேர்ந்தாள். ஆசிரமவாசி என்று கணித்துப் பேச்சுக் கொடுத்தேன்.

''மன அமைதியை நாடி நான் எங்கெங்கோ அலைந்தேன். எங்கள் ஊரிலிருக்கும் மனோதத்துவ நிபுணர்களுக்கு நான் தந்திருக்கும் பணத்துக்குக் கணக்கில்லை. எல்லாம் வீண். கடைசியில் இந்தியாவுக்கு வந்து அநேகம் ஆசிரமங்களுக்குச் சென்றேன். சுவாமி சிவானந்தரைப் பார்த்த பிறகு என்னிடம் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. அவரிடம் பழகப் பழக எனக்கு வாழ்வில் ஒரு பிடிப்பு ஏற்பட்டிருக்கிறது. ஏதோ பைத்தியக்காரி உளறுகிறாள் என்று எண்ணுகிறீர்கள்; இது முழுதும் நிஜம்'' என்றாள்.

என்னுடைய நண்பரின் மனைவியும் இதையே தான் திருப்பிச் சொல்லுகிறாள். மனோவியாதி முற்றியிருந்த அவருக்குச் சுவாமி சிவானந்தரின் தரிசனம்தான் மீண்டும் வாழ்வில் பற்றுதல் ஏற்பட வழிகாட்டியது. 'சித்தம் தெளிய மருந்தொன்றிருக்குது; அதற்குச் சிவானந்தா என்று பேர்' என்று பாடினதில் என்ன தவறு?

சிவானந்தா தமக்காக வாழவில்லை. பிறருக்காகவே வாழ்ந்தார். மக்களுக்குத் தொண்டாற்றுவதிலேயே தம் வாழ்நாள் முழுவதையும் கழித்தார். அவருடைய ஆசிரமத்தில் இருக்கும் கண் ஆஸ்பத்திரியில் ஏழைகளுக்கு இலவசமாக சேவை செய்யப்படுகிறது....

யாரோ இரண்டு நோயாளிகள் பேசிக்கொண்டு சென்றது என் காதில் விழுந்தது. 'டாக்டர் சிவானந்தா தங்கமான கைராசி படைத்தவர்' என்று. எனக்கு டாக்டர் சிவானந்தா யாரென்று தெரியாது. ஆனால் அவர் சுவாமி சிவானந்தரின் இலட்சியங்களை நடைமுறையில் நன்றாக நிறைவேற்றும் டாக்டர் என்று மட்டும் கணித்தேன். டாக்டர் சிவானந்தாவைப் போல எத்தனையோ நல்ல டாக்டர்கள் வாரிசாக இருப்பார்கள். அவர்கள், தொடர்ந்து மக்களுக்குச் சேவை செய்வார்கள் என்று எண்ணுவோமாக.

ரிஷிகேசத்தின் பெருமைக்கு இரண்டு காரணங்கள். ஒன்று அங்கு காட்சி தரும் கங்கைப் பாய்ச்சல்; இன்னொன்று சுவாமி சிவானந்தரின் ஆசிரமம்.

# மக்ளீன்ஸ் பற்களை வெண்மையாக்குகிறது என்பதற்கான ஆதாரம்

## 1 அதை உணருங்கள்

பற்களில் கறை படிந்திருக்கிறதா? அது இயற்கையான வெண்மையை மறைக்கிறது. இப்போது மக்ளீன்ஸ் கொண்டு பல்துலக்கி அது கறையை எவ்வாறு அகற்றுகிறது என்று உணருங்கள்.

## 2 அதை ருசியுங்கள்

நீங்கள் அனுபவிக்கும் அந்த குளுமையான ருசிக்குக் காரணம் மக்ளீன்ஸில் இருக்கும் 3 கலவைப் பொருள்களும் திறம்பட வேலை செய்வதால்தான். அவை பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கி பாதுகாக்கின்றன.

## 3 அதைப் பாருங்கள்

உங்கள் புன்முறுவலில் காணும் வெண்மையைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். உங்கள் பற்களை முன்பிருந்ததைவிட மக்ளீன்ஸ் பற்பசை இன்னமும் வெண்மையாக்குகிறது. . நீங்களே இதைப் பரீட்சித்துப் பாருங்கள்.

**வெண்மை யான பற்களுக்கு மக்ளீன்ஸ்**




MTP/1JP/1/63 TM A



நடிகர்: "தலைமிரேக்டர்களே, மாமுனிகளே, நல்லோர்களே, வல்லோர்களே, குடிமக்களே, மந்திரிப் பிரதானிகளே, சபையோர்களே! உங்கள் விருப்பப்படி இச்சிம்மாசனத்தில் அமர்ந்து முடிசூட நானும் விரும்புகிறேன். ஆனால்..."

"ஆனால் என்ன அரசே? ஏன் தயக்கம்?"

"இரண்டு மூன்று கால்களே இருப்பதால் தயங்குகிறேன்!"

---

காண்பதையொட்டி ஒருவனுடைய வயதில் 100ஐக் கூட்டிக் கொண்டால் கிடைக்கும் எண் அவனுக்குச் சுக நிலையில் இருக்கத்தக்க அழுத்தத்தைக் குறிக்கும் என்று மேல்நாட்டு வைத்திய சாஸ்திரம் தெரிவிக்கிறது. அதாவது ஒரு மனிதனுக்கு 40 வயது என்று வைத்துக்கொள்வோம். அவனுக்குச் சாதாரணமாக இருக்க வேண்டிய ஸிஸ்டாலிக் அழுத்தம் 140 ஆகும். ஒரு ஐந்து பத்து இப்படி அப்படி இருப்பதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்வதில்லை. டயஸ்டாலிக் அழுத்தம் ஸிஸ்டாலிக் அழுத்தத்தை விட 40 எண் குறைவாக இருக்கும். ஆகவே மேலே உதாரணத்துக்கு எடுத்துக்கொண்ட மனிதனுக்கு ஸிஸ்டாலிக் 140ம் டயஸ்டாலிக் 100மாக இருப்பது சகஜ நிலை.

இரத்த அழுத்தத்தின் அளவு கூடுதலாக இருப்பதாக அழுத்தமானி கொண்டு பரிசோதிக்கும் போது தெரிவதால் அந்த மனிதனுக்குத் தன் வயதுக்கு நியாயமாக இருக்க வேண்டியதை மீறி வியோதிகமும் அதனுடன் சம்பந்தப்பட்ட இதர நிலைகளும் பெற்றுள்ளான் என்பதுதானே அர்த்தம்? நாற்பது வயதானவனுக்கு 140க்குப் பதில் 170 இருக்குமானால் முப்பது வயதுக்குள்ள கிழத்தனம் அவனுக்கு அதிகரித்துள்ளது என்றல்லவா தெரியவேண்டும்? அவ்விதமே எழுபது வயதானவனுக்கு ரத்த அழுத்தம் 140 இருக்குமானால் அவனிடம் நாற்பது வயதானவனின் தேகாரோக்கியமிருப்பதாகவும் தெரியலாம். இது முற்றும் சரியல்லவாயினும் ஓரளவு இதில் உண்மை இருக்கிறது. வயதுக்கு அதிகமான அழுத்தமுள்ள நிலையை ஹை ப்ளட் ப்ரெஷர் — ரத்த அழுத்தம் அதிகமுள்ள நிலை — என்றும் குறைந்துள்ள நிலையை லோ ப்ளட் ப்ரெஷர் — குறைந்துள்ள ரத்த அழுத்தம் என்றும் சொல்வார்கள்.

ரத்த அழுத்தம் அதிகம் உள்ள நிலையில் மூளைக்கு ரத்தத்தைக் கொடுக்கும் மிக மிக நுண்ணிய ரத்தக் குழாய்கள் மூலம், இந்த அழுத்தம் சில கேந்திர ஸ்தானங்களில் இந்த உத்தலை உண்டாக்கும். இது ஓரளவுக்குட்பட்டிருக்குமானாலும் தலை சுற்றல் இருக்கும். தலை சுற்றலோடு நிற்கும். சற்று அதிகமானாலும் மார்பு படபடப்பு, மேல் மூச்சு, கீழ் மூச்சு, பலவீனம், கண்ணிருட்டல் என்றெல்லாம் வளர்ந்து நிலையும் தப்பிவிடக் கூடும்.

ரத்த அழுத்தம் குறைவாக இருக்குமானாலும், மூளையின் கேந்திர ஸ்தானங்களுக்குப் போதுமான ரத்தம் சென்று கொடுப்பதில்லையானதால் அந்தக் கேந்திர ஸ்தானங்களுக்குப் பலவீனமும், சோர்ந்திடும் நிறைவாக் குறைவும், தலை சுற்றலும் உண்டாகும்.

ஆகவே ரத்த அழுத்தம் காரணமாக ஏற்படும் தலை சுற்றல் அழுத்தம் அதிகமானதாலும் ஏற்படலாம்; அழுத்தம் குறைவதாலும் ஏற்படலாம்.

மனிதனுக்கு வயது ஆக ஆக ரத்த அழுத்தம் கூடிக் கொண்டு போவானேன்?

சுத்த ரத்தத்தைப் பாய்ச்சிடும் ரத்தக் குழாய்களுக்கு ரப்பர் குழாயைப்போல் ஓரளவு சுருங்கி விரியும் சக்தியுண்டு. இருதயத்தால் இக் குழாயில் ரத்தம் பீச்சப்படும் வேகத்தில் இக் குழாய் விரிந்து விரிவடைகிறது. ஆகவே ரத்தக் குழாயின் வழி விரிந்து பெரிதாகிறது. அக்காரணத்தால் இந்த உத்தலும் அதிகமாகத் தெரிவதில்லை. ரத்தத்தின் அழுத்தமும் ஓரளவோடு நிற்கும் வாய்ப்பு ஏற்படுகிறது.

வயது ஆக ஆக, சுண்ணாம்புச் சத்தின் இயல்பு பெற்ற சில தாதுப்பொருள்கள் ரத்தக் குழாய்களில் படிந்துவிடுகின்றன. இது இயற்கையின் போக்கு. இதன் காரணமாக ரத்தக் குழாய்களுக்குள்ள சுருங்கி விரியும் சக்தி குறைந்து விடுகிறது. ரத்தம் வேகமாகப் பீச்சப்படும்போது அந்த சக்தியைச் சமாளிக்கும் வகையில் ரத்தக் குழாய் விரிந்து — அகன்று கொடுக்கும் சக்தியற்றதாய் — முழு உத்தலையும் தானே ஏற்கிறது. அதனால்தான் ரத்த அழுத்தம் வயதையொட்டி அதிகரிப்பதற்கு வாய்ப்பு உண்டாகிறது.

அப்படி ஒருநாள் அதிகமாகும்போது அழுத்தத்தைத் தாள முடியாமல் ரத்தக் குழாய் வெடித்து விடக் கூடும். விளைவு விபரீதம்தான்!

ஆனால் குறைந்த அழுத்தமுள்ள நிலையில் இந்த விபரீதங்கள் ஏற்படாது. ஆனால் மனிதனுக்கு அவ்வப்போது ஊட்டம் தேவைப்படும். அயர்வைப் போக்கிக்கொள்ள முனைந்திடல் அவசியமாகும்.

இனி இவ்விரு வகை ரத்த அழுத்தங்களுக்கும் சிகிச்சையைச் சொன்னால் "தலை சுற்றல் மயக்கம்" என்ற விஷயம் முடிவுறுமே!

## இடுப்புப் பக்கவலி கோவிந்தனை வேலை செய்ய வொட்டாமல் தடுத்தது...

கோவிந்தன் சாதாரணமாகச் சுறுசுறுப்பாக வேலை செய்பவனாச்சே! இன்று என்ன வந்தது?

ஒரே இடுப்புப் பக்கவலி சார்! வேலை செய்யவே முடியலே.

இந்த ஸாரிடானை சாப்பிடு— இடுப்புப் பக்கவலி உடனே நீங்கும்!

கோவிந்தன் ஸாரிடான் சாப்பிடுகிறான்

பிறகு:
கோவிந்தனுக்கு இப்போ இடுப்புப் பக்கவலி இல்லவே இல்லே, பார்!

# ஸாரிடான் 'ரோஷ்'

### வலியைப் போக்குகிறது, ஆசுவாசப் படுத்துகிறது, புத்துணர்ச்சியூட்டுகிறது

ஸாரிடான் துரிதமாக, நிச்சயமாக, கெடுதல் எதுவுமின்றி, வலியைப் போக்குகிறது. உடல்வலி, தலைவலி, பல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, சாதாரண உடல் கோளாறுகள் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். பெரியவர்களுக்கு 1 வில்லை; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்




ஸாரிடான் ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 நயா பைசா

JWT. VT.-4796

# புதிய பெரிய டப்பாவில்
# கால்கேட் பேபி பவுடர்




அதிகப் பவுடர்...
அதிகச் சிக்கனம்...

புதிய சுலபமாக
அழுந்தும் மூடி !

குழந்தையின் நளினமான
சருமத்திற்கு இதமளிக்கிறது!



---

## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெய் அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- உபரி பாகங்கள் கிடைக்கும்




# நூதன் ஜனதா

மண்ணெண்ணெய் அடுப்பு

சுவையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள் :

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12

## அத்தியாயம் முப்பத்தொன்பது

# பழைய குருடன்

கீழே எறியப்பட்டுக் கிடந்த வில்வேலியின் உடைவாளையே வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்ற விநயாதித்தன் வெடுக்கென்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு மமதைச் செருக்கான குரலில் கர்ஜித்தான்: ''துரோகிகள்! கோழை நடுங்கிகள்! சளுக்கியக் கொற்றத்தின் உப்பைத் தின்று உடலை வளர்த்தவர்களெல்லாம் நட்டாற்றில் கைவிடும் நயவஞ்சகர்களாக மாறி விட்டார்கள்!''

உணர்ச்சியற்ற மரக்கட்டை போல் நின்று கொண்டிருந்த வில்வேலி புன்முறுவல் பூத்தார். அவருடைய வாழ்நாளிலேயே இன்றுதான் அவர் முகத்தில் இத்தகையதோர் அமைதிப் புன்னகை அரும்பியது.

ஆனால் விநயாதித்தனோ ஆத்திரக் குமுறலுடன் கடுகடுப்பாகப் பேசினான்: ''வெற்றிக்கு மேல் வெற்றி கிட்டிய போதெல்லாம் வாழ்த்துப் பாடி வலைய வந்தவர்கள் இந்த ஆபத்துக் காலத்திலே துணை நிற்க அஞ்சிப் பின் தங்கி விட்டார்கள்! போர்க்களத்துக்குப் போனால் எதிரியின் வாளுக்கு இரையாக நேரிடுமோ என்று பயந்து ஏதேதோ காரியங்களைச் செய்வதுபோல் போக்கு காட்டிக் கொண்டு பல்லவ புரத்திலேயே பதுங்கிக் கிடக்கிறார்கள்!''

முற்றும் துறந்த முனிவர் போல் அமைதியாக நின்றிருந்த வில்வேலி இதைக் கேட்டுச் சிறிதே சலனமுற்று நிமிர்ந்தார்.

விநயாதித்தன் மேலும் தன் குமுறல் பேச்சைத் தொடர்ந்தான்: ''கடமையை மறந்தவர்கள், கட்டுப்பாட்டை மீறியவர்கள், உயிரை வெல்லமென நினைத்து ஓடி ஒளியும் கோழைகள் — இவர்களையெல்லாம் நம்பி, சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மாபெரும் படைத் தளபதி பதவியையும் வேறு பல உயரிய பொறுப்புக்களையும் ஒப்படைத்ததுமல்லாமல், அவர்களது முட்டாள்தனமான யோசனைகளைக் கேட்டுப் பாண்டியருடன் பொருது கொள்ள முற்பட்டது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனமாகி விட்டது!''

வில்வேலியின் உடல் அதிர்ந்தது. முகம் தீக் குழம்பாகக் கனன்று சிவந்தது. சற்றுமுன் அவர் மனத்தில் ஏற்பட்டிருந்த நாணக் கசிவு அடைபட்டு மீண்டும் அது பாறையாக இறுகியது. பழைய வில்வேலியாக மாறிய அவர் தம் கையில் இருந்த காவி ஆடையும் மயிற் பீலியும் நழுவிக் கீழே விழுந்ததைக்கூடக் கவனியாமல் அவனையே வெறித்துப் பார்த்தார்.



விநயாதித்தன் தனது கரங்களை மேல் உயர்த்தி ஆட்டியவாறு, ''ஏ, சளுக்கிய நாடே! புகழ் மண்டிய உன் வீர மண்ணில் இப்படிப்பட்ட பேடிகளும், இப்படித் துரோகிகளும்கூடப் பிறப்பது உண்டா? வெட்கம்! வெட்கம்!'' என்று உரத்த குரலில் சொல்லி வாய் மூடு முன், சாட்டையடிபட்ட சிங்கம்போல் பயங்கரமாகத் தம் உடலைச் சிலிர்த்துக்கொண்டு நிமிர்ந்த வில்

# பத்தினிக் கோட்டம்

வேலி, ''என்ன சொன்னீர்கள் இளவரசே?'' என்று மூர்க்காவேசத்துடன் கர்ஜித்துக்கொண்டே துள்ளித் திமிறிப் பாய்ந்தோடிக் கீழே கிடந்த வாளைச் சடாரெனக் குனிந்து எடுத்து மின்னல் வட்டமாகச் சுழற்றியவாறு திரும்பினார்.

இதைக் கண்டு திடுக்குற்ற விநயாதித்தன் சட்டென்று பக்கவாட்டில் ஒதுங்கிப் போய் நின்று கொண்டு தணிந்த குரலில், ''....என்றெல்லாம் நான் சொல்லவில்லை, தளபதியாரே! தங்கள் வணக்கத்துக்குரிய சளுக்கிய மாமன்னர்தான் தங்களைப்பற்றி இவ்வாறு வருந்திப் பேசி இந்த வீரனை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்!'' — என்று விஷமச் சிரிப்புடன் குழைந்தான்.

கோபத்தால் எரிமலையாகக் குமுறிக் கொண்டு நின்ற வில்வேலி பேரதிர்ச்சியுற்றவராய்ப் பின்னால் நகர்ந்து, ''என்னைப் பற்றி மன்னர்பிரான் இப்படியா சொன்னார்?'' என்று பயப் பிராந்தியுடன் திணறிக் கேட்டார்.

''சந்தேகம் இருந்தால், இதோ போர்க் களத்திலிருந்து நேரே இங்கு வந்திருக்கும் இந்த வீரனையே கேட்டுப் பாருங்கள்!''

''உண்மைதான் ஐயா! நெல்வேலிப் போர் முனைக்குத் தாங்கள் இன்னும் வராதது பற்றி நம் பேரரசர் மிகவும் சினமுற்றிருக்கிறார்....'' என்று பயந்து குழறினான் சளுக்கிய வீரன்.

அவமானத்தால் உடல் குன்றி நின்ற வில்வேலி வேதனைப் பெருமூச்சுடன் தலை நிமிர்ந்து, ''ம்... சரி;



ஜெகசிற்பியன்

போர் நிலைமை இப்போது எப்படி இருக்கிறது? நம் சளுக்கியப் படைகள் பாண்டிய மண்ணில் எவ்வளவு தூரம் முன்னேறிச் சென்றிருக்கின்றன?'' என்று அடித் தொண்டையில் வினவினார்.

''பல்லவ நாட்டின் தெற்கு எல்லையை விட்டுப் புதுக்கோட்டை வரையில் பின்னடைந்து வந்திருக்கின்றன, நம் படைகள்.''

''என்ன! மாவீர விக்கிரமாதித்தர் நெல்வேலிப் போர்க்களத்தில் இறங்கிய பின்னுமா நமது படைகள் முன்னேற வில்லை?''

சட்டென்று குறுக்கிட்ட விநயாதித்தன், ''இந்த எதிர்பாராத பயங்கர நிலைமைக்கு என்ன காரணம் என்பதையும் கேளுங்கள், தளபதியாரே!'' என்றான் வெறுப்பும், முறைப்புமாக.

வில்வேலியைத் தயக்கத்துடன் பார்த்துக் கொண்டே நடுங்கும் குரலில் சொன்னான் சளுக்கிய வீரன்: ''நெல்வேலியில் நம் படைகள் போய் இறங்கியதுமே தாங்கள் வந்து தலைமை தாங்கிப் போரை ஆரம்பித்து நடத்துவீர்கள் என்று எண்ணி உறையூரிலேயே இருந்து விட்டார் நம் மன்னர்பிரான். தாங்களோ போர்ப் பிரகடனம் செய்து இரண்டு நாட்களாகியும் போர்முனைக்கு வரவில்லை. இதனை அறிந்த பாண்டியப் படைகள் எடுத்த எடுப்பிலேயே நம் மீது பலத்த தாக்குதலைத் தொடங்கின. தலைமை இல்லாமல் தாறுமாறாகப் போரிட முனைந்த நம் படைகள் எதிரியின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் சிதறிப் பின் வாங்க நேரிடவே, உறையூருக்குச் சேதி பறந்தது. மறு நாளே புயலெனப் பாய்ந்து வந்து போர்க்களத்தில் குதித்தார் நம் மாமன்னர். இதைக் கேள்விப்பட்ட பாண்டிய அரசர் நெடுமாறனும் புதிய படை பலத்துடன் போர்முனைக்கு வந்து சேர்ந்தார். போரின் உக்கிரம் உச்ச நிலையை அடைந்தது. நாம் எதிர்பார்த்ததுபோல் பாண்டியப் படைகள் அத்தனை பலவீனமாக இருக்கவில்லை. இதிலே இன்னோர் ஆச்சரியம் என்னவென்றால், பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் ஒரு பெருஞ்சேனையுடன் வந்து நம்மைத் தாக்கத் தொடங்கினான். அவனுடைய தலைமையில் ஆவேசமாகப் போரிட்டது பாண்டியப் படைகள் அல்ல, சோழியப் படைகள். இதனால் சளுக்கிய வீரர்கள் பெருத்த கலவரமடைந்து விட்டனர். மலை புரண்டாலும் மனம் கலங்காத நம் மன்னர் பிரானும் இந்த நிலைமையைக் கண்டு திகிலடைந்தார். எனவேதான், ஆதிக்கப் போராகத் தொடங்கியதைத் தற்காப்புப் போராக மாற்றிக் கொள்ள வேண்டிய கட்டாய நிலை நமக்கு ஏற்பட்டு விட்டது. இவ்வளவுக்கும் காரணம்.....''

''ஏனடா, பேச்சை நிறுத்தி விட்டாய்? 'இவ்வளவுக்கும் காரணம் தளபதி வில்வேலிதான் என்று சளுக்கிய மாமன்னர் குமுறிக் கொதிக்கிறார்' என்பதையும் சொல்லி நிறுத்து!'' என்றான் விநயாதித்தன் அதட்டலாக.

வெலவெலத்து நின்ற வில்வேலி அவனைப் பயங்கரமாக விழித்துப் பார்த்தார். பிறகு சடாரெனத் தலை தூக்கி, ''இளவரசே! தங்கள் தந்தையார்தான் இங்கு நடந்த விஷயங்களை அறியாமல் என்மீது குற்றம் சுமத்திப் பேசியிருக்கிறார் என்றால் நீங்களும் அவ்வாறே என்னை இழித்துப் பேசத் துணிந்து விட்டீர்கள்! சரி; நன்றாகப் பேசுங்கள். ஆனால் சளுக்கியக் கொற்றத்தின் உப்பைத் தின்று உடலை வளர்த்த நான் இன்றுவரை அதற்கு எள்ளளவு துரோகமும் செய்ததில்லை; இனியும் செய்யப் போவதில்லை. இதோ, இக்கணமே போர்முனைக்குப் புறப்படுகிறேன்!..... வாழ்க, மாமன்னர் விக்கிரமாதித்தர்! ஓங்குக, சளுக்கிய வீராக பதாகை!'' என்று கண்டம் வெடிப்பதுபோல் பிளிறிக் கொண்டே தம் வலக் கையை வீராவேசத்துடன் மேலுயர்த்தி ஆட்டினார். அப்படி முரட்டுத்தனமாகக் கையை ஆட்டியதால் அவருடைய வலது புஜத்தில் அரைகுறையாக ஆறி வடுவிட்டிருந்த சத்திக் குத்துக் காயம் வெடிப்புற்றுக் கிழிந்து இரத்தப் பெருக்கு எடுத்தது. வேதனை முனகலுடன் குனிந்த அவர், இடது கையால் உடைவாளின் பிடியை இறுகப் பற்றி அழுத்தியவாறு தள்ளாடித் தள்ளாடி வாயில் முகப்புக்கு வந்தார்.

இந்தச் சமயம், அங்கே வேர்க்க விறுவிறுக்க ஓடி வந்து வணங்கி நின்றான் சளுக்கியக் காவல் வீரனொருவன். அவனைப் பார்த்ததும் வில்லெனப் புடைத்து நிமிர்ந்த வில்வேலி, ''போன காரியம் என்ன ஆயிற்று? பிடித்துக் கொண்டு வந்தீர்களா, அந்தத் துரோகிப் பெண்ணை?'' என்று சீறிக் கேட்டார்.

''தளபதியாரின் ஆணைப்படி பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தை வளைத்துக்கொண்டு ஆந்திர இளவரசியையும் பல்லவ மன்னனையும் பிடிக்க முயன்றோம். ஆனால், பல்லவ மன்னர் தம் அரிவாரணத்தில் ஏறித் தப்பிச் சென்று விட்டார்....''

''அந்தக் குலத் துரோகிப் பெண்ணாவது கிடைத்தாளா? எங்கே அவள்?''

''சேதியக் கலைஞரின் இல்லத்தை நாங்கள் நாலாபுறமும் வளைத்துச் சூழ்ந்து சென்றபோது ஆந்திர இளவரசியார் அந்த இல்லத்தினுள் இருந்த

தைக் கண்டோம். பிறகு அவரைச் சிறைப் பிடிப்பதற்காகக் கதவுகளையும் சாளரங்களையும் உடைத்துக் கொண்டு உள்ளே சென்று பார்த்தபோது....''

''தற்கொலை செய்து மாண்டு கிடந்தாரா, என்ன?''

''இல்லை, ஐயா! அவர் எங்கோ மாயமாய் மறைந்து விட்டார்!''

''ஓ......ஆந்திர இளவரசிக்கு மந்திர தந்திரம்கூடத் தெரியுமா? சரி; நாளை மாலைக்குள் அந்தச் சேதிகக் கலைஞனின் இல்லத்தை இடித்துத் தரை மட்டமாக்குங்கள்! அவனுடைய மாய தந்திரம் என்ன ஆகிறதென்று பார்ப்போம்!''

சளுக்கிய வீரன் உடனே பெருவள நல்லூரை நோக்கி விரைந்தான்.

உபாதையால் தொங்கித் துவண்ட வலக் கையை அழுத்திப் பிடித்துக் கொண்டு சற்று நேரம் அப்படியே விறைத்து நின்ற விஸ்லேவி சட்டென்று திரும்பி, ''இளவரசே! தங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லி விட்டுப் போக விரும்புகிறேன். நம்மைப் பல வகையிலும் ஏமாற்றி அழித்தொழிக்க முயன்று வரும் அந்த நய வஞ்சகப் பழையாறைச் சோழன் விஷயத்தில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையோடு நடந்து கொள்ள வேண்டும். நம்மிடம் இங்கே எஞ்சியிருக்கும் படை வீரர்களை அனுப்பி அவனைப் பிடித்து வரும்படி பணித்திருக்கிறேன். அவன் பிடிபட்டு விட்டால் உடனே எனக்குச் சேதி சொல்லி அனுப்புங்கள். அவனுக்கு அளிக்க வேண்டிய தண்டனையை நானே நேரில் வந்து அளிப்பேன்'' என்று கைத்த குரலில் முணுமுணுத்துக் கொண்டே துவளத் துவள நடந்து போய்த் தம் குதிரைமீது ஏறினர்.

அரண்மனை முகப்பு வாயிலுக்கு நேர் எதிரே தலை விரித்து இருளில் புதைந்து நின்ற பெரியதோர் ஆலமரத்தின் பக்கமிருந்து ஒற்றைக் கோட்டான் ஒன்று விட்டுக் கூவும் ஒலி கேட்டது. அத்துடன் எங்கோ ஓர் ஆந்தை அலறும் ஒலியும் பயங்கரமாக எழுந்தது.

முகத்தைச் சுளித்து மிரண்டு நிமிர்ந்த விஸ்லேவி, சேணக் கயிற்றால் தம் புரவியின் பிடரியைச் சாடினர். என்று மில்லாத வழக்கமாக அந்தக் குதிரை முரண்டு பண்ணிப் பின்னால் திரும்பிக் கனைத்துச் சுழன்றது. பிறகு முரட்டுத் திமிருடன் முன்னால் பார்த்துத் தலை கொட்டி ஓட ஆரம்பித்தது.

இவ்வளவையும் பார்த்துக் கொண்டு அரண்மனை சித்திரகூடத்தில் அங்குமிங்கு நடைபோட்டு உலாவிக் கொண்டிருந்த விஜயாதித்தன், ஏதோ நினைவு வரப் பெற்றவன்போல் கையொலி எழுப்பினன். உடனே இரு காவல் வீரர்கள் ஓடி வந்து நின்றனர்.

''நேற்றைக்கு முன் தினம் பழையாறைச் சோழனுடன் ஆலம்பாக்கத்துக்கு நான் போனபோது அங்கே ஓர் இடையப் பெண்ணைப் பார்த்து அவளை இழுத்துக் கொண்டு வரும்படி உங்களுக்குக் கட்டளையிட்டேன் அல்லவா? அதை இன்று நீங்கள் உடனே நிறைவேற்ற வேண்டும்; ஓடுங்கள்!'' என்று உறுமினன் விஜயாதித்தன்.

உத்தரவெடுத்து நின்ற அவ்விரு வீரர்களும் உடனே ஆலம்பாக்கத்தை நோக்கி விரைந்தனர்.

உல்லாசமாகச் சிறிது நேரம் உலாவிக் கொண்டிருந்த விஜயாதித்தன் மோகாந்தகாரமான சிரிப்புடன் திரும்பி மது பானக் கிண்ணங்கள் இருந்த இடத்தை நோக்கி நடந்தான்.

''வணக்கம், இளவரசே!''

மமதைச் செருக்குடன் சாவதான மாகத் திரும்பிய விஜயாதித்தன் ஏதோ பேயைக் கண்டு விட்டவன்போல் பதறித் துடித்துப் பின்னால் நகர்ந்தான். அளவுக்கு மீறிய பயத்தால் அவனுடல் குப்பென வியர்த்துக் கொட்டியது. கண்கள் நிலைகொள்ளாமல் படபடத்துச் சுழல, தன் எதிரே நின்ற உருவத்தை உற்று நோக்கினன்.

சந்தேகமில்லை; பழையாறைச் சோழர் தான் அங்கு சோகமே உருவாக நின்று கொண்டிருந்தார்!

### அத்தியாயம் நாற்பது

# அநந்தமதியின் தியாகம்

''மதிப்புக்குரிய சளுக்கிய இளவரசே! என்னை மன்னியுங்கள்! உங்களிடம் ஒரு மாபெரும் வரத்தை மன்றாடிக் கேட்கவே இங்கு வந்திருக்கிறேன்!''

—பழையாறைச் சோழரா இப்படிப் பேசினர்? ஆமாம்; நிராயுதபாணியாக வந்து நின்றிருந்த அவர்தான் இவ்வாறு கண் கலங்கிக் கனைத்த குரலில் பரிதாபமாகக் குழறினர்.

விஜயாதித்தனுக்கு ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை. பல்வேறு பயங்கரச் சந்தேகங்கள் மூளையை உரசிச் சூடாக்க, அவரை விழியசைக்காமல் வெறித்துப் பார்த்தான் அவன்.

இரண்டு கைகளையும் கோத்து முன்னால் தொங்க விட்டுக்கொண்டு ஓர் அடிமையைப்போல் தலைகுனிந்து நின்ற பழையாறைச் சோழர் துக்கம் தொண்டையை அடைக்கத் தணிந்த தொனியில் மேலும் சொன்னார்: ''இளவரசே! உங்கள் முன்னிலையில் நின்றுபேசக்கூடிய தகுதியை நான் இழந்து விட்டாலும், இரண்டொரு வார்த்தைகள் மட்டும் பேச எனக்கு அனுமதியளியுங்கள். அதாவது, என்னைப் பற்றிய உண்மைகளையும் நான் எத்தனை பயங்கரப் பேர்வழி என்ற விவரத்தையும் வில்வேலியின் வாயிலாக நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவை யெல்லாம் பொய் என்று மறுத்துப் பேச எனக்குத் துணிவு இல்லை; அப்படிப் பேச வேண்டிய அவசியமும் இனி இல்லை. ஆனால் நேற்றைய அந்த நிலையிலிருந்து இன்று நான் அடியோடு மாறியிருக்கிறேன். இதை நீங்கள் நம்பினாலும் நம்பா மற்போனாலும் இதுதான் உண்மை.''

விஜயாதித்தன் தன்னைச் சமாளித்துக் கொண்டு எச்சரிக்கையானான்.

நிஜமாகவே கண் கலங்கி நின்ற பழையாறைச் சோழர் அடைத்த குரலில் மேலும் சொன்னார்: ''ஆமாம், இளவரசே! உண்மையில் ஒரு புது மனிதனாக மாறித்தான் இங்கு வந்திருக்கிறேன். இப்போது நான் பழையாறைச் சிற்றரசன் அல்ல; பல்லவ மன்னனின் நண்பனுமல்ல; சளுக்கிய அரசரின் எதிரியுமல்ல; இவை யெல்லாவற்றையும் 'பிள்ளைப் பாசம்' என்ற ஒரு பெரும் சக்திக்குப் பலி கொடுத்துவிட்டு, அந்தப் பிள்ளைப் பாசத்தினாலேயே பைத்திய நிலைக்கு ஆளாகிவிட்ட ஓர் எளிய தந்தையாக இங்கு வந்து நிற்கிறேன்..''

விஜயாதித்தனுக்கு ஒரே குழப்பமாகி விட்டது.

துயரம் தாளமாட்டாமல் விம்மிய பழையாறைச் சோழர் ''இளவரசே! தங்களுக்கும், தங்கள் தந்தைக்கும், தளபதி வில்வேலிக்கும் நான் இழைத்த தீங்குகளுக்கு என்னை வெட்டுங்கள், குத்துங்கள், கழுவிலேற்றிக் கிழித்தெறியுங்கள்! ஆனால், என் அருமை மகளை மட்டும் ஒன்றும் செய்யாதீர்கள்! அவளை எவ்வித அவமானத்துக்கும் உள்ளாக்காதீர்கள்!'' என்று கெஞ்சிக் கூறிக் கொண்டே சித்தப்பிரமை பிடித்தவர் போல் அங்குமிங்குமாக அலைமோதினார். பிறகு உரத்த குரலில், ''இளங்கோப்பிச்சி! என் ஆருயிர்க் கண்ணே! நீ எங்கே இருக்கிறாய்?'' என்று பரிதாபமாக ஓலமிட்டவாறு அந்தச் சித்திர கூடத்தைச் சார்ந்த மற்றோர் அறையை நோக்கிப் பாய்ந்தோடினார்.

வெடவெடத்து நடுங்கி நின்ற விஜயாதித்தன் சடாரெனத் தாவி, பழையாறைச் சோழர் புகுந்த அறையின் கதவைப் படீரென்று இழுத்துச் சாத்தினான்.

''கோஸ் கிலோ என்ன விலை?''
''எட்டணாவுங்க!''
''எதிர்த்த கடைக்காரர் ஆறணாவுக்குக் கொடுக்கிறாரே!''
''அவர் கிட்டயே போய் வாங்கிக் கொள்ளுங்களேன்!''
''இப்போ அவர்கிட்டக் கோஸ் இல்லையே!''
''என்கிட்டயும் இல்லாத போது வந்து கேளுங்க. கிலோ இரண்டணாவுக்குத் தரேன்!''



அதே சமயம், ஆலம்பாக்கத்துக்குப் புறப்பட்டுப் போயிருந்த சளுக்கியக் காவல் வீரர்கள் இருவரும், ''இளவரசே, ஆபத்து! ஆபத்து!'' என அலறியவாறு ஓடி வந்தனர்.

திகைத்துத் திரும்பிய விஜயாதித்தன் அவர்களைத் திரு திரு வெனப் பார்த்து விழித்தான்.

''அதோ பாருங்கள், இளவரசே! ஆயிரக் கணக்கான பல்லவப் போர் வீரர்கள் தீவட்டிகளுடன் இந்த அரண்மனை நோக்கி வருவதைப் பாருங்கள்.''

குலை நடுக்கம் கொண்டுவிட்ட விஜயாதித்தனும் தொலை தூரத்துக்கு அப்பால் தன் பார்வையைச் செலுத்தி, அந்தப் பயங்கரக் காட்சியைப் பார்த்தான். நள்ளிரவின் காரிருளைக் கிழித்துக் கொண்டு ஆயிரக் கணக்கான தீப் பந்தங்கள் செவ்வொளி பரப்பித் திரண்டு வருவது தெரிந்தது!

''வீரர்களே, ஓடி விடுங்கள்! இந்த அரண்மனையில் உள்ள அவ்வளவு பேர்களும் உடனே வெளியேறி விடுங்கள்!'' என்று உரக்கக் கூவினான் விஜயாதித்தன்.

அவன் கட்டளையிடுவதற்கு முன்னதாகவே அங்கிருந்த சளுக்கியக் காவல் வீரர்கள் அவ்வளவு பேரும் தலைவிரி கோலமாக ஓடத் தொடங்கினர். சற்றைக்கெல்லாம் அந்த மாபெரும் அரண்மனை வெறிச்சென்று ஆகிவிட்டது.

திக்பிரமை பிடித்தவனாய்த் திகைத்து நின்றான் விஜயாதித்தன். அவனுக்கு எங்கே, எப்படி ஓடி ஒளிவதென்றே புரியவில்லை. இந்தக் குழப்பத்திலும் அவன் மனத்திலே ஒரு பயங்கர வஞ்சம் தலை தூக்கியது. ''இதெல்லாம் அந்தப் பழையாறைச் சோழனின் வேலையாகத்

ஹார்லிக்ஸ் செய்யும் நன்மைக்கு ஒரு உதாரணம்:

"என் முழுத்திறமையையும் உபயோகித்து வேலை செய்து வருகிறேன் சார்!..."

"இவ்வளவு தான் உன் முழுத்திறமை என்றால் போதவே போதாது!"



உத்தியோக உயர்வுடன் வேறு ஊருக்கு சமீபத்தில் மாற்றம் கிடைக்கும் என்று எதிர்பார்த்திருந்த எனக்கு எத்தகைய ஏமாற்றம்! ஆபீஸர் இப்படிச் சொல்லிவிட்டாரே! என் மனைவியிடம் சொன்னேன். அவள் சொன்னாள், "பிரமோஷன் விஷயம் கிடக்கட்டும், எனக்கு உங்கள் உடம்பைப் பற்றித்தான் கவலையாயிருக்கிறது. கொஞ்ச நாட்களாக நீங்கள் களைப்பும் சோர்வுமாய்க் காணப்படுகிறீர்கள். எனக்காகவாவது ஆபீஸ் டாக்டரைப் பார்க்கக்கூடாதா?"



அவள் சொன்னதும் சரியென்றுதான் பட்டது. மறு நாளே ஆபீஸ் டாக்டரிடம் சென்றேன். பரிசோதித்துவிட்டு டாக்டர் சொன்னார்: "மனக் கவலையும் நீண்டநேர உழைப்பும் உங்கள் சக்தியை உறிஞ்சி விட்டன. உங்களுக்குத் தேவையான அதிக சக்தியைப் பெற தினமும் ஹார்லிக்ஸ் பருகுங்கள்"



பரிசுத்தமான பாலுடன் கோதுமை மாவு, மால்ட்ட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்தும் சேர்ந்த ஹார்லிக்ஸ் விரைவிலேயே எனக்கு அதிகரித்த சக்தியை அளித்தது. நான் விரும்பிய உத்தியோக உயர்வையும் இடமாற்றத்தையும் சீக்கிரத்திலேயே பெற்றேன். எல்லாம் ஹார்லிக்ஸ் அளித்த நற்பலன்கள் தாம் என்று சொல்லவும் வேண்டுமா!




# ஹார்லிக்ஸ் அதிக சக்தி யளிக்கிறது!

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப் சலவையின் எல்லைமீறிய வல்லமை. கரைகடந்த நுரைவளம். கேட்பானேன். சிற்றுடை, சேலை முதல் சிறுவரின் ஆடை வரை... எதற்கும் நிகரிலாத வெண்மை, சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே துணிவெளுக்க ஒரே வழி: கைகண்ட ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

SU. 36-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு